# சங்க இலக்கியத்தில் பறவைகள்

பாரதியார் பல்கலைக்கழக முனைவர் (Ph.D) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**சீ.சிந்துஜா**

**(பதிவு எண்:BU/133201006)**

**நெறியாளர்**

**முனைவர் தே.ஞானசேகரன்**






**தமிழ்த்துறை**

**பாரதியார் பல்கலைக்கழகம்**

**கோயம்புத்தூர் – 641046**


**டிசம்பர் 2016**

## நெறியாளர் சான்றிதழ்

இடம் : கோயம்புத்தூர்

நாள் : .12.2016

முனைவர் **தே. ஞானசேகரன்**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் - 641 046.

**“சங்க இலக்கியத்தில் பறவைகள்”** என்னும் பொருள் குறித்தமைந்த இவ்வாய்வு, பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில், 2013– 2016 ஆம் கல்வியாண்டில் எனது மேற்பார்வையில் முழு நேர ஆய்வாளராகப் பயின்ற செல்வி. **சீ. சிந்துஜா** அவர்களால் முனைவர் பட்டத்திற்கெனத் தன்னிச்சையாகச் செய்யப்பட்டது என்றும், இதற்குமுன் இவ்வாய்வு வேறு எந்தப் பல்கலைக்கழகத்திலும் எவ்வகைப் பட்டத்திற்கும் பயன்படுத்திக் கொள்ளப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**ஒப்புதல் கையொப்பம்** **நெறியாளர்**

**(தே. ஞானசேகரன்)**

**முனைவர் வ.ஜெயா**
தமிழ்த்துறைத் தலைவர்,
தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் – 641 046.

## ஆய்வாளர் உறுதிமொழி

இடம் : கோயம்புத்தூர்

நாள் : .12.2016

**சீ. சிந்துஜா**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர் - 641 046.

**“சங்க இலக்கியத்தில் பறவைகள்”** என்னும் பொருள் குறித்து 2013-2016 ஆம் கல்வியாண்டில் முனைவர் பட்டத்திற்கென அளிக்கப்படும் இவ்வாய்வேடு, தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் **தே. ஞானசேகரன்** அவர்களை நெறியாளராகக் கொண்டு எனது சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்கு முன் இப்பொருள் குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திலும், எவ்வகை ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**உறுதிக் கையொப்பம்**

**ஆய்வாளர்**
**(சீ.சிந்துஜா)**

**முனைவர் தே. ஞானசேகரன்**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர் - 641 046.

# CERTIFICATE OF GENUINESS OF THE PUBLICATION

எனது நெறியாளுகையின் கீழ் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்ட **செல்வி சீ.சிந்துஜா** தனது மூன்று ஆய்வுக் கட்டுரைகளைக் கீழ்க்காணும் கருத்தரங்க நூல்களில் சமர்ப்பித்துள்ளார். அவை,

1. **'பறவைகளின் வாழிட அமைப்பு'** என்ற தலைப்பில் **'தமிழ் மற்றும் ஆங்கில எழுத்தாளர்கள் பார்வையில் இயற்கை'** என்னும் பன்னாட்டுக் கருத்தரங்க ஆய்வுக் கோவை, ISBN வெளியீட்டு எண்: 81-8446-722-2, பக்க எண். 443 - 448 விஜயா பதிப்பகம்.

2. **'சங்க இலக்கியத்தில் வலசைப் புள்ளினம்'** என்ற தலைப்பில் **'தமிழர் வாழ்வியல் மரபும் மாற்றமும்'** என்னும் பன்னாட்டுக் கருத்தரங்க ஆய்வுக் கோவை, ISBN வெளியீட்டு எண்:978-93-81006-06-1, பக்க எண். 223-227, செம்மூதாய்.

3. **'மகளிர் கூற்றில் பறவைகள்'** என்ற தலைப்பில் **'தமிழர் கலைகள்',** என்னும் பன்னாட்டுக் கருத்தரங்க ஆய்வுக் கோவை, ISBN வெளியீட்டு எண்: 978-93-81006-10-8, பக்க எண். 182-186, செம்மூதாய்.

போன்ற கட்டுரைகள் அனைத்தும் அவரது ஆய்வு தொடர்பானவை எனச் சான்றளிக்கப்படுகின்றது.

**துறைத்தலைவர்** **நெறியாளர்**

## நன்றியுரை

பாரதியார் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில் பயில இடமளித்த பல்கலைக் கழகத்திற்கும் தமிழியல் துறைக்கும் முதற்கண் எனது நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்.

இவ்வாய்வேடு சிறக்க எனது ஆய்வுச்சிந்தணையை ஊக்குவித்து, ஆய்வு குறித்த விசாலமான பார்வையைக் கற்றுக் கொடுத்ததோடல்லாமல், ஆய்வுப் பணிகளில் தீவிர ஈடுபாடு கொண்டு முனைப்போடு செயலாற்ற ஆக்கமும், ஊக்கமும் அளித்து இவ்வாய்வேடு செம்மையுற நெறியாளராக இருந்து வழிநடத்திய எனது ஆசான் கலைமாமணி, கலைப்புல முதன்மையர் பேராசிரியர் முனைவர் **தே.ஞானசேகரன்** ஐயா அவர்களுக்கு என்றென்றும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

பல்கலைக் கழகத்தில் சேர்ந்த நாள் முதல் இன்று வரை கல்விப் பணியில் எங்களை வழிநடத்தி வந்த பேராசிரியர் மற்றும் முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **சி.மா.ரவிச்சந்திரன்** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக் காலங்களில் எனக்குப் பல்வேறு கருத்துக்களை வழங்கி ஊக்கமளித்த பேராசிரியர் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **வ.ஜெயா** அம்மா அவர்களுக்கும், முனைவர் **சி.சித்ரா** அம்மா அவர்களுக்கும், முனைவர் **ஓ.பாலகிருஷ்ணன்** அவர்களுக்கும், முனைவர் **ச.தங்கமணி** அவர்களுக்கும் நன்றி தெரிவிப்பதில் பெருமிதம் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையானப் புத்தகங்கள் வழங்கி, ஆய்வு சிறக்கத் தேவையான உதவிகள் நல்கிய எனது கல்வியியல் பேராசிரியர் முனைவர் இரா.ஜானகி அம்மா அவர்களுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு சிறக்க உதவிய சக ஆய்வு நண்பர்களுக்கும், முனைவர் பட்ட ஆய்வாளர்களான ச.பிரேமலதா, ப.உமாமகேஸ்வரி, ர.ஜெகன், விக்ரம் மற்றும் நித்யா க.சாலினி, க.சித்ரா, ந.அம்பிகா, மா.பிரகாஷ், ரஞ்சித் ஆகியோருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்காலத்தில் என்னோடு விடுதியில் இருந்து துவண்ட நேரங்களில் தோள் கொடுத்து ஆய்விற்கு ஊக்கமளித்த அக்கா பெ.சாரோன், செ.விஜி, மா.சிவரஞ்ஜனி தங்கைகள் சா.சரண்யா, சு.ரம்யா, அபினேஸ்வரி நங்கைகள் ரா.ஜாய்ஸ் நிர்மலா, மு.சுவிந்ரா, வெ.பிரீத்தி லதா, ரா.மேபிள்லிசி, ப.உமாமகேஸ்வரி ஆகியோருக்கு இதயம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுகாலத்தில் ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன நூலகம், செம்மொழி ஆராய்ச்சி நிறுவன நூலகம், சென்னைப் பல்கலைக்கழக நூலகம், ரோஜா முத்தைய்யா ஆராய்ச்சி மைய நூலகம், உ.வே.சா நூலகம் மற்றும் எமது பல்கலைக்கழக நூலகத்திற்கும், அலுவலர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டை சிறந்த முறையில் வடிவமைப்பு செய்து கொடுத்த அச்சகத்தாருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றிகளுடன்

***சீ. சிந்துஜா***




கருவறை முதலாகக்

கண்ணெனக் காக்கும்

அன்னைக்கு…..

வியர்வையை விதையாக்கி

என்னை விருட்சமாக்கும்

தந்தைக்கு…..

எத்தருணத்திலும்

சிந்தை மகிழச்செய்யும்

உன்னத உடன்பிறப்பிற்கு…..

இன்பத்தோடு துன்பங்களிலும்

துவளவிடாமல் துணைநிற்கும்

தோழமைக்கு…..

கல்வி வாழ்க்கைக்கு

வழிகாட்டும்

ஆசானுக்கு….

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| உரை.ஆ. | - | உரை ஆசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| குறள், | - | திருக்குறள் |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| தொல்.பொ. | - | தொல்காப்பியம், பொருளதிகாரம் |
| நம்பிஅகப். | - | நம்பி அகப் பொருள் |
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| பக். | - | பக்கம் |
| பக்க. | - | பக்கங்கள் |
| பதிற்றுப். | - | பதிற்றுப்பத்து |
| பரிபா. | - | பரிபாடல் |
| பா. | - | பாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| மேலது | - | மேலே குறிப்பிட்ட நூல் |
| வ.எண் | - | வரிசை எண் |

## பொருளடக்கம்

## முன்னுரை

தமிழரின் இலக்கியங்கள், இலக்கணங்கள் என்னும் பட்டியலில் சங்க இலக்கியங்கள் ஒரு சிறப்பு வாய்ந்த இடத்தைப் பெற்றுள்ளன. இத்தகைய இலக்கியத்தில் சங்ககால மக்களின் வாழ்வினை அகம், புறம் என்று சிறப்பான முறையில் பகுத்து இலக்கியம் கண்ட பெருமை சங்கப் புலவர்களுக்கு உண்டு. அவ்வாறு கலை நேர்த்தியும், கற்பனை அழகும் கொண்டு விளங்கும் பாடல்களில் தாங்கள் வெளிப்படுத்தியிருக்கும் உணர்விற்கு வலுவும், அழுத்தமும் கொடுக்க வேண்டுமென்பதற்காகத் தம்மைச் சுற்றிக் காணப்படும் இயற்கைப் பொருட்களையும் அவற்றுடன் இணைந்திருக்கும் உயிரினங்களையும் மிக அழகான முறையில் பயன்படுத்தியுள்ளனர். இவ்வாறு அவர்கள் பயன்படுத்தியிருக்கும் அஃறிணைப் பொருட்கள் தாம் எந்தக் கருத்தை உணர்த்த தோன்றியிருக்கின்றோமோ அதன் பின்புலமாக அமைந்து பாடலின் அழகையும், உயிர்ப்பையும் மிகைப்படுத்துவதாக உள்ளன. அஃறிணை உயிர்களில் மரம், செடி, கொடி போன்ற நிலை உயிரியாக இருந்தாலும் மனிதன், விலங்குகள் போன்ற இயங்கும் உயிரியாக இருந்தாலும் அவற்றிடம் காணலாகும் தனித்தன்மையை உணர்ந்து போற்றுவதோடு சங்க மாந்தர்களின் அக வாழ்க்கையினைப் போன்று உயிரினங்களிடமும் அக உணர்வு உண்டு என்பதைச் சங்கப் புலவர்கள் தங்களின் பாடல்களில் எடுத்துக்காட்டியுள்ளனர்.

மனிதர்களைப் போலவே உயிரினங்களுக்கும் காதல் உணர்வு உண்டு என்பதை உள்ளுறை, இறைச்சி என்ற உத்திகள் பயன்படுத்தப்பட்டுள்ள சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது. மேலும் உயிரினங்கள் ஒன்றையொன்று சார்ந்து வாழ்வது என்பது உயிர் இயற்கையாகும். இதன் அடிப்படையில் மனிதவாழ்வோடும், சூழலோடும் ஒருங்கிணைந்த உயிரினங்கள் பற்பலவாகும். அவற்றுள் பாடிப் பறக்கின்ற பறவைகள் மனித வாழ்வோடு பங்கு பெற்ற இயல்பினைப் பல்வேறு சான்றுகளால் உணரலாம். பறவைகள் என்பன எதனையோ தின்று எங்கெங்கோ திரிந்து ஓரிடத்தில் கூட்டை அடைவதான நிலையோடு விட்டுபோவது அல்ல. அப்பறவைகள் மனித வாழ்க்கையோடும், உணர்வோடும் நெருங்கியத் தொடர்புடையதான உண்மைகளைச் சங்க இலக்கியங்கள் உருவகப்படுத்தியுள்ளன. அவைகளை உணரும் நோக்கில் பறவைகளின் இயல்பு, வண்ணம் ,வடிவம், தனிப்பட்ட சிறப்புக் கூறுகள் மற்றும் சமூகப் பயன்பாடுகள், இயற்கையோடு இயைந்த ஒத்திசைவு ஆகியவற்றை ஆழமானதும், ஆர்வமானதும், அழகியலானதுமான

உயிரினங்களைப் பற்றிய ஆய்வுக்களமானது விரிவடைந்து கொண்டே வருகின்றது. இதன் அடிப்படையிலேயே அறிவியல் அணுகுமுறையில் சங்க இலக்கியங்களில் உள்ள பறவைகளைப் பற்றி விளக்குவதாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

"**சங்க இலக்கியத்தில் பறவைகள்**" என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வுநோக்கம்**

சங்க இலக்கியங்களை மையமிட்ட எத்தகைய ஆய்வும் சங்க இலக்கியமீட்டுருவாக்கச் சிந்தனையை வளர்ப்பதற்குத் துணை செய்வனவே. அவ்விதத்தில் சங்க இலக்கியத்தில் பறவைகளைப் பற்றிய ஆய்வானது விரிந்த கண்ணோட்டத்தைக் கொடுப்பதோடு, அப்பறவைகள் பற்றிய அறிவியல் காரணங்களை ஆராய்கின்ற ஆர்வத்தினைத் தூண்டுவதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படுக்கின்ற அ.்.றிணைக் காரணிகளை உணர்த்தும் சொல்லாடல்களில் சங்க கால மக்களின் வாழ்வியலோடு இரண்டறக் கலந்திருக்கும் பறவைகள் பற்றியப் பதிவுகளைக் கண்டறிந்து சொல்வது இவ்வாய்வின் கருதுகோள் ஆகும்.

**ஆய்வு எல்லை**

சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு நூல்களில் காணப்படும் பறவைகளைப் பற்றிய செய்திகள் ஆய்வு எல்லையாக அமைகிறது.

**ஆய்வு மூலங்கள்**

ஆய்வு மூலம் எனப்படுகின்ற சான்றாதாரங்கள் இருவகையாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை **முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள்** என்பன.

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்களாகும்.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

சங்க இலக்கியங்கள் குறித்த ஆய்வு நூல்களும், ஆய்வுக்கட்டுரைகளும், பறவைகளைப் பற்றிய நூல்களும், நாளிதழ் மற்றும் வார, மாத இதழ்கள், முனைவர் பட்ட ஆய்வேடுகள், கருத்தரங்க ஆய்வுக் கோவைகள், இணையதளச் செய்திகள் போன்ற தரவுகளும் துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

- சாமி,பி.எல். - சங்க இலக்கியத்தில் புள்ளினவிளக்கம்
- ரத்னம்,க. - தமிழ் நாட்டுப் பறவைகள்
- ரத்னம்,க. - தென்னிந்தியப் பறவைகள்

போன்ற ஆய்வாளர்களது ஆய்வு நூல்கள் இவ்வாய்வு தொடர்பான ஆய்வு சிந்தனைகளுக்கு உந்துதலாக அமையும் என்பது குறிப்பிடத்தக்கது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வுக்குரிய அணுகுமுறைகளாக பின்வரும் ஐந்து அணுகுமுறைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவை வருமாறு,

- **விளக்கமுறை அணுகுமுறை**
- **வரலாற்றுமுறை அணுகுமுறை**
- **பகுப்புமுறை அணுகுமுறை**
- **ஒப்பீட்டுமுறை அணுகுமுறை**
- **அறிவியல்முறை அணுகுமுறை**

**ஆய்வுப் பகுப்பு**

**“சங்க இலக்கியத்தில் பறவைகள்”** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன . அவை வருமாறு,

**இயல் 1 : உயிரினங்களில் பறவைகளின் இடம்**

**இயல் 2 : திணை அடிப்படையில் பறவைகள்**

**இயல் 3 : பறவைகளின் பழக்கவழக்கங்களும் - பண்புகளும்**

**இயல் 4 : மனித வாழ்க்கையோடு பறவைகளுக்குள்ள தொடர்பு**

**இயல் 5 : பறவைகளின் வாழிட அமைப்பும் - பாதுகாப்பும்**

**முன்னுரை**

இவ்வாய்வேட்டின் முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வுப் பகுப்பு, பின்னிணைப்புகள் போன்றன விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 1 : உயிரினங்களில் பறவைகளின் இடம்**

இவ்வியலில் பறவைகளின் வகைப்பாட்டுப் பிரிவுகள் - தொல்காப்பியரின் மரபியல் விளக்கம் - அறிவியலில் டார்வினின் பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு - உயிரினத்தின் தோற்றக் காலம் - பறவையியல் ஆய்வு வரலாறு - பறவையியல் ஆய்வு முறைகள் - பல்வேறுபட்ட சிற்றினங்களிடையிலுள்ள உறவுகள் - உயிரியல் மற்றும் உயிர்ச் சங்கிலியில் பறவைகளின் இடம் - சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற பறவைகளின் வகைகள்- சங்க இலக்கியம் தவிர்த்து பிற இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளப் பறவைகள் - பறவைகளைப் பற்றியப் புராணச் செய்திகள் போன்றவை மிக விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

**இயல் 2 : திணை அடிப்படையில் பறவைகள்**

இவ்வியலில் ஐவகை நிலங்களுக்குரியப் பறவைகளின் வகைகள் - குறிஞ்சித் திணைப் பறவைகள் - முல்லைத்திணைப் பறவைகள் - மருதத்திணைப் பறவைகள் - நெய்தல் திணைப் பறவைகள் - பாலைத்திணைப் பறவைகள் - பறவைகளை வைத்து புலவர்கள் படைத்துள்ள உவமைகள் - உள்ளுறை, இறைச்சி பயன்பாடு - ஆரம்பக் காலந்தொட்டு பறவைகளின் செயல்பாடுகளும் மக்களின் அணுகுமுறைகளும் - பறவைகளின் மூலம் உணர்த்தப்படும் வாழ்க்கைத் தத்துவம், பறவைகளிடமிருந்து மக்கள் பெற்றிருக்கும் படிப்பினைகளும் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 3 : பறவைகளின் பழக்கவழக்கங்களும் -பண்புகளும்**

இவ்வியலில் நிலங்களுக்கு ஏற்ப பறவைகளின் உடல் தகவமைப்பு - பறவைகளின் பழக்கவழக்கங்கள் - உணவு உண்ணும் முறையில் பறவைகளிடம் காணப்படும் வேறுபாடுகள் - மனிதர்களைப் போன்று பறவைகளிடம் உள்ள சிறப்புப் பண்புகள் - தற்போதையப் பறவைகளுக்கும், சங்க இலக்கியப் பறவைகளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் - வலசை போதல் பற்றி இலக்கியங்களில் காணப்படும் செய்திகள் - பறவைகள் வலசை போகும் தன்மை மற்றும் தூரம் - பறவைகளின் வாழ்க்கை அமைப்பு மற்றும் ஒற்றுமைகள் அறிவியல் நெறியுடன் ஆராயப்பட்டுள்ளன.

**இயல் 4 : மனித வாழ்க்கையோடு பறவைகளுக்குள்ள தொடர்பு**

இவ்வியலில் பறவைகளால் ஏற்படும் சமூகப்பயன் - மருத்துவப் பயன் - பொருளாதாரப்பயன் - பொழுதுபோக்கு - பறவைகள் பந்தயப் பொருட்களாகப் பயன்படுத்துதல் - பந்தயப் பொருட்களாகப் பயன்படும் பறவைகள் - மக்களிடம் காணப்படும் பறவைகள் பற்றிய நம்பிக்கைகள் - ஜோதிடம் பார்த்தல் - சகுனம் பார்த்தல் - இயற்கையை உணரும் திறம் - வருமுன் காப்பு நடவடிக்கை - வாழ்க்கை ஒழுங்கமைப்பு - விதிக்கப்படும் கட்டுப்பாடுகளை மீறாமை போன்றன சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 5 : பறவைகளின் வாழிட அமைப்பும் - பாதுகாப்பும்**

இவ்வியலில் சங்க இலக்கியப் பறவைகளின் வாழிடத்திலுள்ள தாவரஅமைப்பு - பறவைகளின் வாழிடங்களில் மனித இனத் தலையீடு - பறவைகளுக்கு ஏற்படும் பாதிப்புகள் - பாதிப்புகளைக் களைவதற்கான வழி முறைகள் - பறவைகளைப் பாதுகாத்தல் குறித்த மனித நேய முயற்சிகள் - சங்க காலத்தில் சரணாலயங்களாக இருந்த பகுதிகள் - சரணாலயங்களின் பயன்களும் பணிகளும் - குளோனிங் (படியாக்கம்) முறையால் ஏற்படும் நன்மைகள் - பறவைகளைக் காக்க மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

**முடிவுரை**

மேற்கூறப்பட்ட ஐந்து இயல்களின் வாயிலாகப் பெறப்பட்டத் தொகுப்புரைகளை அடிப்படையாகக் கொண்டு ஆய்வின் முடிவுகள் இப்பகுதியில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளது.

**துணைநூற்பட்டியல்**

இவ்வாய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் பற்றிய விவரங்கள் ஆய்வேட்டின் இறுதியில் அகரவரிசையில் இடம் பெற்றுள்ளன. மேலும் ஆய்வுக்கு பயன்பட்ட அகராதிகள், ஆய்வேடுகள், கட்டுரைகள், நாளிதழ்கள், மாத இதழ்கள் போன்றவற்றின் விவரங்கள் தொகுத்து தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு**

சங்க இலக்கியத்தில் காணப்படும் பறவைகள் தொடர்பானச் செய்திகள் பாடல்களின் எண்ணிக்கை அடிப்படையில் அட்டவணை மற்றும் இலக்கியங்களில் இடம்பெற்ற பறவைகளின் பெயர் பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து பறவைகள் தொடர்பானப் படங்களும் இப்பின்னிணைப்பில் இடம்பெற்றுள்ளன.

## இயல் - ஒன்று

## உயிரினங்களில் பறவைகளின் இடம்

ஆதிமனிதனின் வாழ்வியலைத் தெளிவாகப் பதிவு செய்துள்ளவை சங்க இலக்கியங்களாகும். இவ்விலக்கியத்தில் மாந்தர்களுடன், பறவைகளும் ஒன்றிணைந்து பயணப்பட்டுள்ளது பற்றிய குறிப்புகள் நிறைய பதிவாகியுள்ளன. இயற்கைச் செய்திகள் மிகுந்து காணப்படும் சங்கப்பாடல்களில் சாதாரணப் பறவைகளிலிருந்து அரிய பல வகைப் பறவைகள் பற்றிய செய்திகளும் இடம் பெற்றுள்ளன. சங்கப்புலவர்கள் உயிரினங்களில் அனைவரும் விரும்பக்கூடிய பறவைகளைக் கூர்ந்து கவனித்து அச்செய்திகளை நமக்கு பகிர்ந்தளித்திருக்கின்றனர். இவ்வாறே பண்டைய மனிதன் சங்க காலம் தொடங்கி சங்க மருவிய காலம் முதலாக இக்காலம் வரையிலானப் புலவர்களும், கவிஞர்களும் தத்தமது இலக்கியங்களில் எவ்வாறு பறவைகளை உட்புகுத்தி உயிரினப் பதிவினைக் கையாண்டுள்ளனர் என்பதை அறிமுகம் செய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

### தொல்காப்பியரின் உயிரின வகைப்பாடு

சங்க இலக்கியத்தில் பகுத்துக் கூறப்பட்டுள்ள முதல், கரு, உரிப்பொருட்கள் பற்றியச் செய்திகளை நுணுகிப் பார்த்தால் உரிப்பொருள் பாடலின் உணர்வு நிலையாகவும், முதல் மற்றும் கருப்பொருட்கள் சூழலியற் காரணியாகவும் அமைவதைக் காணலாம். அவற்றில் முதற்பொருள் மட்டும் ‘சூழலியல்’ கூறும் உயிர்காரணியாக அமைவதை,

> **“முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்**
> **இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே” (தொல். அகம் - 4)**

என்ற நூற்பா வழி முதற்பொருளாகிய நிலமும் காலமும் கொண்டு இயங்கும் இயற்கை மற்றும் செயற்கைப் பொருட்கள் அனைத்தும் கருப்பொருட்களாகும். கருப்பொருளென்பது நிலம், இந்நிலத்தில் கருக்கொண்டெழுந்த மரங்கள், பறவைகள், மனிதர்கள், விலங்குகள், இயற்கைப் பொருட்கள், காலநிலைகள் போன்றவற்றைக் குறிப்பதாகும் என்பதை,

> **“தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
> **செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
> **அவ்வகை பிறவும் கரு என மொழிப” (தொல்.பொ.அகம் -964)**

எனத் தொல்காப்பியர் தெளிவாக விளக்கியுள்ளார். கி.மு 2500 நூற்றாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த தமிழ் மாந்தர் தம் மொழிக்கும், பண்பாட்டிற்கும் இலக்கணம் கண்ட தொல்காப்பியர் மண்ணில் உயிர்கள் தோன்றிய வரலாறு பற்றியும் சிந்தித்துள்ளார். உயிரினங்களை அவற்றின் உருவ அமைப்பைக் கொண்டு வகைப்படுத்தாமலும், அவற்றின் இயக்கப் போக்கை வைத்து வகைப்படுத்தாமலும், அவற்றின் செயல்பாடுகளுக்குக் கருவியாக இருக்கும் அறிவையும், உணர்வையும் மையமாக வைத்து புவியில் வாழும் உயிரினங்களை ஓரறிவு உயிர் முதலாக ஆறறிவுயிர் வரை பாகுபடுத்தியுள்ளதை,

**"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே**
**இரண்டறி வதுவே அதனோடு நாவே**
**மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே**
**நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே**
**ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே**
**ஆறறி வதுவே அவற்றொடு மனனே**
**நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே" (தொல்.பொ.ம.571)**

என்ற நூற்பா வழி அறியலாம். மேலும் நுட்பமாக உணர்ந்தோர் இவற்றை நெறிப்படுத்தி வகைப்படுத்தி வைத்துள்ளவையாக,

| | |
|---|---|
| **ஓரறிவுயிர்** | **- தொடு உணர்வு (மெய் உணர்வு)** |
| **இரண்டறிவு** | **- மெய், நா** |
| **மூவறிவு** | **- மெய், நா, மூக்கு** |
| **நான்கு அறிவு** | **- மெய், நா, மூக்கு, கண்** |
| **ஐந்தறிவு** | **- மெய்,நா,மூக்கு, கண், செவி** |
| **ஆறறிவு** | **- மெய், நா, மூக்கு, கண், செவி, மனம்** |

என ஆறறிவு குறித்துத் தொல்காப்பியர் கூறியுள்ளார். இவற்றுள் விலங்குகளும், பறவைகளும் ஐந்தறிவுயிர்களாக அமைந்திருப்பதை,

**"மாவும் புள்ளும் ஐயறி வினவே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல்.பொ.ம.576)**

என்ற நூற்பா மூலம் விளக்கியுள்ளார். இதே போன்று கி.மு 322-384 ஆம் ஆண்டுகளில் வாழ்ந்த அரிஸ்டாட்டில் அவர்களும் உயிரினங்களை, வாழ்வியல் பழக்க வழக்கங்கள் மற்றும் உடற்பகுதியை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தியுள்ளார்.

தொல்காப்பியம் உயிர்களின் உடற்கூறு பற்றிய ஆய்வுச் சிந்தனையைக் காட்டிலும் அவற்றின் வாழ்வியல் அணுகுமுறைகளைச் சிந்திப்பதில் அதிகம் அக்கறை காட்டி உள்ளது. இந்த ஆய்வு முறை அறிவியல் அறிஞர்களாலும், சமூகவியல், மானுடவியல் வித்தகர்களாலும், தமிழில் வல்லமை பெற்ற சான்றோர்களாலும் இன்றும் பாராட்டப்படுகிறது.

**டார்வினின் பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு**

இயற்கையியலாளராகக் கருதப்படும் டார்வின் உலகின் பல பகுதிகளுக்குச் சென்று, உயிரினங்கள் குறித்து நுண்ணிய ஆய்வுகளை செய்துள்ளார். டார்வினின் ஆராய்ச்சிக் காலத்திற்கு முன்பும், பின்பும் பலர் உயிரின வளர்ச்சி பற்றிக் கருத்துக்களை வெளியிட்டிருந்தாலும் **'பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு'** என்றால் நமது நினைவிற்கு வருவது டார்வின் மட்டுமே. இவரது கொள்கையை ஆதரித்தவர்களும் நிராகரித்தவர்களும் இருந்தாலும் டார்வினது கருத்துக்களே சீரானது என்று மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. இவரது கருத்துக்கள் உலகில் உள்ள ஒவ்வொரு உயிரியும் இயற்கையால் தேர்வு செய்யப்படுவதாகவும், அதில் இயற்கையோடு ஒன்றிவிடுபவை தொடர்ந்து வாழ்வதாகவும், மற்றவை காலப்போக்கில் அழிந்து விடுகின்றன என்றும், உயிரினங்கள் மிகுதியான அளவில் இனப்பெருக்கம் செய்வதாகவும், அவ்வாறு அவற்றின் இனம் பெருகும் போது தனிப்பட்ட இனத்திற்குள்ளும் வேறுபாடுகள் எல்லா நிலைகளிலும் காணப்படுவதாகவும் ஒரு தலைமுறையைச் சேர்ந்த பண்புகள் வருங்காலத் தலைமுறைகளிலும் இருந்தாலும் அவை அவற்றின் மூதாதையர்களிடமிருந்து விலகி இறுதியில் ஒரு புதிய சிறப்பான மாற்றத்தை அடையும் என்பதே டார்வின் கோட்பாட்டின் முக்கிய அம்சமாகும். மேலும் இவரின் "ஒரு முறை பூண்டோடு அழிந்து போன உயிர் வகைகள் பிற்பாடு ஒரு போதும் தோன்றாது"[1] என்ற கருத்து மிக முக்கியமானதாகும்.

**டார்வின் கோட்பாட்டின் சாட்சிகள்**

டார்வினுடைய பரிணாமக் கோட்பாட்டின் தலையாய கூறுகளான **'உயிர்கள் தம் வாழ்க்கைக்காகப் போராடுகின்றன'** என்பதும் அவற்றில் வாழத்தக்கது வாழும் என்பவை இலக்கியவகை ஆய்வுகளுக்கும் கூட ஒரு திருப்புமுனையாக அமைந்துள்ளது. மேலும், டார்வின் கோட்பாட்டிற்கு வலிவூட்டும் சாட்சிகளாக,




இவற்றைக் கொள்ளலாம். இதனை மெய்ப்பிக்கும் வகையில் "கருவளர்ச்சியின் தொடக்கத்தில் தவளைகளும் பறவைகளும் பாலூட்டிகளும் மீனின் இதயத்தைப் போன்றே தங்களின் இதயத்திலும் இரு அறைகளையே பெற்றுள்ளன. தொடக்கத்தில் மீனைப் போன்று இரு அறைகளைப் பெற்றிருந்த நீர் நில வாழ்வன, பறப்பன, பாலூட்டிகள் ஆகியவற்றின் இதயம் கருவளர்ச்சியின் அடுத்த கட்டத்தில் மூன்று அறைகளைக் கொண்ட இதயமாக மாறுகிறது. இங்கு நீர் வாழ்வன, நீர் நில வாழ்வன, பறப்பன, பாலூட்டிகள், மனிதன் ஆகியவற்றின் கருவளர்ச்சியில் ஒரு நெருங்கிய ஒற்றுமை இருக்கிறது"[2] என்று ப.இ செங்குட்டுவன் குறிப்பிடுவது ஏற்புடையதே ஆகும்.

**பரிணாமக் கோட்பாடும் பிற அறிஞர்களும்**

பெர்டினாண்டு புருனட், ஜான் அடிங்டன், சைமன் போன்ற பரிணாமக் கோட்பாட்டறிஞர்கள் பரிணாம வளர்ச்சி குறித்து "நேரடியாகக் கண்டு கொள்ளக் கூடிய நேர்முக வளர்ச்சி என்பது முட்டையிலிருந்து பறவை உருப்பெருவது மற்றொன்று ஒரு விலங்கிலிருந்து மற்றொரு விலங்கு படிப்படியாக ஊழிக்காலம் முதல் பல வளர்ச்சி நிலையைச் சந்தித்து முழுமை பெறுவது நேரடியாக அறியப்படாமல் உய்த்தறியப்படும் வளர்ச்சி நிலையாக அமையும்"[3]என்ற இரு கொள்கைகளைக் கூறுகின்றனர். இதே போன்று "ஊர்வன இனத்தில் பரிணாமம் விளைந்தது, பறக்கும் இனம் வந்தது. பரிணாமம் ஒரு நாளில் நிகழ்வது அன்று. பல ஆயிரம் ஆண்டுகள், இலட்சம் ஆண்டுகள் பரிணாமம் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். ஒரு குறிப்பிட்ட பரிணாமம் முயற்சியோடு நிற்காது. நூற்றுக்கணக்கான முயற்சிகள் நடைபெறும்"[4] என்பார் கு.ராஜாராம். இவர்களைப் போன்று "உயிரியலாரின் ஆராய்ச்சிப்படி முதலில் நீரில் வாழும் உயிரினங்கள் தோன்றியதாகவும், பிறகு

இருநிலை வாழும் உயிரினங்களும், பிறகு ஊர்வன உயிர் வகைகளும், பிறகு பறக்கும் உயிர் வகைகளும் தோன்றி இறுதியில் பாலூட்டிகள் தோன்றியதாக வலசை வீரபாண்டியன் குறிப்பிடுவார்."[5]

**உயிர் சொல் விளக்கம்**

ஒரு செல் உயிரி(அமீபா) முதல் பெரிய உயிரியாகக் கருதப்படும் யானை வரை தான் பெற்ற உடம்பு இயங்கப் பெறுவதற்காக இயற்கையிலேயே அமையப் பெற்ற காற்றைச் சுவாசித்தல் என்ற நிலையை வாழ்நாள் முழுவதும் அடிப்படையாகக் கொண்ட ஒன்றை உயிர் எனக் கூறுகிறோம். இங்கு சுவாசித்தல் என்னும் இயக்கத்தை நடைமுறையில் கொள்ளாத பொருள் உயிர்ப்பொருளாகக் கருதப்படுவதில்லை. இவை தமிழில் அசையும் பொருள், அசையாப் பொருள் என்று குறிப்பிடப்பட்டுள்ளன. அவை சிற்றுயிரான எறும்பு முதலான பேருயிர் இவையெல்லாம் உயிருடையவை. மலை, கல் போன்றவை உயிரற்றவையாகவும், நகரும் தன்மையும் சுவாசத் தன்மையற்றனவாகவும் கருதப்படுகின்றன. இதற்கு "உயிரின் அடிப்படை வளர்ச்சி, இனப்பெருக்கம் மற்றும் சக்தி வெளிப்பாடு இவை இருப்பின் அதுவே ஓர் உயிரி"[6] என்று வால்டர் செயில்ஸ் அவர்களும், "உயிருள்ளவை அனைத்தையும் குறிக்கும் பொதுப்பெயர் உயிரினம்"[7] என்று கிரியா தமிழ் அகராதியும் உயிருக்கு விளக்கம் அளித்துள்ளன.

**உயிர்க் கோளம் (Biosphere)**

சூழல் என்பது தாவரங்கள் விலங்குகள் போன்ற அனைத்து உயிரினங்களுடனும் தொடர்புடையதாகும். இச்சூழலியற் காரணியில் முக்கியமான அங்கமாகத் திகழ்வது உயிரினமாகும். உயிரினங்களின் இயக்கத்தை பார்ப்போமேயானால் சூழலியற் காரணிகளின் பங்கு நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ காணப்படுகிறது. இதில் சூழலியற் காரணியைக் கீழ்க் கண்டவாறு பிரித்துள்ள,




இவையே சூழலியல் காரணிகளாகும். ஒரு உயிர் காரணிகளானது சூரிய ஒலி, கால நிலை, நிலவியல் போன்ற உயிரற்றக் காரணிகளின் ஒட்டுமொத்த அம்சமான இயற்பியல் இயல்புகளையும், குறிப்பிட்ட வாழிடத்தில் உள்ள உயிரினங்களையும்

கொண்ட உயிர்சார் சூழல் மண்டலத்தையும் உள்ளடக்கியதாகும். இவ்வுயிர் கோளத்தில் "விலங்கினங்களின் பரவலின் அடிப்படையைக் கருத்தில் கொண்டு பல அறிவியல் வல்லுனர்கள் இந்தியாவின் புவியமைப்பைப் பல்வேறு பிரிவுகளாகப் பிரிக்கின்றனர். எடுத்துக்காட்டாக,

- ✓ **ஜோர்டன் (1862) - பறவைகளின் பரவல்**
- ✓ **குண்டார் (1864) - ஊர்வனவற்றின் பரவல்**
- ✓ **பிளாம்ஃபோர்டு (1876) - நத்தைகளின் பரவல்**
- ✓ **வாலஸ் (1876) - பல விலங்கினத் தொகுதிகள்**

என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு விலங்கினப் புவியமைப்பை உருவாக்கினர்"[8] என்று சுசிலா அப்பாத்துரை விளக்கம் அளித்துள்ளார்.

**உயிரினத் தோற்ற காலம்**

புவிப்பரப்பில் காணப்படும் எந்தவொரு உயிரினத்தையும் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ இயக்குகின்ற காரணிகளின் தொகுப்பு சுற்றுச்சூழல் (Environment) ஆகும். சுற்றுச்சூழலின் சிந்தனைகளும், கோட்பாடுகளும் ஓர் உயிரியை முதன்மையாகக் கொண்டே அமைகின்றன. இதனால் புவியின் தோற்றம் குறித்து அறிய வேண்டுமாயின் அதற்கு முன்னதாக உயிரினங்களின் தோற்றம் குறித்து அறிய வேண்டியது அவசியமாகின்றது. உயிரினங்களின் தோற்றம் குறித்து அறிய காலம், வயது, நிகழ்வுகள் இவற்றை அடிப்படையாகக் கொண்டு புவியின் வரலாற்று காலங்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை,

- **பெருங்காலம் (Era)**
- **காலம் (Period)**
- **சிறுகாலம் (Epoch)**

போன்றனவாகும். இவற்றிற்குத் தனித்தனி பெயரிடப்பட்டு திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டுள்ளன. இக்காலக் கட்டங்களில் காணப்பட்ட பல்வேறு பாறைகள், பாறைப்படிவுகள் போன்றவற்றின் வயதை அறிந்து பழங்காலத்தில் வாழ்ந்த உயிரினங்கள் அவற்றில் நிகழ்ந்த மாற்றங்கள், புவி அமைப்பில் தோன்றிய பருவ கால மாற்றங்கள் பற்றிய பல ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. அவற்றை,

- **பழமை உயிரிகளின் தொட்டில் - 600-210 மில்லியன் ஆண்டுக்கு முன்- பாலியோசோயிக்**

- **ஊர்வன இனங்களின் பொற்காலம் - 210-65 மில்லியன் ஆண்டுக்கு முன்- மீசோசோயிக்**
- **பாலூட்டிகளின் காலம் - 65-1 மில்லியன் ஆண்டுக்கு முன் - சீனோசோயிக்**

என்ற மூன்று காலகட்டம் குறித்த ஆய்வின் மூலமாக பாலியோசோயிக் என்ற பெருங்காலத்தில் கேம்பிரியன் காலம், ஆர்டோவிஷியன் காலம், சைலூரியன் காலம், டிவோனியன் காலம், மிசிசிப்பியன் காலம், பென்சில்வேனியன் காலம், பெர்மியன் காலம் எனும் காலக் கட்டம் உயிரிகளின் தொட்டில் என்று கூறினர். நீர் - நில வாழ்விகள் என்னும் முன்னோடிகள் இக்காலக் கட்டத்தில் தோன்றின. இதனையே "கதிரவனிடமிருந்து உருப்பெற்ற புவிக்கோள் தோன்றி ஏறக்குறைய 60 கோடி ஆண்டுகளின் பின் முதல் உயிரினமான ஒரு செல் உயிரியான நீலப்பச்சைப்பாசி தோன்றியது"[9] என்று சு.முத்து அவர்களும் "உலகின் முதல் உயிர் தோன்றிய இடம் கடலே என்பதும் அறிஞர்களின் முடிவு"[10] என ஜான் கென்னடியும் கூறியுள்ளனர்.

உயிரின வரலாற்றின் இடைக்காலமாகக் கருதப்படும் **'மீசோசோயிக்'** காலத்தில் நில வாழ், நீர் வாழ், ஊர்வன இனங்கள் சிறப்புற்றிருந்ததாகக் கூறப்படுவதை "பரிணாம வளர்ச்சி இரு நிலைகளில் கிளைத்து வளரத் தலைப்பட்டது. ஒரு வழியே தாவர வளர்ச்சியும் பிறிதொரு வழியே விலங்கின வளர்ச்சியும் ஏற்படத் தொடங்கின. இவற்றின் இப்பரிணாம வளர்ச்சி அவை பரவிய நில வகைகளையும் கால நிலையையும் ஒட்டியதாக அமைந்தது"[11] என்பதை கொடுமுடி சண்முகம் கூறியுள்ளதைக் காணமுடிகிறது. டிரையாசிக் காலத்தில் டைனோசர்களும், முதல் ஊர்வன இனத்திலிருந்து தோன்றியது பறவைகளில் ஒன்றான ஆர்க்கியாப்டெரிக்ஸ்(Archeopteryx) என்னும் பறவையாகும். பறவைகள் தேன்றியதே வெப்பப் பாதுகாப்பு இயல்பில் ஓர் புதிய மாற்றமாகக் கருதப்பட்ட ஜீராசிக் காலம் மிகப் பெரிதாக இருந்த மெல்லுடலிகள் மறைந்தது கிரிட்டேஷியஸ் கால கட்டம் என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

சீனோசோயிக் என்னும் பெருங்காலத்தில் தற்காலத்திய விலங்குகள், தாவரங்கள் போன்றவற்றின் படிவங்கள் கிடைத்துள்ளன. இதன் சிறுகாலங்களாக பாலியோசீன், இயோசீன், ஆலிகோசீன், மயோசீன், பிளியோசீன், பிளிஸ்டோசின் என்று பிரிக்கப்பட்டு தனிப்பட்ட விலங்குகளின் படிப்படியானப் பரிணாம வளர்ச்சி வகைப் படுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

**பாலியோசோயிக் கால உயிரிகள்**

கடற்பஞ்சுகள், நட்சத்திர மீன்கள், நத்தைகள், பூச்சிகள், நண்டுகள், நில வாழ் மற்றும் நீர் நில வாழ்விகள், ஊர்வன இனங்கள் போன்ற பலவும் தோன்றியது இக்காலக் கட்டமாகும்

**மீசோசோயிக் கால உயிரிகள்**

விலங்குகளில் ஊர்வன இனமும், பறவைகளும், பாலூட்டிகளும் தோன்றியதாக சான்றுகள் காணப்படுகின்றன.

**சீனோசோயிக் கால உயிரிகள்**

இக்காலத்தில் பாலூட்டிகள் முக்கியத்துவம் பெற்றதால் இதனைப் பாலூட்டிகளின் காலம் எனலாம்.

மக்களைப் பற்றியச் செய்திகள் வரலாற்றுக் காலத்திற்கு முன்பு அதிகம் கிடைக்கவில்லை. ஆனால் அக்காலத்து மக்கள் தங்கள் வாழ்விடங்களில் அவர்கள் பயன்படுத்தியப் பொருட்களான கற்கருவிகள், ஆயுதங்கள், பாறை ஓவியங்கள் எனப் பலவற்றை விட்டுச் சென்றுள்ளனர். அவை அக்காலப் பண்பாட்டை அறிய நமக்கு உதவியாக இருக்கின்றன.

வாழ்விடங்களில் காணப்படும் தொன்மையான பண்பாட்டுத் தடயங்களில் பாறை ஓவியங்களும் ஒன்றாகும். தமிழகத்தில் 1980ஆம் ஆண்டிற்குப் பின்னரே பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. இதுவரை சுமார் 50-க்கும் மேற்பட்ட இடங்களில் பாறை ஓவியங்கள் காணப் பெற்றுள்ளன. அதிகமான ஓவியங்கள் தென்னார்க்காடு, வட ஆர்க்காடு, தர்மபுரி, நீலகிரி மலைத் தொடர், மேற்கு மலைத் தொடரின் கீழ் அமைந்துள்ள தேனி மாவட்டப் பகுதிகள்,மதுரை அருகே அமைந்துள்ள குன்றுகள் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

**பறவைகளின் தோற்றம்**

பறவையினம் மற்றும் உயிர்ப்பிராணிகளின் தோற்ற வரிசையில் ஊர்வன இனம் தோன்றியதன் பின்னர் தோன்றியது பறவையினம். ஊர்வன இனத்திலிருந்து பிரிந்ததே பறவையினம் உண்டாகியதாகவும், ஊர்வன இனத்துக்கும் பறவையினத்துக்கும் அதிகமாக ஒற்றுமைகள் இருந்தாலும் எலும்பு அமைப்பிலும், தசையமைப்பிலும் மிகுந்த ஒற்றுமை உண்டு. அத்தோடு இரண்டு இனமும்

முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் பழக்கமுடைவை. இதில் முக்கியமான வேற்றுமை உண்டெனில் அஃது பறவைகளுக்குச் சிறகுகள் இருப்பதாகும். எல்லாப் பறவைகளுக்குமே சிறகுகள் உண்டு. வேறு உயிரினங்களுக்கு சிறகுகள் இல்லை. உருவ அமைப்பில் ஊர்வன இனப்பிராணி போலத் தோன்றி, பின் அதனுடைய இறக்கை எலும்புகளின் இறுதியில் நகங்களுடன் கூடிய மூன்று மெல்லிய விரல்கள் இருந்தன. இப்படியெல்லாம் உருவ அமைப்பு இருந்தும் இறக்கைகள் கொண்டிருந்தால் அதனைப் பறவை வகையில் சேர்க்க வேண்டிய அவசியம் உண்டாகிறது.

அவ்வகையில் "இந்த உலகில் முதன் முதலில் உயிரினம் தோன்றியது 200 கோடி ஆண்டுகளுக்கு முன்பு என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். பறவை இனம் மிகவும் பிற்பட்டுத் தோன்றியதாகும். குட்டி போட்டுப் பால் கொடுக்கும் இனம் உண்டானதற்குச் சிறிது காலத்துக்குப் பின்னர் ஊர்வன இனத்திலிருந்து பறவையினம் கிளைத்துத் தோன்றியது. அப்படிக் கிளைத்தது சுமார் 15 கோடி ஆண்டுகளுக்கு முன்பிருக்கலாம் என்று கூறப்படுகிறது"[12]. மேலும் "6.3 கோடி ஆண்டுகளுக்கு முன்பிருந்து 3.6 கோடி ஆண்டுகளுக்கு முன்பு வரை உள்ள காலத்தை இன்று நாம் காண்கிற எல்லாப் பறவைகளின் முன்னோர்களும் தோன்றிய காலம் என்றாலும் அந்தக் காலத்தியப் பறவைகள் இன்றிருப்பனவற்றை முற்றிலும் ஒத்தவையாய் இருந்திருக்கமாட்டா. 3.6 கோடி ஆண்டுகளுக்கு முன்பு வரை விளங்கிய காலத்தில் இப்போதுள்ள பறவைகளைப் பெரிதும் ஒத்த பறவைகள் தோன்றிவிட்டன"[13].

இவ்வாறு உலகில் தோன்றிய உயிரினங்களில் பறவைகள் மற்ற விலங்குகளை விடப் பல்வேறு வேற்றுமைப் பண்புகளைப் பெற்றுள்ளன என்பது நாம் அறிந்ததாக இருந்தாலும் அவைகளாவன,



போன்ற இவை தவிர்த்து மென்மைத் தன்மை, பெற்றோர் பாதுகாப்பு, மற்ற விலங்குகளிடம் தொடர்பு கொள்ளும்முறை, சூழலுக்கேற்ற தகவமைப்பு போன்ற பல்வேறு பண்புகளில் சிறப்புத் தன்மையுடையனவாக விளங்குகின்றன. அவ்வகையில் மொத்தத்தில் இதுவரை "1,634,000 வகையான பறவைகள் உருவாகியிருக்கலாம் என்று பறவை ஆய்வாளர் ஒருவர் குறிப்பிடுகிறார். இன்று வாழ்பவை இதில் நூற்றில் ஒரு பங்கு கூட இல்லை. ஒரு சிலர் இன்று 30000 வகைப் பறவைகள் இருப்பதாகவும் அவற்றை 27 பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம் என்பதாகவும் கூறுகின்றனர். வேறு சிலர் தற்காலத்தில் சுமார் 8600 வகைப் பறவைகளே உள்ளன என்று சொல்கின்றனர்"[14] என்பது கு.ராஜாராம் அவர்களின் கருத்தாகும்.

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்து மனிதனின் ஓவியங்களில் அக்கால மனிதனின் வாழ்க்கைச் சூழல்களை அதாவது வேட்டைக் காட்சிகளையும், மந்திரம், சடங்குத் தொடர்புடைய ஓவியங்களையும் சித்தரித்துள்ளனர். அவை அக்கால மனித இனத்தின் வரலாற்றையும், பழக்கவழக்கம், நம்பிக்கை ஆகியவற்றையும் எடுத்தியம்புகின்றன.

"பிரான்ஸ், இத்தாலி, எகிப்து, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் இவ்வகைக் குகைகள் அதிகம் காணப்படுகின்றன. இக்குகைகளில் மிகுதியாக வனவிலங்குகளின் ஓவியங்களே இடம் பெறுகின்றன. லாஸ்காச், பிரான்ஸ் - பறவையின் தலையுடைய மனிதனும் மிருகமும் (கி.மு.1500-கி.மு.1200) இருப்பதான ஓவியம் கிடைத்துள்ளது. சீகூர் இது நீலகிரி மாவட்டத்தில் மசனக்குடி எனும் இடத்திற்கு அருகே அமைந்துள்ளது. மனித நடமாட்டம் இல்லாத இந்த உயர்ந்த இடத்தில் யானை வடிவத்தைப் போன்ற பெரிய பாறையின் கீழ்ப் பகுதியில் ஓவியங்கள் காணப்படுகின்றன. இங்கு மயிலின் ஓவியமும் காணப்படுவது சிறப்புடையதாகும்"[15]. "விலங்கினத் தலையும், பறவை அலகும் கொண்ட உருவங்களும் மாடு, குதிரை, பாம்பு, ஆடு, பசு, மான், மீன், அன்னம் போன்ற ஓவியங்களும் தமிழகத்தில் அதிகம் காணப்படுகின்றன."[16]

இப்பாறை ஓவியங்கள் வழியாக பண்டைய மக்களின் தொழில் மற்றும் சுற்றுப்புறச் சூழ்நிலை பற்றியும் அறிந்து கொள்ளமுடியும்.

**உயிரியலில் பறவைகள்**

நம்மைச் சுற்றி காணப்படும் உயிரினச் சுழலில் பறவைகள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இதனை "உயிரின வேற்றுமையில் பறவைகள் என்ற முக்கிய பகுதியில்லாமல் மற்ற சின்னஞ்சிறு உயிரினங்களையும், நுண்ணுயிர்களையும் பற்றி விளக்க இயலாது"[17] என்று கு.அண்ணாதுரை அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இனிமையான குரலுடைய பறவைகளெனும் உயிரினங்களைக் கண்காணித்தல் என்பது தொடக்கக் காலத்தில் பொழுது போக்காகக் கருதப்பட்ட நிலை. பின்னர் பறவைக் கண்காணித்தல் என்ற பொழுது போக்கு அறிவியல் கல்வி முறையாக மாறி வந்துள்ளது.

**சிற்றினத் தொடர்பு**

தன் இனமற்ற பிற உயிரினங்களுக்கு உதவியாக இருந்து தமது தேவையைத் தீர்த்துக் கொள்ளும் தன்மை சிற்றினங்களிடையே அதிகமாக காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக மந்தப் பார்வையுடைய போத்து போன்ற புல் மேயும் காட்டு மிருகங்களிடம் உணவைப் பெற்றுக் கொண்டு அதற்கு வரும் பகையைக் கண்டு எச்சரிக்கை செய்யும். அது போல முதலைக்குருவி என்னும் பறவை முதலையின் பற்களிலுள்ள பூச்சியைத் தின்ன முதலையின் வாய்க்குள் சென்றாலும் அந்த பறவைக்கு முதலை எவ்விதமான தீங்கும் செய்வதில்லை. இதற்கு அகநானூற்று பாடலில்,

> **"பொருகளத்து ஒழிந்த குருதி செவ்வாய்,**
> **பொறித்த போலும் வால்நிற எருத்தின்**
> **அணிந்த போலும் செஞ்செவி, எருவை,**
> **குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து**
> **அருங்கவட்டு உயர்சினைப் பிள்ளை ஊட்ட**
> **விரைந்துவாய் வழுக்கிய கொடூங்கண் ஊன்தடி**
> **கொல்பசி குதுநரி வல்சி ஆகும்" (அகநா - 193.)**

ஆறலைக் கள்வர்களால் போர்க்களத்தில் வீழ்ந்து பட்ட வழிப்போக்கர்களின் உடலினின்று சிந்திக் கிடந்த குருதியைக் குடித்ததால் சிவந்த வாயையும், புள்ளிகளை உடைய கழுத்தையும், செய்து பதித்து வைக்கப்பட்டது போன்ற சிவந்த செவியினையும் உடைய கழுகு, யாமரத்தின் கவட்டிலிருந்து எழுந்து,

உயர்ந்து வளர்ந்திருக்கும் கிளையின் உச்சியில் அமர்ந்து கொண்டு தனது குஞ்சுக்கு உண்பிக்கும். அப்போது விரைவாக உண்பிப்பதால் குஞ்சின் வாயிலிருந்து வழுக்கி வீழ்ந்த கண்ணாகிய கொழுத்த ஊன் துண்டு, வருந்தும் பசியோடு இருக்கும் முதிய நரிக்கு உணவாகும் என்று கூறப்பட்டுள்ளது. மேலும்,

**"இன மீன் அருந்து நாரையோடு பனைமிசை**
**அன்றில் சேக்கும் முன்றில்.................." (அகநா - 360.)**

பல்வேறு மீன்களை உண்ணும் நாரையுடன் பனை மீது அன்றிலும் தங்கியிருக்கும். இது போல "தீக்கோழி என்றும் பெயர் வழங்கும் இப்பறவை மேய்ச்சல் பிராணியைப் போலத்தான் வாழ்க்கை நடத்துகிறது. வரிக்குதிரை போன்ற விலங்குகளோடு கூடவே திரிகிறது. இரண்டே இரண்டு கால் விரல்களைக் கொண்ட ஒரே பறவை தீக்கோழி தான்"[18] என்பார் கு.ராஜாராம்.

**உருவ அமைப்பு பறவையியலாளர்கள் கருத்து**

இந்தியாவில் காணப்படும் பறவை இனங்களில் பெரிதாக உள்ளது சாரஸ் நாரை என்னும் நாரை. கால்களை ஊன்றி இந்த நாரை நிற்கும் போது மனிதனின் உயரம் இருப்பதைக் காணலாம். இதற்கு அடுத்த பெரிய பறவையாக இமய மலைப் பகுதியில் காணப்படும் தாடியுடைய இராஜாளியைக் குறிப்பிடலாம். இந்த இராஜாளியின் இறக்கை விரிப்பு 8அடி அல்லது சுமார் இரண்டரை மீட்டர் நீளம் கொண்டிருப்பதைக் காணலாம். இந்தியாவில் காணப்படும் பறவைகளில் மிகமிகச் சிறியது தேன்சிட்டு. இது மனிதரின் பெருவிரல் அளவே இருப்பது அனைவரும் அறிந்ததே.

"ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் பாம்பு, பல்லி போன்ற உயிர்கள் பூமியில் வாழ்ந்திருந்தன. பெரிய விலங்குகளுக்கு அஞ்சிச் சிறிய விலங்குகள் மலை மேல் ஏறிக்கொண்டன. பெரிய விலங்குகள் அவ்வளவு உயரம் ஏற முடியவில்லை. மலை மேலிருந்த சிறிய விலங்குகள் பெரிய விலங்கிடமிருந்து தப்பிச் செல்வதற்காகவே பறக்கக் கற்றுக் கொண்டன என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். இவ்வுயிர்கள் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தன. ஊர்வனவாகவும், பறப்பனவாகவும் இருந்தன. நமக்குத் தெரிந்த வகையில் இருபதாயிரம் வகையான பறவைகள் இருக்கின்றன."[19] என்று குழந்தை என்பார் கூறியுள்ளார்.

"ஆர்க்கியாப்டெரிக்சுகளை முதல் பறவைகள் என்றும் மற்றும் பரிணாம வளர்ச்சியடையாத பறவைகள் என்றும் அழைக்கப்படுகின்றன. ஆர்க்கியாப்டெரிக்சுகள்,

தற்காலப் பறவைகளிலுள்ளவை போன்று முழுமையாக வளர்ச்சி பெற்ற தொடை எலும்பு (Femur) மற்றும் கால் எலும்புகள் (Tibia) போன்றவைகளைக் கொண்டுள்ளன"[20] என்பார் உ.கருப்பணன்.

"பறவை பறக்கும் போது சிறகுகள் செயல்படுவது மட்டும் நம் கண்ணுக்குத் தெரிகின்றது. அதை வைத்துச் சிறகுகள் இருப்பதால் பறக்க முடிகிறது என்று முடிவுகட்டத் தோன்றும். மனிதராகிய நமக்குச் சிறகுகள் மட்டும் இருக்குமேயானால் உடனடியாக நாம் பறக்கக் கூடியவர்களாக ஆகிவிடுவோம் என்று எண்ணத்தோன்றும். சிறகுகள் மட்டும் இருந்தால் பறக்கும் மனிதராக ஆகிவிடமுடியாது. உடற்கட்டு, உடலமைப்பு, எடை, பார்வை ஆற்றல், உணவு மூலம் கிடைக்கும் ஆற்றல் போன்ற எத்தனையோ அம்சங்களும் பறப்பதற்கு ஏற்றபடி இருந்தால் தான், வசதியாகப் பறக்க இயலும். பறவையின் உடலமைப்பு, எலும்பமைப்பு, தசையளவு, பார்வை ஆற்றல், உணவு மூலம் பெறும் ஆற்றல் எல்லாமே அதனை ஒரு பறக்கும் இயந்திரமாக ஆக்கும் வகையில் அமைந்துள்ளன"[21] என்றும், இவை "பறக்கும் போது விறைப்பாக இருத்தல் அவசியமாதலின், பறவையின் விலா எலும்பும், முதுகெலும்பும் விறைப்பானவையாயின. மனிதன் முதுகை வளைப்பது போலப் பறவை வளைக்க இயலாது. பறவையின் முதுகெலும்பு விறைப்பான அமைப்புக் கொண்டதாகும். கழுத்தும் வாலும் மட்டும் ஊர்வனவற்றின் கழுத்தையும் வாலையும் போல அசையக் கூடியனவாய் விளங்குகின்றன. மார்பு எலும்புகளில் ஒரு வலுவான அடித்தட்டைப்பகுதி உருவாகியது. அந்த அடிப்பாகத்தில், பறக்கும் போது செயல்படுகின்ற தசைகள் இணைக்கப்பட்டுள்ளன"[22] என்றும் நமது வியர்வை சுரப்பி போன்று "பறவைகளின் உடலில் வியர்வைச் சுரப்பிகள் கிடையாது. இதன் காரணமாக எடை குறைவாயிருப்பதோடு, உடல் ஈரமின்றி வறண்டிருக்கும் வசதியேற்படுகிறது"[23] என்றும், மனிதனின் இதயம் நான்கு அறைகளைக் கொண்டுள்ளது போன்று "பறவையின் இருதயம் பாலூட்டிகளின் இருதயம் போன்று நான்கு அறைகள் கொண்டது. இதயத்திற்கு இரத்தம் போய்ச் சுத்தமாகிறது. அதன்பின் அந்த நல்ல இரத்தம் உடலினுள் சுற்றிவரும். பறவையின் இருதயம் பெரியது, வலுவானது, விரைவாகத் துடிக்கும் இயல்புடையது. மனிதனின் இதயம் நிமிடத்துக்கு 72 முறை துடிக்கும். தவளையின் இருதயம் ஒரு நிமிடத்துக்கு 22 தடவை துடிக்கக் கூடியது. ஆனால் புறாவின் இருதயம் ஒரு நிமிடத்துக்கு 135 முறை துடிக்கும். மஞ்சள் நிறமுள்ள கானரிப் பறவையின் இருதயம் நிமிடத்துக்கு 514 முறை துடிக்கவல்லது.

அளவில் சிறிய ஊங்காரக் குருவியின் இருதயம் மிக மிக விரைவாகத் துடிக்கும். நிமிடம் ஒன்றுக்கு 615 துடிப்புக்கள் என்றால் எவ்வளவு விரைவாகத் துடிக்குமென்று பாருங்கள்"[24] என்று கு.ராஜாராம் அவர்கள் பறவைகளைப் பற்றிய ஆராய்ச்சியில் குறிப்பிட்டுள்ளார்.

**உயிரிகள் தினம்**

மனிதன் தங்களது நினைவுகளைக் கொண்டாட ஒவ்வொரு தினங்கள் கொண்டாடுவதைப் போன்று இயற்கையின் படைப்பான உயிரினங்களின் தினமும் இருப்பதை "1 முதல் 7 வரையிலான அக்டோபர் முதல் வாரம் உலகக் காட்டுயிர்கள் தினமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஓடித்திரியும் அவசர உலகத்தில் நம்மைச் சுற்றியும், நம்மை நாடியும் வாழ்ந்து கொண்டிருக்கும். உயிரினங்களைப் பார்க்கவும் அவற்றின் பழக்கவழக்கம் பற்றித் தெரிந்து கொள்ளவும் உகந்த காலம் இதுவாகும். இதனையே தியேடோர் பாஸ்கர் அவர்கள் காட்டுயிர்களைக் காப்பாற்ற நீங்கள் என்ன செய்ய முடியும் என்றும் சிந்திக்க வேண்டிய தருணம் இது என்று கூறியிருக்கிறார்"[25].

**சுற்றுச்சூழல் அறிவிப்பும் சீரழிவும்**

நம்மைச் சுற்றி நமது பாதுகாப்பிற்காகப் படைக்கப்பட்டிருக்கும் சுற்றுச்சூழலே உயிரினங்களின் வாழ்வாதாரமாகும்.இயற்கையின் முக்கியப் பணியாக என். இராஜேந்திரன் அவர்கள் "இயற்கையின் தீவிரத் தாளமுறைக்கு உட்பட்ட சுற்றுச் சூழலில் நாம் இன்று வாழ்கிறோம். ஒரு நாளைய அதாவது 24 மணி நேரத் தாளமுறை என்பது ஒளி, வெப்பம், ஈரப்பதம் மற்றும் பிற காரணிகளால் ஏற்படும் சுற்றுச் சூழலின் மாற்றங்களைக் குறிக்கும். நமது பூமி இலட்சக்கணக்கான ஆண்டுகளாகத் தனது சுய அச்சில் தன்னைத்தானே சுற்றிக் கொண்டிருப்பதால் ஒரு நாளைக்கு 24 மணி நேரம் என்ற நாட்காட்டி உருவானது. இச்சுயசுழற்சி இருளையும், ஒளியையும் மாறி மாறி ஏற்படுத்தி இரவையும், பகலையும் உருவாக்குகிறது. உயிரினங்கள் தோன்றி வளர இந்த இரவு - பகல் மாற்றங்களே காரணங்களாகின்றன"[26] என்று கூறியுள்ளார்.

இவ்வாறு "நம் பாரம்பரியம் என்பது ராமாயணம் போன்ற காப்பியங்கள் மட்டுமல்ல. நம் பாரம்பரியம் பரிணாமத் தகவமைப்பால் ஊழிக்காலமாக உருவாக்கப்பட்ட, சாரஸ் போன்ற உன்னதப் படைப்புகளும் நம் பாரம்பரியச்

செல்வம் தான். அவை மறைந்தால், நம் சுற்றுச்சூழல், நீர்நிலைகள் சீரழிகின்றன என்று அர்த்தம்."[27] என்று சு.தியேடோர் பாஸ்கரன் குறிப்பிடுவார்.

**மனிதன் அறிவியலைக் கண்டறிந்த முறை**

விலங்குகளின் மாமிசத்தை உண்பதற்காக ஓடித்திரிந்து வாழ்ந்த பண்டைய மனிதன். வேட்டையாடும் போது தப்பியோடும் விலங்குகளைத் தாக்க கற்களை வீசி எறிந்தான். அஃது மற்றொரு கல்லின் மீது பட்டு உராய்வு ஏற்பட்டதில் நெருப்பு உண்டானது. அந்நெருப்பு அவ்விடத்தை எறித்ததில் பல உயிர்களும் எறிந்து வீழ்ந்தன. அந்த மாமிசத்தை விருப்பம் கொண்டு உண்டனர். பின்பு மீண்டும் நெருப்பை உண்டாக்கச் சிந்தித்தான். இவ்வாறே மனிதனிடம் தன்னைச் சுற்றி இருப்பதும், இயங்குவதும் பற்றிய அறிவியல் எண்ணங்கள் மேலோங்க ஆரம்பித்தது எனலாம். இவ்வாறு "அறிவியல் உண்மைகளை ஒருவர் விவாதிக்கவும், பரிசோதிக்கவும், நிரூபிக்கவும் முடியும். ஒரு கருத்தை ஆய்வுக்கு உட்படுத்த முடியாத போது அது அறிவியல் என்று கூறிக்கொள்ளும் தகுதியை இழந்துவிடும். அறிவியல் உண்மைகள் மனிதரின் விருப்பு வெறுப்பு சார்ந்து இருப்பதில்லை. இயற்கை விதிகளோடு சார்ந்து அவை அமைகின்றன"[28] என்பது மு.பொன்னுசாமி அவர்களின் கருத்தாகும்.

இலக்கியமும் அறிவியலும் ஒன்றொடு ஒன்று தொடர்புடையதாகவே இருந்து வந்துள்ளது. ஆதிமனிதன் தகவல் தொடர்பிற்காகப் பயன்படுத்தி வந்த பாறை ஓவியங்களிலும் தான் அறிந்த அறிவியல் குறிப்புகளைப் புகுத்தியிருப்பதைக் காணமுடிகிறது. இதைத் தொடர்ந்து சங்கப் புலவர்கள் இயற்றிய சங்க இலக்கியம் முதல் இன்றைய இலக்கியங்கள் வரை நாம் அறிவியலைப் பயன்படுத்திவந்தமைக்குப் பண்டைய காலம் முதலாக சான்றுகள் காணக்கிடைக்கின்றன.

**இலக்கியத்தில் அறிவியல்**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இலக்கியம் படைத்தியம்பியது நமது தாய் மொழியாம் தமிழ். மானிட வாழ்வியலாகிய அகத்தையும், புறத்தையும் கடந்த இயற்கைக் குறிப்புகளைக் கொடுத்துள்ளனர். இதனையே மலையமான் அவர்களும் "இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்தே தமிழர்கள் அறிவியலை வளர்த்தனர். இத்தோடு உயிரியல், பயிரியல், வானியல் முதலிய பல துறைகளிலும் புலமை பெற்றிருந்தனர்"[29] என்று கூறியுள்ளார். மேலும் "உலகில் காணப்படும்

உயிரினங்களான மனிதன், விலங்கு, பறவை, தாவரம் போன்ற அனைத்தும் மரபணுக்களின் வழியாகவே பெருகிக் கொண்டு வருகின்றன. உயிரினங்களின் உருமாற்றத்திற்கு மூலகாரணமாக மரபணுக்களைக் கூறலாம். இன்று அறிவியல் வளர்ச்சியின் காரணமாக மரபணுக்கள் மனிதனின் கைக்கருவியாக உள்ளன. இத்தகைய உயிர்த் தொழில் நுட்ப இயலின் உதவி கொண்டு விலங்கு, பறவை, தாவரம் மற்றும் மனிதர்களை மேம்படுத்த முடிகிறது”[30]. என உயிர்த்தொழில் நுட்ப வழிகோலியான கிரோர் மெண்டல் கூறியுள்ளதாக மலையமான் குறிப்பிட்டுள்ளார்.

**சங்க இலக்கியத்தில் பறவையின் பங்கு**

சங்கப் புலவர்கள் உவமை மற்றும் வருணனை மூலமாக தம்மைச் சுற்றியுள்ள உயிரினங்களைப் பற்றிய அறிவியற் செய்திகளைக் கொடுத்துள்ளனர். அவற்றுள் பறவைகள் பற்றி அதிகமாகக் கூறியுள்ளதை பி.எல்.சாமி அவர்கள் “சங்க நூல்களில் விலங்குகளை விடப் பறவைகள் மிகுதியாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க நூல்களில் முப்பத்தைந்து விலங்குகள் சொல்லப்பட்டுள்ளன. ஆனால் ஏறக்குறைய ஐம்பத்தெட்டுப் பறவைகளின் பெயர்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன”[31] என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் பறவைகளைப் பற்றிக் கூறும் பொழுது அவை நம் வாழ்விற்கு எந்த அளவில் பயன்படுகிறது என்பதையும் ஆராய்ந்து கூறியுள்ளனர். பறவைகள் பற்றியக் குறிப்புகள் இலை மறை காயாகவே காணப்படுகின்றன. நேரடியாக எந்தச் செய்திகளும் இடம் பெறவில்லை என்றாலும் பறவைகள் பற்றிய பல செய்திகள் சிறப்பாகவும் கூறப்பட்டுள்ளன.

**சங்க இலக்கியத்தில் பறவைகள் இடம்பெற்றுள்ள பாடல் எண்ணிக்கை**

சங்க இலக்கியத்தில் பறவைகள் குறித்து 591 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இதில் எட்டுத்தொகையில் 515 பாடல்களும், பத்துப் பாட்டில் 76 அடிகளும் உள்ளன . அன்றில் ,அன்னம், காக்கை, கிளி, குயில், குருவி, கூகை, கொக்கு, கோழி, சிச்சிலி, நாரை, பருந்து, புறா, மயில் போன்ற பறவைகள் மற்ற பறவைகளை விட அதிகமான பாடல்களில் இடம் பெற்றிருப்பதையும் காணமுடிகிறது. மேலும் அன்றில், அன்னம், அண்டங்காக்கை, ஆண்டலை, இதல் (வரகுக்கோழி), இருதலைப்புள், ஊமன், ஊர்க்காக்கை, எருவை, கம்புள்கோழி, கணந்துள், கழுகு, காடை,கிளி, குயில், மனையுறைக்குருவி, முதுக்குறைகுருவி, கொக்கு, கோழி, சிச்சிலி, நாரை, நீர்க்காகம், நீர்க்கோழி, பருந்து, புறா, பூழ், மயில், வானம்பாடி,

ஏழால், பாறு, போகில், வங்கா, சிவல்(கௌதாரி), குரால், குடிஞை, பூணி, கூகை, மைனா போன்ற பறவைகள் பொதுவாகக் கூறப்பட்டுள்ளன. ஆனால் ஒரு சில பறவைகளுக்கு அவற்றின் வகைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வகையில் ஐம்பத்தியெட்டு பறவைகளின் பெயர்கள் சுட்டப்பட்டுள்ளன.

**சங்க இலக்கியம் தவிர்த்து பிற இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளப் பறவைகள்**

தகவல் தொடர்பு சாதனங்கள் தோன்றாத பண்டையக் காலத்தில் பறவைகள் பற்றிய செய்திகள் காணப்படுவது வியப்பிற்குறியதாகும். சங்க இலக்கியத்தில் பறவைகள் பற்றிக் கூறப்பட்டிருப்பினும் அதனைத் தவிர்த்து பிற இலக்கியங்களிலும் ஒரு சில பறவைகள் பற்றியச் செய்திகள் இருப்பதைப் பின்வருமாறு காணலாம்.

திருக்குறளில் ஐந்து குறள்களில் ஐந்து பறவைகளைப் பற்றி குறிப்பிடுகின்றார்.அதுவும் "புள்ளென்ற சொல்லால் குறிப்பிடுவதாக பூ.அமிர்தலிங்கன் குறிப்பிடுகிறார்"[32] பறவைகள் பின்வரும் ஐந்துமட்டுமே ஆகும்.

- **அன்னம்**
- **காக்கை**
- **கூகை**
- **கொக்கு**
- **மயில்**

போன்றவையாகும். இவற்றைத் தவிர்த்து மற்றுமோர் குறளில் மயிற்றோகை எனப் பொருள்படும் பீலி என்ற சொல்லையும் பயன்படுத்தியிருப்பதைக் காணமுடிகிறது.

**அன்னம்**

அன்னப் பறவை பண்டைய காலத்தில் வாழ்ந்த ஓர் அரிய பறவையினமாகக் கருதப்பட்டு வருகிறது. சங்க நூல்களில் அன்னம் குறித்து இயல்பான உண்மைகளையே கொடுத்துள்ளனர். அன்னம் பற்றி பி.எல்.சாமி அவர்கள் "சங்க நூல்களில் கூறப்படும் அன்னமெனும் பெயர் தாரா, காட்டுவாத்து, கிளுவை, சிறவி என்று தற்காலத்தில் அழைக்கப்படும் பறவைகளைப் பொதுவாகக் குறிப்பிடுவதாகும்"[33] என்று கூறியுள்ளார். இப்பறவை பாலில் இருந்து நீரைப் பிரிக்கும் என்றச் செய்திகள் இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளதை,

**“கல்வி கரையில! கற்பவர் நாள்சில**
**மெல்ல நினைக்கின் பிணிபல – தெள்ளிதின்**
**ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீரொழியப்**
**பாலுண் குருகின் தெரிந்து” (நாலடி.135)**

என்ற நாலடியார் பாடலின் மூலம் அறியலாம். “அன்னத்தின் இயல்பான வாழ்க்கையை, மலர்ந்த தாமரைப் பூவில் இருக்கும் ஆண் அன்னப் பறவையைக் கீழ்ப்படியும் தன்மையுடைய பெண் பறவை நீரில் இருந்து கொண்டு நினைக்கும் என்று கணிமேதாவியார் கூறியுள்ளார்”[34]. அதனைவிட பெண்ணின் பாதம் மென்மையானது என்பதை வர்ணிக்க வள்ளுவர்,

**“அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
**அடிக்கு நெருஞ்சிப் பழம்” (குறள், 1120)**

என்று குறிப்பிடுவார். இக்குறளில் அனிச்ச மலரும், அன்னப்பறவையின் இறகும் காதலியின் அடிக்கு நெருஞ்சி முள் போன்றது என்று வள்ளுவர் கூறியிருப்பதைக் காணமுடிகிறது. மேலும் அன்னம் குறித்த தனது ஒரு ஜோடியுடனே வாழும். இது அருகிவரும் ஒரு இனமாகும். இவை மங்களக் குறியீடாகவும், மரபுவழி அலங்காரங்களிலும், சிற்பம், ஓவியம் முதலான கலைகளிலும் அன்னப்பட்சி இடம் பெற்றுள்ளது. அன்னம் இந்துக்களுக்கும், பௌத்தர்களுக்கும் மங்களப்பட்சியாகக் கொண்டிருந்ததை வழிபாட்டுத் தலங்களில் உள்ளன என்ற குறிப்புகளை விக்கிபீடியா இணையத்தளத்தில் காணமுடிகிறது.

**அன்றில்**

காதல் உணர்ச்சியில் சிறப்புமிக்க பறவையாக அன்றில் கருதப்படுகிறது. இவ்வாறு எப்பொழுதும் ஆணும், பெண்ணும் இணைபிரியாத ஜோடியாகக் காணப்படும். “இப்பறவை கூடுகட்டி வாழ்ந்ததாகத் தெரிகின்றது. கடவுள் உறையும் மரத்திலும், மன்றப் பனையிலும் மனிதர் இடையூறு இல்லையாதலால் அன்றில் அங்கே கூடு கட்டி வாழ்வதை வழக்கமாகக் கொண்டிருக்க வேண்டும்.”[35] இத்தகைய அன்றில் குறித்து மூவாதியாரின் பாடல் ஒன்று,

**“தெண்ணீரிருங்கழி வேண்டும் இரைமாந்திப்**
**பெண்ணைமேற் சேக்கும் வரைவாய்ப் புணரன்றில்” (ஐந்.எழு.62)**

உப்பங்கழியில் மீன் போன்றவற்றை உண்டுவிட்டு அருகில் இருக்கும் பனைமரத்தில் வளைந்த வாயையுடைய அன்றில் பறவை தங்கியிருக்கும் என்கிறது. இவ்வாறு அன்றில் பறவைகள் பனைமரத்தில் வாழுவதாகக் கூறுகிறது. மேலும்,

**“நெடுங்கடல் தண் சேர்ப்ப நின்னோடு உரையேன்**
**ஒடுங்கு மடற் பண்ணை அன்றிற்கும் சொல்லேன்...” (கைந்நிலை - 50)**

என்ற கைந்நிலைப் பாடலில் புல்லங்காடனார் தலைவன் செய்த சத்தியத்தை கடலாகிய ஆடவனே உன்னிடமும் எதுவும் கூறமாட்டேன். பனைமரத்தின் மடலில் வாழும் அன்றில் பறவைக்கும் சொல்லமாட்டேன். ஆனால் நாரையே உன்னிடம் கூறுகிறேன் என்று தலைவி சொல்வதாக கூறியிருப்பதைக் காணமுடியும். மேலும்,

**“அன்னமும் மகன்றிலும் அணிந்து தாமரைப்**
**பன்மலர்க் கிடங்குசூழ் பசும் பொற் பாம்புரி...” (சீவக.1250)**

என்ற பாடல் அன்னப் பறவையையும், மகன்றில் பறவையையும் அணியாகக் கொண்டு தாமரை முதலான பல மலர்களைப் பெற்றுள்ள அகழி என அகழியின் அழகு வருணிக்கப் படுவதைப் பார்க்கமுடியும்.

**ஆந்தை**

ஆந்தை என்ற பொதுப் பெயர் கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை என்ற ஐந்து வகைப் பறவைகளுக்கு கூறப்பட்டுள்ளது. ஆந்தையை முதிய மரத்தில் வாழும் பேரறிவுடைய பறவையாகவும், முக்காலம் உணர்ந்த ஞானியாகவும் கருதி இருடி என்ற பெயரிலும் அழைத்துள்ளனர். இது **‘Athene brama’** என்ற குடும்பத்தைச் சேர்ந்தது என்று பறவை நூலார் வகைப்படுத்துவர். ஆந்தையைக் கொண்டு தலைமகனின் வருகையினை எதிர் நோக்கிக் கலங்கிய தலைமகட்குத் தோழி நிமித்தங் காட்டியதாக,

**“மன்ற முதுமரத் தாந்தை குரலியம்பக்**
**குன்றக நண்ணிக் குறும்பிறந்து – சென்றவர்**
**தொள்ளிய தும்மல் வரும்.” (ஐந்.எழு.38)**

மன்றத்தின் கண் உள்ள ஆலமரத்தில் வாழும் ஆந்தையானது ஒலிக்கும் போது நம்மிடம் அடிக்கடி நலமிகுந்த தும்மல் தோன்றுகிறது அதனால் தலைவர் மீண்டு வருவார் எனத் தோழி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. ஆந்தை அலறினால்

மரணம் ஏற்பட நாட்டுப்புறங்களில் ஒரு நம்பிக்கை நிலவி வருவதையும் இங்கே நினையலாம்.

**இருதலைப்புள்**

பல விதங்களில் பல உருவங்களில் நாம் பல பறவைகளைப் பார்த்தும் கேள்விப்பட்டும் இருந்தாலும் நாம் இலக்கியங்களில் பயிலும் பறவைகள் நம்மை வியப்படையச் செய்வதாக உள்ளது. அவ்வகையில் "இருதலைகளையும் ஒருடம்பையுமுடைய பறவை. அத்தலைகள் இரண்டில் ஒன்று ஆண் தலை மற்றொன்று பெண்தலை. இவ்விருதலைகளும் ஓருடம்பில் இருக்கப்பெற்ற வியத்தகு பறவை இது. இதன் பெயர் கூறாமல், 'இருதலைப்புள்' என்ற பெயரோடு இது வழங்கப்படுகிறது"[36] என்று பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள் என்னும் நூலில் வேங்கடராமச் செட்டியார் கூறியிருக்கிறார். இதனை மெய்ப்பிக்குமாறு,

**"ஒருகுடர்ப் படுதர ஓரிரை துற்றும்**
**இருதலைப் புள்ளின் ஓருயிர் போல**
**அழிதரு வெகுளி தாங்காய்...." (தகடூர் யாத்திரை - 7)**

என்று ஒரே குடலிற் புகுமாறு ஓர் இரையைத் தின்னும் இரண்டு தலைகளைக் கொண்ட பறவையின் ஒரே உயிர் போன்ற உடன்பிறந்தானைக் கொன்றழிக்கும். அது போல அதியமான், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை ஆகிய இருவரும் ஒரே குடியிற் பிறந்தவர்கள் ஆவர் என்ற உவமையை நோக்கும்போது இரண்டு தலைகளையுடைய பறவை இருந்திருக்குமா அல்லது புலவரின் கற்பனையா என்று எண்ணத் தோன்றுகின்றது. இப்படியான பறவையினம் குறித்த செய்திகள் பறவையியல் நூலில் காணப்படவில்லை என்பது உண்மை.

**உள்ளான்**

உள்ளான் உள் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. இதற்கு பி.எல்.சாமி "உள்ளான்களில் பல வகை தமிழ்நாட்டிற்கு மழைக் காலத்தில் வருகின்றன. உள்ளான் என்ற சொல் இந்த இனப் பறவைகளுக்குப் பொதுப் பெயராகத் தமிழ் நாட்டில் வழங்குகின்றது. ஆனால் சிறப்பாக மோர் உள்ளான், உள்ளான் குருவி என்றழைக்கப்படும் உள்ளான் வகைக்கே பெயராக வழங்கும். இந்த உள்ளான் குளம் குட்டைகளின் ஓரங்களிலும், சதுப்பு நிலங்களிலும், அறுவடை செய்யப்பட்ட

சகதியான வயல்களிலும் காணப்படும். வயல்களின் உள்ளே பெரும்பாலும் காணப்படுவதால் உள்ளான் என்றழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது"[37] என்று விளக்கியுள்ளதை உறுதி செய்வது போன்று,

**"வாளைமீன் உள்ளல் தலைப்படலும் ஆளல்லான்**
**துஞ்சூமன் கண்ட கனா...." (திரிகடு.7)**

என்ற இவ்வரிகள் திரிகடுகத்தில் இடம் பெற்றுள்ளது. இதில் வாய்பேசாத ஊமையன் தான் கண்ட கனவைப் பிறருக்கு எடுத்துரைப்பதைப் பயன்படுத்த இயலாதோ, அது போல உள்ளான் என்னும் ஒரு பறவை வாளை மீனைத் தாக்குவதும் எதற்கும் பயன்படாது என்பது மேற்கண்ட பாடலின் பொருளாகும்.

**காக்கை**

காக்கை அல்லது காகம் என்று அழைக்கப்படும் இப்பறவை **'கார்விடே'** (carvidae) என்றும் குடும்பத்தைச் சார்ந்தது. பறவை இனங்களில் மிகுந்த அறிவுத்திறன் கொண்ட பறவையாகவும் கருதப்படுகிறது. பூர்வீகக்குடிகளின் கருத்துப்படி காக்கை காலச்சாரத்தின் சின்னமாகவும், மூதாதையரின் அம்சமாகவும் கருதப்பட்டிருக்கிறது. அவ்வகையில் தமிழ் நாட்டு மக்களிடையே இன்றும் வழக்கத்தில் இருக்கும் பழக்கம் காக்கைக்குச் சோறு வைத்து விட்ட பிறகே தாம் உண்ணுவதாகும். அவ்வாறு வைக்கப்படும் பிடிச்சோற்றைக் கண்ட காக்கைக் கரைந்து கரைந்து தன் இனத்தையெல்லாம் அழைத்து ஒன்று கூடி அதனை உண்ணும் இயல்பான இக்காட்சியினை நம்மைப் போலவே கண்ட வள்ளுவர் அதனை உவமையாக்கி,

**"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
**அன்னநீ ரார்க்கே உள" (குறள் -527)**

என்று கூறியுள்ளதைக் காணும் போது "காக்கைக்குப் பலிச் சோறிடுதல் இன்று நேற்று தமிழரிடைத் தோன்றிய பழக்கம் அன்று சங்க காலம் தொட்டு வழி வழியாக வருவது"[38]. ஆனால் இப்பழக்கம் தோன்றுவதற்கான அடிப்படைக் காரணம் என்ன? என்பது ஆய்விற்குரியதே.

**கருடன்**

பறவைகளைத் தெய்வங்களுடன் தொடர்புபடுத்தி வழிபாடு செய்யும் வழக்கம் நம் மக்களிடம் இருந்துள்ளதை கு.ராஜாராம் அவர்கள் "மயிலைப் போலக் கருடன் மகாவிஷ்ணுவின் வாகனமாக ஆக்கப்பட்டிருக்கிறது. கருடனைக் கண்டதும் பக்தி

செலுத்துபவர்கள் ஏராளம். காத்தற் கடவுளான திருமால் விரைவாகச் சென்று தம் பணியை ஆற்றுவதற்கு வசதியாகக் கருடனை அவருக்கு வாகனமாக ஆக்கியிருக்க வேண்டும் என்று சொல்லலாம். கருடாழ்வார் என்று போற்றப்படுகிறது அப்பறவை"[39] என்று விளக்கம் கொடுத்துள்ளார். இதே போல,

**"அஞ்சிறைக் கலாப மஞ்ஞை அணங்கட வட்ட தேனும்**
**அஞ்சிறைக் கலுழனாகு மாட்சி யொன்றானு மின்றே" (சீவக.1405)**

என்ற பாடல் வரிகள் மயில் துன்பம் தரும் பாம்பைக் கொல்லும் தன்மையுடையதானாலும் அழகிய இறகுகளையுடைய கருடனைப் பறவையைப் போலத் தொலைவில் இருந்து கொண்டே பாம்பை அச்சுறுத்தும் தன்மை அதற்கு இல்லை என இரு பறவைகளை ஒப்புமைப்படுத்தியுள்ளதைக் காணலாம்.

**கவுதாரி – காடை**

கௌதாரியும் காடையும் **'ஃபசியானிடே' (Hpaciyanidae**) என்னும் குடும்பத்தில் காணப்படும் நடுத்தர அளவுடைய பறவைகளாகும். இவை "வறண்ட நிலங்களிலும், புன்செய் நிலங்களிலும் இணையாகத் திரியும். விளை நிலங்களில் கதிர் முற்றும் சமயத்தில் பல பறவைகள் கூட்டமாச் கூடிக் கதிர்களைப் பாழ்படுத்தும்"[40] என்று க.ரத்னம் குறிப்பிடுவார். மேலும் இவை குறுந்தொலைவு வேகமாகப் பறக்கக்கூடிய பறவையாகும். வேட்டைகாரர்கள் விரும்பி வேட்டையாடும் பறவைகளாகக் காடையும் கௌதாரியும் இருந்துள்ளதை,

**"காட்டுளாய் வாழுஞ் சிவலும் குறும்பூழும்**
**கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்" (நாலடி.122)**

இப்பாடலில் காட்டில் வாழும் கவுதாரியையும், காடையையும் பிடித்து வந்து கூடுகளில் அடைத்து வைப்பார்கள் என்று கூறியிருப்பதன் மூலம் இப்பறவைகளை வேட்டையாடிப் பிடிக்கும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது. இதனை சீவகசிந்தாமணியில் இடம் பெறும் பின்வரும் பாடல் வரி தெரிவிக்கும்,

**"குரவங் கொண்டு குறும்பூழ்போற் கொழுங்கால் முகைசுமந்து"**
**(சீவக.1651)**

குரவர் கையில் சிக்கிய குறும்பூழ் பறவையின் கால் போல முல்லை மலர் அரும்புகள் மலர்ந்தது என்பது மேற்கண்ட பாடல் வரியின் பொருள். இங்கு கவுதாரியின் கால்விரல் முல்லை மலருக்கு உவமையாகப் பயன்பட்டுள்ளதைக் காண்கின்றோம்.

**கழுகு**

**'அக்சிபிட்ரிடே' (accipitridae)** என்னும் குடும்பத்தைச் சார்ந்த கழுகு பெரிய வலுவானப் பறவை இனத்தைச் சேர்ந்தது. கழுகு இனத்தைச் சேர்ந்த பறவைகளாக எழால், கங்கு, கங்கம், கூளி, பருந்து, பணவை, பாறு, பூகம், வல்லூறு, பிணந்தின்னிக் கழுகு, குடுமி எழால் போன்றவை கழுகின் உள்ளினங்களாகத் தமிழில் குறிக்கப்படுகின்றன. இவற்றில் ஊண் உண்ணிகளாகக் கருதப்படும் கழுகுகள் போர்க்களத்தில் இறந்த வீரர்களின் உடல்களை உண்ண வருவது இயற்கை. இதனை பொய்கையார்,

> **"இருசிறகர் ஈர்க்குப் பரப்பி எருவை**
> **குருதி பிணங்கவரும் தோற்றம் - அதிர்விலாச்**
> **சீர்முழாப் பண்ணமைப்பான் போன்ற புனல்நாடன்**
> **நேராரை அட்ட களத்து" (களவழி.20)**

நீர்வளம் நிறைந்த நாட்டை உடைய செங்கணான் தன் பகைவரை வென்ற போர்க்களத்தில் தன் சிறகுகளைப் பரப்பிப் பிணங்கவரும் காட்சி, ஓசையுடைய முழவிற்கு பண் அமைப்பவனைப் போல இருக்கும் என்று உவமைபட கூறியிருப்பதைப் போல,

> **"யொட்டு விட்டுலறிய பராரைநெட் டாக் கோட்**
> **டுதிர்பறை யெருவை யுணவூன் றட்டி**
> **வளைவாயக் கரும்பருந் திடைபறித் துண்ணக்**
> **கண்டு நின் றுவந்த காட்சியு மிதுவே..." (கல்லா.6:25-28)**

என்ற செய்யுளில் நல்லிசைப் புலவர் கல்லாடனார் கிழக்கழுகு கொண்டுள்ள ஊனை இளமையுடைய பருந்து தட்டிப் பறித்து உண்ணுதலைக் கண்ட தலைவனும் தலைவியும், தலைவிக்கு நொதுமலர் வரைவு வந்தவுடன் தலைவன் தலைவியை நொதுமலர் கைக்கொள்ளாது தானே கைப்பற்றிக் கொண்டு வருகின்ற செயலாக நினைத்து மகிழ்ந்ததாக உவமை நயத்துடன் பாடியுள்ளார்.

**கானக்கோழி**

கானக்கோழிகள் தென்னிந்தியாவிற்கே உரிய பறவையாகும். இவை அடர்ந்த காடுகளிலும், குறுங்காடுகளிலும் வாழும் பறவையாகும். மேலும் காடுகளிலேயே காணப்படுவதால் கானக்கோழி, கான வாரணம் என்றும் அழைக்கப்பட்டுள்ளன. இதன்

கழுத்துப் பகுதியில் வெள்ளையும் கறுப்பும் கலந்த கழுத்துத் தூவிகள் இருப்பதால் பொறிவரிகள் உள்ளதையே இலக்கியங்களும் சுட்டிகாட்டியுள்ளன. எடுத்துக்காட்டாக,

**"பொறிகிளர் சேவல் வரிமரற் குத்த**
**நெறிதூ ரருஞ்சுரநா முன்னி..." (ஐந்.எழு.31)**

என்ற பாடலில் தலைச் சூட்டான் விளங்கா நின்ற காட்டுக் கோழியானது வரிகளை உடைய மருள் செடியைக் கொத்துவதால், பாலை நில வழியானது தூர்ந்து போகும் என்று தலைவி கூறுவதன் மூலம் வருத்தத்துடன் அறியாமை வெளிப்படுவதை உணரலாம்.

**கொக்கு**

கொக்கினைக் குறித்து நாம் அறிந்திருப்பினும் கொக்கு குறித்து பி.எல்.சாமி அவர்கள் "கொக்கு என்ற பறவையை நாட்டு மக்கள் நன்கு அறிவர். இதைக் குளக்கொக்கு என்றும், நுள்ளைமடையான் என்றும், குருட்டுக்கொக்கு என்றும் அழைப்பர். கொக்குப் போல வெள்ளை என்று ஒப்பிடுவதுண்டு. ஆனால் கொக்கு முற்றிலும் வெள்ளை நிற முடையதன்று. வெள்ளைக் கொக்குகள் என்றழைக்கப்படும் வெண்குருகுகள் உடல் முழுவதும் தூய வெள்ளையாகக் காணப்படும். ஆனால் கொக்கிற்கு அடிப்பாகந்தான் தூய வெள்ளையாகக் காணப்படும். எனினும் கொக்கு பறக்குங்கால் வெண்மையாகக் காணப்படுவதால் கொக்கை வெள்ளை நிறமுடையதென்று கருதுகின்றனர்"[41] என்று அறியமுடிகிறது. இக் கொக்கினைப் பயன்படுத்தி திருவள்ளுவர்,

**"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த இடத்து" (குறள், 490)**

என்று ஒடுங்கிய காலத்தில் கொக்கு போன்று இருக்க வேண்டுமென்றும், சிறந்த காலத்து அதனுடைய குத்து போன்று இருக்க வேண்டுமெனக் கூறியுள்ளார்.

**கொற்றப்புள்**

கொற்றப்புள் என்றால் வெற்றியைக் குறிக்கும் பறவையாகும். இதற்கு காரி என்றும் பெயருண்டு. போருக்கு செல்லுகையில் இதனைக் கண்டால் வெற்றிவரும் என்ற நம்பிக்கை நிலவுவதை,

**"........................................கொற்றப்புள்**
**ஊர்ந்துலகம் தாவின அண்ணலே.........." (பழ.178)**

என்ற பாடல் வரிமூலம் அறியமுடிகிறது. ஆக பழந்தமிழரிடம் கொற்றப்புள் நிமித்தம் கூறும் பறவையாகக் கருதப்பட்டிருப்பதையும் காணமுடிகிறது.

**சிரல்**

இலக்கியங்களில் மீன்கொத்தியை சிரல் என்று புலவர்கள் அழைத்துள்ளனர். இதன் செயலாக தமிழ்நாட்டுப் பறவைகள் என்னும் நூலில் க.ரத்னம் அவர்கள் "நீர்வளம் மிக்க பகுதிகளில் தனித்துத் தாழ்வான மரக்கிளையிலோ வரப்பிலோ குளங்களின் கரைக்கற்கள் மீதோ அமர்ந்து நீர்ப்பரப்பை நோட்டம் விட்டபடி இருக்கும் மீன் தென்பட்டவுடன் பாய்ந்து அலகால் மீனைப் பற்றியபின் முன் அமர்ந்திருந்த இடத்திற்குத் திரும்பிப் பிடித்த மீனை விழுங்கும். இதன் உடல் அளவில் பாதி நீளமுள்ள சற்றுப் பெரிய மீன்கள், பிடிபடும் போது தலையை அப்படியும் இப்படியுமாக ஆட்டி, பிடித்த மீனைச் செயலிழக்கச் செய்தபின் விழுங்கும்"[42] என்று கூறியுள்ளார். ஆழ்ந்த நீர்நிலையில் உள்ள கெண்டைமீனைக் குத்துவதற்குப் பார்த்திருக்கும் நீலனிறச் சிறிய சிரல் பறவை போல, யானை வீரன் பிறர் வாய்ப்பட்டழிதல் உறுதி என்று கூறுவதை,

**"குண்டுநீர்க் கிடங்கிற் கெண்டை பார்க்கும்**
**மணிநிறச் சிறுசிரல் போல நம்**
**அணி நல் யானைக் கூறளக்கும்மே"**

**(தகடூர் யாத்திரை- தானை மறம் - 8)**

என்ற பாடலில் காணலாம். இஃது பகைப் படையின் களிறுகளை அளவிட்டுக் கண்டு ஆர்த்து வரும் வீரனைக் கண்ட பகைப் படை வீரருள் ஒருவன் தன் வீரரை நோக்கி சிரல் பறவையை இவ்வாறு உவமைப் படுத்தியுள்ளது இன்பம் பயப்பதாக உள்ளது.

**பருந்து**

தென்னிந்தியா முழுவதும் பருந்துகள் காணப்படுகின்றன. இவை இறக்கை அடித்தும், மிதந்தும் பறக்கும் தன்மையுடையது. இஃது வேட்டைக்காரப் பறவைகளுள் ஒன்றாகும். கோழிக் குஞ்சுகள், புறாக்குஞ்சுகள், ஓணான் போன்றவற்றை உயிருடன் வேட்டையாடி உண்ணும் ஊன் உண்ணி என்பதை,

**"கைவாயிற் கொண்டெழுந்த செஞ்செவிப் புன்சேவ**
**லைவாய் வயநாகங் கவ்வி விசும்பிவருஞ்**
**செவ்வா யுவணத்திற் தோன்றும்" (களவழி.26)**

என்ற பாடல் வரிகளில் செங்கட் சோழன் அட்டகளத்தில் துணித்த கைகளைச், சிவந்த செவிகளை உடைய பருந்தின் சேவல்கள் வாயில் கவ்விக் கொண்டு வானில் பருந்து செல்வது, ஐந்து வாயையுடைய பாம்பைக் கவ்விக்கொண்டு செல்லும் சிவந்த வாயையுடைய கருடனைப் போல தோன்றா நிற்கும் என்று பருந்திற்கு கருடப்பறவையை உவமையாகக் கூறுவது போன்று மன்னனின் போர்த்திறம் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

**புறா – சிற்றெழால்**

இலக்கியங்களில் எழால் என்று கூறப்பட்டுள்ள பறவை தற்போது காணப்படும் வல்லூறுவைக் குறிக்கும். இவ்வல்லூறு சிறு பறவைகளை அடித்துத் தின்னும் சக்தி வாய்ந்தது. எழாலுக்குப் புறாக்களே அதிகமாக உணவாகின்றது. இதனால் மலையாளத்தில் இதனைப் புறாப்பிடியன் என்றும் அழைப்பர். எழாலில் சிற்றெழால், குடுமி எழால் என்ற வகையும் உண்டு. மேலும்,

**"சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறு**
**நெறியரு நீள்சுரத் தல்குவர்….." (திணைமாலை.15)**

என்ற பாடலில் புல்லிய புறாக்களோடு, சிறிய எழால் என்னும் ஒருவகைப் பறவை சினந்து போர் புரியும் பாலைநிலம் என்று செல்வத்தின் கண் விருப்பம் மிகுதியாகவுடைய தலைவனைப் பிரிந்த தலைவி பறவை இனங்களையும், சுரத்தின் கொடுமையையும் கண்டு தலைவன் மனம் மாறி விரைவில் வருவான் என்ற நம்பிக்கையுடன் இருப்பதாகக் கூறியிருப்பதைக் காணமுடிகிறது.

**பூணி –கம்புள்**

தமிழ் இலக்கியத்தில் பறக்கும் வாத்து இனமாகப் பூணி என்னும் பறவை கூறப்பட்டுள்ளது. இதனை சாமி அவர்கள் "கதிர் போன்று மேலெழும்பிய பூணையுடையது இந்தப் பறவை என்று தெரிகின்றது. இந்த வகையான பூணையுடைய பறவை காட்டு வாத்து இனத்தில் ஒன்று உள்ளது. இதைத் தற்காலத்தில் மூக்கன் தாரா என்று தமிழில் அழைக்கின்றனர்"[43] என்று கூறியுள்ளார். அதே போல சம்பங்கோழி என்று வழங்கப்படும் கம்புள் குறித்து "சண்பு நிறைய இருந்த சீர்காழி சண்பை என்றழைக்கப்பட்டது. சண்பில் இருந்த கோழியும் சண்பங்கோழி, சம்பங்கோழி எனப்பட்டது. ஆதலின் கண்பு + புள் என்பதே கம்புள் ஆயிற்று என்பது தெரிகின்றது"[44] என்றும் கூறியிருப்பதை,

**"கதிர்த்ததன் பூணி கம்புள் தாழ் பீலிக்**
**கனைகுரல் நாரை வண்டானம்" (சீவக.2108)**

என்ற சீவக சிந்தாமணி பாடலில் செம்பங்கோழி, வாத்தியம் போன்ற குரலையுடைய நாரையுடன் பூணியும் , கம்புள் பறவையும் நீா நிறைந்த ஆற்றங்கரையில் இருக்கும் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் தற்போது பூணி, கம்புள் ஆகிய இரண்டு பறவைகளும் இல்லை என்பது வருந்துதற்குரியதாக உள்ளது.

**மலையுறைக்குருவி**

போர்க்களத்தில் பகைவரைக் கொன்ற அம்புகள் உடலை மொய்த்து மறைத்ததால், அவை மலைகளில் வாழும் அளவில்லாத குருவிக் கூட்டம் மொய்த்திருப்பதைப் போன்று இருக்கும் என்று கூறப்பட்டுள்ளதை,

**"......கண்ணேர் கடுங்கனை மெய்ம்மாய்ப்ப – வெவ்வாயு**
**மெண்ணருஞ் குன்றிற் குரீ இயினம் போன்றவே" (களவழி.8)**

என்ற பாடல் வரிகள் விளக்குவதை உறுதி செய்யுமாறு "இந்தக் குருவிகள் செங்குத்தான மலையில் தம்முடைய வாயிலிருந்து வரும் பிசின் என்ற எச்சிலால் ஒட்டவைத்த கொட்டாங்கச்சி போன்ற பல கூடுகளில் ஆயிரக்கணக்காகத் தங்கி வாழும். பகலில் பல கி.மீட்டர்கள் இரை தேடச்சுற்றின பறவைகள் அந்திக்காலத்தில் இனமாகச் சேர்ந்து ஆயிரக்கணக்காகக் கூடும். கடும் விரைவாகப் பறந்து செல்லும்"[45] என்று கூறியிருப்பது பொருத்தமுடையதாக உள்ளது.

**மயில் - குயில்**

நமது தேசியப்பறவையாகக் கருதப்படும் மயிலில் ஆண் மயிலுக்கும் பெண் மயிலுக்கும் உருவத்தில் வேறுபாடுகள் உண்டு. இவை தென்னிந்தியா முழுவதிலும் கோவில்களிலும், இயற்கையில் வறண்ட பகுதிகளிலும், காட்டாற்றின் கரைகளிலும், மலைச்சரிவுகளிலும் காணப்படும். மேலும் "மயிலின் பார்வையும், கேட்கும் ஆற்றலும் மிக நுட்பமானது. அரவம் கேட்டாலும் கழுத்தை நீட்டித், தலையைத் தூக்கிச் சுற்றிலும் கவனமாக நோட்டம் விட்டுப் பார்க்கும். ஆபத்து என்று உணர்ந்தால் வேகமாக ஓடித் தப்ப முயல்வதே இதன் இயல்பு"[46] என்று மயில் குறித்தும் "மரங்களில் இலைகளுடேயும், புதர்களிலும் தனித்து திரியும், கூவும் போது இலைகளற்ற உயர்ந்த கிளைகளில் அமர்ந்து கூவும். சற்று நேரம்

அமைதியாக இராமல் கிளைக்குக்கிளை தாவியபடி இருக்கும்”[47] என்ற குறிப்புகளோடு மயிலின் அழகிய நடனம் பற்றியும், குயிலின் சீழ்க்கை ஒலி போன்ற இனிய குரலையும் பற்றியும் திணைமாலை ஐம்பதில்,

**“மயில்கொன் மடவாள்கொல் மாநீர்த் திரையுட்**
**பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர்-குயில் பயிரும்”**

**(திணைமாலை.49)**

என்று பூக்கள் நிறைந்த சோலையில் குயில்கள் கூவி விளையாடும், அங்கு தோகையுடன் கூடிய மயிலோ அல்லது இவ்வுலகப் பெண்தானோ என்று அஞ்சும் படி நின்ற தலைமகள் குறித்து தலைமகன் பாங்கனிடம் சொல்லியதை இப்பாடல் வரி மூலம் அறியலாம்.

**தூக்கணங்குருவி**

தூக்கணங்குருவியை இலக்கியங்களில் முதுக்குறை குரீஇ, கன்னல் என்னும் சிறு குருவி, வான் குருவி, மஞ்சள் குருவி என்றும் குறிப்பிட்டுள்ளனர். இப்பறவையின் கூடு மனிதர்களால் கூட கட்டமுடியாத வகையில் வேலைப்பாடுகள் நிறைந்ததாகக் காணப்படும். இதற்கு பி.எல்.சாமி அவர்கள் “ஆண் குருவி கூடுகள் கட்டிப் பெண் குருவிகளைக் கவர்ச்சி செய்யும். எந்தப் பெண் குருவி கட்டிய கூட்டை ஏற்றுக்கொள்கின்றதோ அதனுடன் சேர்ந்து கூடிவாழும்”[48]. இவ்வாறு,

**“வான்குருவிக் கூடரக் வாலுலண்டு கோற்றருதல்**
**தேன்புரிந் தியார்க்குஞ் செயலாக.........” (சிறுபஞ்.27)**

தூக்கணங் குருவியினாற் கட்டப்பட்ட கூடும் எந்த ஒரு குறையும் இன்றி அருமையாக அமைக்கப்பட்டிருக்கும். இக் கூட்டின் அமைப்பு பற்றி கோவை சதாசிவம் “தென்மேற்கு பருவமழை தொடங்கும் நாட்களில் தமது காதல் மாளிகையை கட்டமைக்கின்றன தூக்கணங்குருவிகள். எல்லாப் பறவைகளும் கூடுகளைக் கட்டுகின்றன. தூக்கணங்குருவிகள் தான் பனைமரத்தின் கீற்றுக்களை நூல் நூலாகக் கிழித்து தலை கீழாக தொங்கிய படி மிகவும் நேர்த்தியான உள்ளீடற்ற வலம்புரி சங்கு வடிவத்தில் ஓர் உறைவிடத்தை நெய்கிறது”[49] என்கிறார்.

**பூ நாரை**

உடல் முழுவதும் வெண்மையாகவும், இறகுகள் சிவப்பாகவும், அலகுகள் வெளிர் சிவப்பாகவும் இருக்கும். எப்போதும் கூட்டமாகவே காணப்படும். இவை பறக்கும் போது V வடிவில் கழுத்தை முன் நீட்டிக் கொண்டு கூட்டமாகப் போகும் என்று பறவை நூலார் கூறுவர். தலைவன் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிந்த காலத்தில் பிரிவு நீட்டித்ததால் தலைமகள் வருந்தி நாரையை விழித்துக் கூறுவதாக,

**"சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்**
**இறுமென் குரலநின் பிள்ளைகட்கே யோகி" (ஐந்.எழு.66)**

என்ற பாடலில் சிறிய மீன்களை அலகிடையே வைத்துள்ள சிவந்த இறகுகளையுடைய நாரையிடம் தலைவி, உன்னுடைய குஞ்சுகளின் ஒலியினைக் கருதி மீன்களைக் கொல்லும் களவு காலத்தில் நீ அலைந்து செல்லும் நீரினையுடைய கடற்கரைத் தலைவன் என்னை விட்டுப் பிரிந்த முறையினை நீ நன்கு அறிவாய் என்றும் ஆதலால் நாரையே தனக்கு சான்றவாய் என்று நலிந்து கூறியுள்ளதன் மூலமாக அஃறிணை உயிர்களைச் சான்றாகக் கூறும் பேதைமைத் தன்மை உடையவளாகத் தலைவியிருப்பதை அறியலாம்.

**வானம்பாடி**

மேகத்தை நோக்கிப் பாடும் இயல்புடைய பறவை என்பதை இதன் வானம்பாடி என்னும் பெயரே நமக்கு விளக்கிவிடுகிறது. வானம்பாடியின் வகை புதர் வானம்பாடி, சிவப்புத்தலை வானம்பாடி, கொண்டை வானம்பாடி எனப் பல வகைகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. முன்திட்டம் ஏதுமில்லாமல் இயல்பாக வெளிப்படும் இதயம் நிறைந்த கலை வெளிப்பாடு என்று வானம்பாடியின் பாடலைப் பற்றி ஷெல்லியும், வானம்பாடியின் பாடல் மிகப் பெரிய மகிழ்ச்சி தந்ததாக வேர்ட்ஸ்வொர்த்தும் குறிப்பிட்டுள்ளதை,

**"துளியுண் பறவைபோல் செவ்வனோர்ப் பாடும்**
**எளியாரை எள்ளாதாரில்" (பழ.249)**

மழைத்துளியை உண்ணும் பறவையாகிய வானம்பாடி போல் ஒரு பங்கு ஓடாமல் செவ்வையே பார்ப்பாருள்ளும் எளியாரை இகழாதவர் இல்லை என்று பழமொழி நானூறில் கூறப்பட்டுள்ளது.

### தனிப்பாடல் திரட்டில் உயிரினப்பதிவு

உலகில் உள்ள உயிரினங்களின் வகைகளையும், அவற்றின் இயல்பினையும் அறிந்து கொள்வதற்குத் தனிநூல்கள் பழந்தமிழில் இல்லையெனினும், நுண்ணிறிவு சான்ற நூலறிவு புலவர்கள், தாம் இயற்றிய பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் பலவகையான உயிர்களைப் பற்றி,

> **"ஊர்வன பதினொன்றா மொன்பது மானுடம்**
> **நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்துச் சீரிய**
> **பந்தமாம் தேவர் பதினா லயன் படைத்ததை**
> **அந்தமில் சீர் தாவரமா லைந்து"** (தனிப்பாடல்)

என இங்கு உயிரினங்களின் வகை தொகை வடிவில் கூறப்பட்டுள்ளது. அஃது ஊர்ந்து செல்லும் பாம்பு முதலியன 11 லட்சம் வகை, மனிதர்கள் 9 லட்சம் வகை, நீர்வாழ் உயிர்கள் 10 லட்சம், பறவைகள் 10 லட்சம், விலங்குகள் 10 லட்சம், தேவர்கள் 14 லட்சம், தாவரங்கள் 20 லட்சம் என்பது உலகுயிர்களின் வகை 84 லட்சமாகும். ஆனால் இக்கணக்கெடுப்பை ஒரு யூகமாகத் தான் கூற முடியும். என்னும் கூற்றுப்படி "இவ்வுலகிடைத் தோன்றும் உயிர்கள் அனைத்தும் நால்வகைத் தோற்றத்து, எழுவகைப் பிறப்பினுள் எண்பத்து நான்கு நூறாயிர வேறுபாட்டுடன் தோன்றுகின்றன என்பது பண்டையோர் கண்ட உண்மை"[50] என்று மறைமலையடிகள் விளக்கம் கொடுத்துள்ளார்.

### பறவைகளைப் பற்றிய புராணச் செய்திகள்

**'மித்'** (myth) என்னும் கிரேக்கச் சொல்லில் இருந்து உருவானதே தொன்மம் அல்லது புராணமாகும். புராணக் கதைகள் கற்பனையின் வாயிலாகத் தோன்றியது. இவை மரபு வழியாகக் கூறப்படுவது. புராணம் என்பதற்கு தொன்மையானது என்று பொருள். புராணம் என்பது ஒரு வடமொழிச் சொல்லாகும் இதற்கு இணையாக தமிழில் தொன்மம் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இத்தொன்மம் என்ற சொல் தொல்காப்பியரின் காலத்திற்கு முன்பே இருந்திருப்பதை,

> **"தொன்மம் தானே உரையோடு புணர்ந்த**
> **பழமை மேற்றே"**

என்ற நூற்பா மூலம் அறியலாம். மேலும் பரிபாடலில் செவ்வேள், திருமால் பற்றிய பாடல்களில் புராணச் செய்திகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன.

தாயின் துன்பத்தைத் தீர்க்கும் பேற்றினைப் பெற்றவன் கருடன். கருடனின் செயலைப் போற்றும் வகையில் திருமாலின் ஊர்தியாகவும், கொடியாகவும் கருடச் சேவல் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அத்தகைய கருடனின் தாய் பற்றினை,

**“ஏஎர், வயங்குபூண் அமரரை வௌவிய அமிழதின்**
**நிவந்து ஓங்கு உயர்கொடிச் சேவலோய்”**

என்ற பாடலில் கருடனின் தாயான வினதையின் தாய் சூழ்ச்சியின் காரணமாக கத்துரு என்பவளிடம் அடிமையானாள். அவள் தேவாமிழ்தத்தைக் கவர்ந்து வந்து தந்தால் வினதையை விடுதலைச் செய்வதாகக் கூறிய செய்தியை தாயின் மூலமாக அறிந்த கருடன் அமிழ்தத்திற்குக் காவலாக இருந்த வேர்களை விரட்டிவிட்டு, அமிழ்தத்தினைக் கொண்டு வந்து தன் தாயை அடிமைத் தளையிலிருந்து மீட்டதாகக் குறிப்பிடுகிறது. இதே போன்று திருமால் கருடச் சேவலின் செருக்கினை அழித்ததாகப் பரிபாடலில் வரும் புராணச் செய்தியை,

**“ஆயிர அணந்தலை அரவு வாய்க் கொண்ட**
**சேவல் ஊர்தியும், செங்கண் மாஅல்**
**ஓ! எனக்கிளக்கும் கால முதல்வனை**
**ஏஎ இன கிளத்தலின் இனைமை நற்கு அறிந்தனம்” (பரிபா. 9)**

என்ற பாடலில் திருமால் அசுரரை வென்றபோது, அவ்வெற்றியானது திருமாலுடையது இல்லை என்றும் அவரைத் தாங்கிச் சென்ற தனக்கே அவ்வெற்றி என்று செருக்குடன் இருந்தது. திருமால் அதன் செருக்கை அழிக்க தன் விரலின் ஒரு பகுதியைத் தாங்கினால் தான் தோல்வியை ஏற்றுக் கொள்வதாகக் கூறியதற்கு கருடனும் ஒப்புக் கொண்டது. பின் திருமால் கருடனின் மீது விரல் வைத்த உடன் தாங்க முடியாத கருடன் பாதாளத்தில் வீழ்ந்து அலறியது. இதனால் தன் இயலாமையை ஒப்புக்கொண்டது என்பதன் மூலம் கருடச் சேவலின் செருக்கினைத் திருமால் அழித்ததைக் காணமுடிகிறது.

“உலகத்திலுள்ள மதங்களில் பல பறக்கும் தெய்வங்கள் கொண்டிருப்பது காணலாம். பழைய கிரேக்கர்கள் ஒரு தெய்வம் பறக்கும் குதிரை மீதேறிச் செல்லும் என்று குறிப்பிட்டார்கள். அந்தக் குதிரைக்கு இறக்கைகள் உண்டு எனக் கூறினார்கள். சூரியக் கடவுளாகக் கிரேக்கர்கள் கொண்டிருந்த ஹீலியோசின் மகன் பியேட்டன், பெகாசஸ் என்ற இறக்கைகள் கொண்ட குதிரைகள் பூட்டிய இரதத்தில் ஏறிச் சென்றதாகக் கிரேக்கப் புராணம் கூறுகிறது”[51].

இந்திய நாட்டில் இராமாயணக் கதையில் அனுமான் இலங்கையிலிருந்து வானில் பறந்து சென்று சஞ்சீவி பர்வதத்தைக் கொண்டு வந்தார் என்று பேசப்படும்.

**"குருகொடு பெயர் பெற்ற மால் வரை உடைத்து" (பரிபா.6)**

**"வளம் கெழு செல்வன் தன் மெய்யின் பிரித்துத்**

**திகழ் பொறிப் பீலி அணி மயில் கொடுத்தோன்.." (பரிபா.5)**

**"மண்மிசை அவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்**

**புள்மிசைக் கொடியோனும்............" (பரிபா.8)**

இப்பாடல் வரிகளில் கிரௌஞ்சப் பறவை தமிழில் அன்றிற்பறவை என்று வழங்கப் பெறுகிறது. இந்த அன்றில் பறவையின் பெயருடைய கிரௌஞ்ச கிரியை முருகப் பெருமான் பிளந்து வழியை ஏற்படுத்தினார் என்ற குறிப்பு காணப்படுகிறது. செல்வத்தில் சிறந்த இந்திரன் தம் மெய்யினின்று ஒரு கூற்றைப் பிரித்து மயிலாக மாற்றி முருகனுக்குக் கொடுத்ததாகக் கருத்துக்கள் உள்ளன. மலர்ந்த துளசி மாலையையும் உயிர்க்கு வழங்குவதற்கு வேண்டிய செல்வத்தையும் கருடன் எழுதப் பெற்ற கொடியை உடைய திருமால் என வருணனைக் கூறப்பட்டுள்ளது. தேவரிடமிருந்து அமிழ்தத்தைக் கொணர்ந்து தன் தாயின் துன்பம் அகற்றிய கருடனை ஊர்தியாக உடைய திருமால் எனக் கூறப்பட்டுள்ளது. மேலும்,

**"ஓங்கு உயர் கொடிச் சேவலாய்................"**

**"......அணர் தலை அரவு வாய்க் கொண்ட**

**சேவல் ஊர்தியும்............................." (பரிபா.3)**

**"சேவல் ஓங்கு உயர் கொடியோயே**

**சேவல் ஓங்கு உயர் கொடி......"**

**"அரவின் உடல் உயிர் உருங்கு உவணம்" (பரிபா.4)**

திருமாலுக்கு பல கொடிகள் இருந்தாலும் கருடன் வரையப்பட்ட கொடியே அவனுக்குரிய சிறந்த கொடியாகக் கருதப்பட்டதாகவும் பரிபாடல் குறிப்பிடுவது போன்று,

**"..............................சேவலங்**

**கொடியன் நெடியன் தொடி அணி தோளன்" (திருமுரு.210)**

என்று வேலனைக் குற்றம் இல்லாத கோழிக் கொடியை உயர்த்தியவன் என்றும் நெடியவன் என்று திருமுருகாற்றுப்படை கூறியுள்ளது. மேலும்,

**"மா விசும்பு ஒழுகு புனல் வறள அன்னச்**
**சேவலாய்ச் சிறகர் புலர்த்தியோய்.........." (பரிபா.3)**

ஊழி மழையால் நிலம் முழுகிப் போகாமல் இருக்க இறைவன் அன்னச் சேவலாய் மாறி தன் சிறகால் அந்நீரை வற்றும் படி செய்தார் என்றும் புராணச் செய்திகளில் பறவைகள் பற்றிய குறிப்புகள் கூறப்பட்டுள்ளன.

**கவிஞர்களின் பார்வையில் பறவை**

கவிஞர்கள் மனிதர்களின் கோளாறுகளையும், கோணல் புத்திகளையும், வேறுபாடுகளையும் சுட்டிக்காட்ட பறவைகளை முன்னுதாரணமாகப் பயன்படுத்துகின்றனர். அவ்வகையில் மனித குல ஒற்றுமைக்குக் கவிஞர்கள் காக்கையைத்தான் அதிகமாகப்பாடியுள்ளனர்.

**"காக்கைச் சிறகினிலே நந்தலாலா"**

என்று பாரதியும், மனிதன் எவ்வாறு தனது வாழ்க்கையை வாழ வேண்டும் என்பதற்கு பாரதிதாசன் காக்கையை உதாரணமாக,

**"காக்கையிடத்தில் உள்ள ஒற்றுமை கண்டு – நீ**
**வாழ்க்கையில் நடந்தால் நன்மைகள் உண்டு"**

என்றும் கூறியுள்ளதைப் போன்று, ஒற்றுமையின் சின்னம் காக்கை என்பதை பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்,

**"வரிசை தவறாம குந்திக்கிட்டதாம்**
**வந்ததுக் கெல்லாம் இடம் தந்துக்கிட்டதாம்**
**மனுஷனைக் கேலி பண்ணிக்கிட்டதாம் - அவன்**
**வாழ்க்கையின் கோணலை எண்ணிக்கிட்டதாம்"**

என்று கூறியுள்ளார்.

இவ்வாறு பறவைகளின் வாழ்க்கையை மனித வாழ்வியலுக்கு ஒப்புமைப்படுத்திப் பேசுவதை தமிழ் இலக்கியம் முழுவதும் காணமுடியும். எடுத்துக்காட்டாக காக்கைகள் ஒற்றுமைக்கும், ஜோடிப்புறா காதலின் பெருமைக்கும், குருவிகள் சுறு சுறுப்பிற்கும், கொக்குகள் காத்திருப்பதற்கும், பருந்துகள் வலிமைக்கும், மயில்கள் பெண்களின் மென்மையான சாயலுக்கும், வானம்பாடிகள் மகிழ்விற்கும், கிளிகள் பேச்சிற்கும் ஒப்புமைப் படுத்திப் பாடல்கள் இயற்றப்பட்டிருப்பதைச் சொல்லலாம்.

**தொகுப்புரை**

❖ தொல்காப்பியரின் உயிரின வகைப்பாடு என்பது **'சூழலியல்'** கூறும் உயிர்காரணியாக அமைத்து ஓரறிவு உயிர் முதலாக ஆறறிவுயிர் வரைப் பாகுபடுத்தியுள்ளதை அறிந்து கொள்ளமுடிகிறது.

❖ தொல்காப்பியரைப் போன்றே அரிஸ்டாட்டிலும் உயிரினங்களின் உடற்பகுதியை அடிப்படையாக வைத்து அவற்றின் வாழ்வியல் பழக்க வழக்கங்களை வகைப்படுத்தியுள்ளதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது.

❖ தொல்காப்பியரின் உயிர்களின் உடற்கூறு பற்றிய ஆய்வு அறிவியல் அறிஞர்களாலும், சமூகவியல் மற்றும் மானுடவியல் வித்தகர்களாலும் இன்று பாராட்டப்படுகிறது என்பது அறியப்பட்டது.

❖ டார்வினின் பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டின் படி நீர் வாழ்வன, நீர் நில வாழ்வன, பறப்பன, பாலூட்டிகள், மனிதன் ஆகியவற்றின் கருவளர்ச்சியில் நெருங்கிய ஒற்றுமை இருப்பதாக அறிஞர்களின் கூற்றுகள் விளக்குகின்றன.

❖ பரிணாமக் கோட்பாடாக பெர்டினாண்டு, புரூனட், ஜான் அடிங்டன், சைமன் போன்றோர் இரு வேறு கொள்கைகளைக் கூறியுள்ளதைக் காணமுடிகிறது.

❖ பரிணாம வளர்ச்சி என்பது ஒரு நாளில் நிகழ்வது இல்லை என்றும் அ∴து பல ஆயிரம் ஆண்டுகள் அல்லது இலட்சம் ஆண்டுகள் நடைபெறும் என்றும் ஒரு பரிணாமம் குறிப்பிட்ட ஒரு நிகழ்வோடு நில்லாது நூற்றுக்கணக்கான முயற்சிகளாக நடைபெறும் என்றும் ஆய்வுகள் குறிப்பிடுகின்றன.

❖ அறிவியல் குறிப்பிடும் உயிர் விளக்கம் போன்று தமிழிலும் அசையும் பொருட்களையும், அசையாப் பொருட்களையும் பாகுபடுத்தி விளக்கியுள்ளதை அறியமுடிகிறது.

❖ உயிரினத் தோற்ற காலமாக பெருங்காலம், காலம், சிறுகாலம் எனப் பிரித்து அவற்றிற்கு தனித்தனிப் பெயர்கள் வரையறுக்கப்பட்டுள்ளதும் தெரிந்து கொள்ளப்பட்டது.

❖ ஊர்வன இனத்திலிருந்து தோன்றியதே பறவையினம் என்றாலும், ஊர்வன இனத்திற்கும், பறவையினத்திற்கும் ஒற்றுமைகள் இருப்பினும் மிகுதியான

ஒற்றுமை என்பது எழும்பு அமைப்பிலும், தசை அமைப்பிலும், முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் முறையிலுமே என்பது குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

- ❖ பறவைகள் உருவ அமைப்பில் ஊர்வன இனப்பிராணியாகத் தோன்றினாலும், வேறு உயிரினங்களுக்கும் இறக்கைகள் இன்றி பறவைகளுக்கு மட்டும் இறக்கைகள் இருப்பதால் இவை பறவை இனமாக பிரிந்துள்ளதை அறியலாம்.
- ❖ பூமியில் இது வரையில் 1,63,4000 வகைப் பறவைகள் தோன்றியிருக்கலாம் என்றும் அவற்றில் நூற்றில் ஒரு பங்கு பறவைகள் கூட இன்று இல்லை என்ற கூற்று பறவையியல் ஆய்வாளர்களிடையே காணப்படுகிறது.
- ❖ பல வண்ணங்களிலும், இனிமைக் குரலுடைய அழகிய உயிரினமாகக் கருதப்படும் பறவை கண்காணித்தல் என்ற பொழுது போக்கு நிலை தற்போது அறிவியல் கல்வி முறையாக மாறிவந்துள்ளது அறியப்பட்டது.
- ❖ உலகில் காணப்படும் ஒவ்வொரு உயிரினமும் ஒரு சிற்றுயிருடன் தொடர்பு கொண்டதாகவே இருக்கும். அவ்வகையில் சிறு உயிரியான பறவையும் பல உயிரிகளுடன் தொடர்பு கொண்டிருப்பதைக் காணலாம்.
- ❖ நமது இந்தியாவில் மனிதனின் பெருவிரல் அளவுள்ள தேன்சிட்டு முதல் ஆள்உயரம் கொண்ட சாரஸ் நாரை வரை உருவ அமைப்புடைய பறவைகள் இருப்பதை அறியலாம்.
- ❖ மனிதனிடம் தன்னைச் சுற்றி இருப்பதும், இயங்குவதுமான எண்ணங்கள் வழியாகத் தோன்றிய அறிவியலும், இலக்கியமும் ஒன்றொடு ஒன்று தொடர்புடையதாக இருந்துள்ளதை அறியலாம்.
- ❖ ஆதிமனிதன் அறிவியலை அறிந்திருந்ததற்கான சான்றுகள் அவர்கள் தகவல் தொடர்பிற்கு பயன்படுத்தி பாறை ஓவியங்கள் முதலாக இன்றைய இலக்கியங்கள் வரை சான்றுகள் காணப்படுகிறது.
- ❖ சங்க இலக்கியம் தவிர்த்து பிற இலக்கியங்களிலும் பறவைகள் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.
- ❖ திருவள்ளுவர் தனது திருக்குறளில் இரண்டு அதிகாரங்களில் அன்னம், காக்கை, கூகை, கொக்கு, மயில் போன்ற ஐந்து பறவைகள் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

**குறிப்புகள்**


1. சிவன்., சார்லஸ் டார்வின் உயிர்களின் மூலம், பக் -129
2. செங்குட்டுவன்.ப, டார்வின் ஆய்வும் விளைவும் பக் -123.
3. ஜான் சாமுவேல், இலக்கிய ஒப்பாய்வு களங்கள்., பக் -34
4. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -12
5. வலசை வீரபாண்டியன், வாழத்துடிக்கும் வனவிலங்குகள், பக் – 5
6. இளம்பூரணார்., தொல்காப்பியம் பொருளாதிகாரம் மரபியல்., பக் -445
7. கிரியா தமிழ் அகராதி., பக் – 202
8. சுசிலா அப்பாத்துரை., சுற்றுச்சூழல் கல்வி., பக் -84:58
9. சு.முத்து., காலந்தோறும் அறிவியல் தொழில் நுட்பம்., பக் -
10. ஜான் கென்னடி.,உயிரின் தோற்றம்.,பக் -15
11. கொடுமுடி சண்முகம், பட்டிப் பறவைகள்., பக் -52
12. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -6
13. மேலது., பக் -9
14. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -17
15. இராசு.பவுன்துரை., தமிழகப் பாறை ஓவியங்கள்.,பக் -110
16. மேலது., பக் -158
17. கு.அண்ணாதுரை., தமிழக அறிவியல் ஆசிரியர்மன்றம்.,பக் -15
18. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -13
19. என்.குழந்தை.,அறிவியல் ஆராய்ச்சிகள்.,பக் -3
20. உ.கருப்பணன்., பறவைகள் எப்படிப் பறக்கக் கற்றன., பக் -18
21. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -26
22. மேலது., பக் -27
23. மேலது., பக் -30
24. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக்க -31:32
25. தியேடோர் பாஸ்கர்., நம்மைச் சுற்றிக் காட்டுயிர்., பக் -1

26. இராஜேந்திரன்., உயிரியல் தாளமுறை., பக் -1

27. சு.தியேடோர் பாஸ்கரன்.,தாமரைப் பூத்த தடாகம்., பக் -70

28. மு.பொன்னுசாமி., அறிவியல் அணுகுமுறையில் ஆராய்ச்சியியல்., பக் -17

29. மலையமான்., உயிரியலில் ஓர் உலா., பக் -1

30. மேலது

31. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் - 3

32. பூ. அமிர்தலிங்கன்., வள்ளுவர் காட்டும் உயிரினங்கள், பக் - 79.

33. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் -96

34. கணிமேதாவியார்., திணைமாலை நூற்றைம்பது., பக் -141

35. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் -55

36. வேங்கடராமச் செட்டியார், பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள்., பக் -96

37. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் -123

38. பூ.அமிர்தலிங்கன்., வள்ளுவர் காட்டும் உயிரினங்கள், பக் -81

39. கு.ராஜாராம், பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -108

40. க.ரத்னம், தமிழ்நாட்டுப் பறவைகள், பக் -31

41. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் -14

42. க.ரத்னம்., தமிழ்நாட்டுப் பறவைகள்., பக் -85

43. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் -106

44. மேலது பக் -113

45. மேலது பக் -271

46. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் - 109

47. க.ரத்னம்., தென்னிந்தியப் பறவைகள்., பக் -246

48. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக் - 264

49. சதாசிவம்., ஊர்ப்புறத்துப் பறவைகள்., பக் -15

50. மறைமலைஅடிகள், மக்கள் நூற்றாண்டு உயிர் வாழ்க்கை- முதல் பாகம், பக் -3

51. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக் - 45

## இயல் - இரண்டு

# திணை அடிப்படையில் பறவைகள்

சங்கப் புலவர்கள் அரிய பல கருத்துக்களை தாம் இயற்றிய பாடல்களின் வழியாக வாரி வாரி வழங்கியுள்ளனர். உவமைகள், வருணனைகள் மூலமாக தம்மைச் சுற்றியுள்ள உயிரினங்கள் பற்றிய அறிவியற் செய்திகளை அனேகமாகக் கொடுத்துள்ளனர். அவற்றுள் பறவைகளை நுணுக்கமாகப் பார்த்துள்ளனர். பார்த்த பறவைகளைப் பற்றி கூறும் பொழுது அவை நம் வாழ்விற்கு எந்த அளவில் பயன்படுகிறது என்று ஆராய்ந்து கூறியுள்ளனர். பறவைகள் பற்றி கூறப்பட்டிருக்கும் எந்தவொரு செய்தியும் நேரடியானதாக இலக்கியங்களில் இல்லை. அவை உவமையாகவும், புனைவுகளாகவும் இலைமறை காயாகவும் கூறப்பட்டுள்ளதை இவ்வியலில் காணலாம்.

**ஐந்திணை விளக்கம்**

நிலத்தையும், பொழுதையும் அடிப்படையாகக் கொண்ட மனிதனின் இயற்கை வாழ்வியல் முறைத் திணைப்பாகுபாட்டிற்கு வழிவகுத்துள்ளது. நிலப்பகுதிகளில் நிலைத்து வாழ முனைந்த மனிதன் இயற்கையின் சூழலுக்கு ஏற்ப, தமிழகம் நான்கு நிலப் பிரிவுகளுடனே பகுக்கப்பட்டிருந்ததைத் தொன்மை மூலநூலான தொல்காப்பியத்தில்,

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (தொல்.பொ.அகத். 5)**

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் நிலப்பிரிவைப் பிரித்து வகைப்படுத்தியிருப்பதை,




என்று மேற்கண்டவாறு காடு, மலை, வயல், கடற்கரை என நானிலத்தை முதலில் கூறிப் பாலைக்கு தனியே நிலம் இல்லை என்றும் முல்லையும் குறிஞ்சியும் தனது நிலையில் இருந்து வறண்டு போன பின் தோன்றுவதே பாலை என்று திணைக்கோட்பாடு கொடுத்துள்ளார். இதனை "நிலத்தை நான்கு வகையாகப் பகுத்து நானிலம் என்று வழங்கும் மரபு உண்டு நால்வகை நிலங்களுள், மலையின்மையால் வறட்சியுற்றுக் கெடுவன குறிஞ்சியும் முல்லையும் ஆகும். அவ்வாறு கெட்ட நிலையில் அவை பாலை எனப்படும்"[1] என்று மு.வ அவர்களும், "பாரித்த வையத்தைப் பகுத்துச் சுட்டும் போதும், பகுத்து உணர்த்தும் போதும் இவ்வையம் புணர்ச்சி வையம், இவ்வையம் இருத்தல் வையம், இவ்வையம் ஊடல் வையம், இவ்வையம் இரங்கல் வையம் என்று கூறல் இயல்பு இல்லை, மாறாக இது மலைப்பகுதி, இது காட்டுப்பகுதி, இது கடற்பகுதி, இது வயற்பகுதி, இது மணற்பகுதி என்று கூறுதல் இயல்பு"[2] என்று க.ப.அறவாணன் அவர்களும் கூறியுள்ளனர். ஆகையினால் இந்நிலப்பகுப்பு இன்றளவும் ஆய்விற்குரியதாகவே உள்ளது.

சங்கப் பாடல்கள், ஏடுகள், உரைகள் போன்றவை தொகுத்து பகுக்கப்பட்ட காலங்களில் திணைப்பகுப்பு செய்யப்பட்டுள்ளதை, "அகநானூறு, ஐங்குறுநூறு இரண்டும் முறையே திட்டமிட்டுத் தொகுக்கப்பெற்ற, திட்டமிட்டுப் பாடப்பட்ட பாடல் மரபை உடையனவாக உள்ளன. அகநானூற்றில் ஒற்றைப்படை எண்ணில் வரும் பாடல்கள் எல்லாம் பாலை, 4ஆம் எண் பாடல்கள் முல்லை, 2.8ஆம் எண்ணுடைய பாடல்கள் குறிஞ்சி, 6ஆம் எண் பாடல்கள் மருதம், 10ஆம் எண் பாடல்கள் நெய்தல் எனப் பாடல் தொகையாக்கம் செய்யப்பட்டுள்ளன. இந்தத் திணைத் திணைப்பகுப்பு தொகையாக்கக் காலம் சார்ந்தது என்பதற்கு இந்த வைப்புமுறையே சிறந்த சான்றாக உள்ளது. ஐங்குறுநூறுப் பாடல்கள் திணைக்கு 100 எனத்

திட்டமிட்டுப் பாடப்பட்ட மரபை உடையனவாக உள்ளன. இவ்வாறே கலித்தொகையும் திணைவாரியான தொகுப்பாக அமைந்துள்ளது. எஞ்சிய குறுந்தொகையும் நற்றிணையும் தொகுக்கப்பட்ட காலத்தில் திணை வகுக்கப்படாதனவாக உள்ளன. உரையாசிரியர்களே இத்தொகைகளின் பாடல்களுக்குத் திணை குறிப்பிட்டுள்ளனர் என்பது பதிப்பாசிரியர்களின் கருத்து"[3] என்று பெ.மாதையன் கூறியுள்ளார்.

**முல்லை திணை**

காடும் காடு சார்ந்த பகுதியாகக் கருதப்படும் முல்லை நிலத்தில் இல்லறத்திற்குரியவர்களாகக் கருதப்படும் மகளிர் பொருளீட்டுவதன் பொருட்டு சென்றுள்ள தலைமகனின் வரவிற்காக இருத்தலும் இருத்தல் நிமித்தத்துடனும் ஆற்றியிருக்கும் மக்களின் வாழ்க்கை முறையால் இந்நிலம் முல்லை எனப் பெயர் பெற்றதாகக் கொள்ளலாம். இதனைத் தமிழண்ணல் "முல்லை என்ற சொல் முல்லைத் திணைப் பாடல்களில் பெரும்பாலும் மழைப் பருவத் தொடக்கத்தைக் கூறும் தொடர்பில் அறிமுகப்படுத்தப்படுகிறது"[4] என்றும் "முல்லை என்பது அழகான வெண்ணிற மலரைக் குறிக்கும் பெயராகும். இச்சொல் இம்மலர் மிகுதியாகக் காணப்படும் காட்டையும் அல்லது நிலத்தையும் குறிக்கும். அது மலரும் பருவம், பொழுது ஆகியவற்றின் தொடர்பில் அடிக்கடி குறிக்கப்பெறும் இச்சொல் இந்நிலத்தின் பாடல்களையும் குறிக்கும்"[5] என்று குறிப்பிட்டுள்ளார். இதேப் போன்று நா. செல்வராசு அவர்கள் "முல்லை என்பதும் கற்பு என்பதும் ஒன்றை ஒன்று சார்ந்து இருந்தமையைச் சங்கப்பாடல்கள் விளக்குகின்றன"[6] என்கிறார்.

இத்தகைய முல்லை நிலத்திற்குரிய பறவைகளாகக் காணப்படுபவை. வானம்பாடி, கானங்கோழி, மயில், சிவல், புறவு, கானவாரணம் போன்ற பறவைகளாகும். இவற்றில் சிவல் என்பது கௌதாரியாகும். புறவு மற்றும் கானவாரணம் இரண்டும் புறாவும், காட்டுக்கோழியும் குறிக்கிறது.

**காக்கை**

தலைவன் ஈட்டிவரும் பொருளைத் தலைவி தனது சுற்றத்தாருக்கும் கொடுத்து இன்புற்றிருக்க வேண்டும் என்பதைப் புலவர்கள்,

**"கொடுங் கண் காக்கைக் கூர் வாய்ப் பேடை**
**நடுங்கு சிறைப் பிள்ளை தழீஇக் கிளை பயிர்ந்து" (நற்.367)**

காக்கைப் பேடை தன் பிள்ளையைத் தழுவிக் கொண்டு கிளையை (கூட்டத்தை) அழைத்து வெண் சோற்றுத் திரளைக் கவர தனது மனையில் கூடி இருக்கும் என்று தலைவிக்குக் கூறிக் கணவன் கொண்டு வரும் பொருளை வாங்கி அதை வைத்து தலைவனோடு கூடி இருக்குமாறு கூறியுள்ளனர்.

**கிளி**

தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமையைக் கூறும் போது கிளியின் அலகையும் வர்ணித்துள்ளதை,

**"கிளி வாய் ஒப்பின் ஒளி விடு பல் மலர்" (குறுந்.240.)**

பசிய அவரைக் கொடியினது மலர்கள் கிளியின் அலகைப் போன்ற ஒளியை வெளிப்படுத்தும் வாடைக் காற்று வீசும் காலத்தில் வரைவிடை வைத்து பிரிந்த காலத்தில் தலைவி தன் ஆற்றாமையைக் கூறியதாக அமைந்த இப்பாடல் வரி மூலம் அறியலாம்.

**குயில்**

இன்னிசை எழுப்பும் குயிலின் குரல் பிரிந்து வாழ்பவர்களுக்கு கொடியதாக இருக்கும் என்பதை,

**"பிரிவில் புலம்பி நுவலும் குயிலினும்" (நற்.97)**

என்ற நற்றிணைப் பாடலில் கூவும் குயிலின் ஓசை பிரிவால் வருந்தும் எனக்கு கொடியது என்று தலைவி கூறுவதாக அமைந்திருப்பதைக் காணலாம்.

**குருவி**

மனிதர்களோடு இணைந்து வாழும் மனையுறைக் குருவியின் ஆண் குருவியானது தனது இணையைவிட்டு பிற பெடையோடு கூடியிருந்ததை உடற்குறியால் அறிந்த பெண் குருவி தனது குஞ்சுகளோடு சேர்ந்து தங்களது குடம்பைக்குள் வரவிடாமல் தடுத்ததாகவும், பின் ஆண்குருவி குளிரால் நடுங்குவது கண்டு மன்னித்து ஏற்றுக் கொண்டதையும் விளக்குவதாக,

**"உள் இறைக் குரீஇக் கார் அணற் சேவல்**
**பிலி புலத் துணையோடு உறை புலத்து அல்கி**
**...............குடம்பை கடிதலின்.." (நற்.181)**

என்ற நற்றிணையின் இப்பாடலில் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்ற கருத்தை பறவை இனமும் கடைப்பிடித்திருக்கிறது என்பதை நமக்கு உணர்த்துகிறது. இதனாலேயே புலவர்களும் பறவை இனம் காத்த ஒழுக்கத்தை மனித இனமும் காக்கத் தவறக் கூடாது என்பதை அறிவுறுத்தவே இவ்வாறு கூறியுள்ளனர் என்பதை அறியலாம்.

**மயில்**

மயில் எப்பொழுதும் வர்ணனைக்குரிய பறவையாகவே இருந்திருப்பதை நற்றிணைப் பாடலில்,

**"மயில் அடி இலைய மாக்குரல் நொச்சி" (நற்.115)**

என்று மயிலின் அடி போன்ற இலையையும் கரிய கதிரையுமுடைய நொச்சி, முல்லைக் கொடி அரும்போடு மலரும் என்று கார் பருவம் வந்தமைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**குறிஞ்சி திணை**

மக்கள் குழுக்களாகச் சேர்ந்து வேட்டையாடியவற்றை உண்டும் ஆண், பெண் என்ற பாகுபாடு இன்றி புணர்தலும் புணர்தல் நிமித்தத்துடனும் வாழத் தொடங்கிய மலையும் மலை சார்ந்த பகுதியே குறிஞ்சி நிலமாகும். குறிஞ்சி என்ற சொல் நிலம் பொழுதோடு, மலை சார்ந்த ஒரு தாவரக் கருப்பொருளையும், புணர்தல் என்ற உணர்ச்சியையும் குறிக்கக்கூடிய ஒரு சொல்லாகவே இருக்கிறது. இதனை "புலவர்கள் குறிஞ்சி மிகுதியாக இருக்கக்கூடிய மலைப் பகுதியை எடுத்துக் கொண்டதற்கு காரணம் தாம் கருதிய புணர்ச்சிப் பொருளின் பொருத்தப்பாட்டிற்கு பொருந்துவதே காரணமாகும். மலை நிலத்தில் இருக்கக்கூடிய குறிஞ்சியைத் தவிர மற்ற தாவரங்களைப் பெயர்த்து பிற நிலங்களில் வளர்க்கலாம் வளரும். ஆனால் குறிஞ்சித் தாவரம் மலை நிலத்தைத் தவிர மற்ற நிலங்களில் வளராது வளர்க்கவும் முடியாது. குறிஞ்சி மலையில் மலையோடு தான் சேர்ந்து வளரும். இதை நன்கு உணர்ந்த புலவர்கள் மானிடப் புணர்ச்சிப் பொருளான உணர்ச்சிப் பொருளை மலை நிலமான குறிஞ்சி நிலத்திற்குப் பொருந்தினர் எனலாம்"[7] என்று மு.கருப்பையா அவர்கள் குறிஞ்சி திணைக்கு விளக்கம் கொடுத்துள்ளார்.

இம்மலையும் மலை சார்ந்த நிலத்தின் பறவைகளாக கிளி, மயில், மஞ்ஞை போன்ற பறவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றில் மஞ்ஞை என்று கூறப்பட்டுள்ள

பறவையும் மயிலே ஆகும். ஆனால் குறிஞ்சி நிலத்திற்கே உரிய பறவையாகத் திகழ்வது கிளி எனலாம். இதற்கு சான்றாக ச.வே.சுப்பிரமணியன் "குறிஞ்சி நிலக் கருப்பொருளாகிய கிள்ளை- கிளி"[8] என்று குறிப்பிட்டுள்ளார்.

**அன்னம்**

அன்னப்பறவையை பார்த்து இரசித்துள்ள புலவர்கள் அன்னத்தின் தூவி குறித்து அகநானூற்று பாடலில்,

**"பசை கொல் மெல் விரல், பெருந்தோள்,புலைத்தி**
**துறை விட்டன்ன தூமயிர் எகினம்**
**துணையோடு திளைக்கும் .........." (அகநா.34)**

மெல்லிய விரல்களையும், பெரிய தோள்களையும் உடைய ஆடை வெளுக்கும் புலத்தி நீர்த் துறையில் அலசிவிட்ட கஞ்சிப் பசையினைப் போன்று அன்னத்தின் மயிர் தூய்மையுடையமாக இருக்கும் என்று குறிப்பிட்டுள்ளனர்.

**கிளி**

"எழிலான தோற்றமும் மகிழ்ச்சியுடன் அழகு பொங்கப் பறத்தலும் உடைய சிறிய பறவையான கிளி இலக்கியத்தில் சிறப்பிடம் பெறத் தகுதி வாய்ந்ததே. ஆனால் சங்க புலவர்கள் குயிலையும், மயிலையும், அன்றிலையும் சிறப்பித்துப் பாடியது போலக் கிளியைப் பாடவில்லை"[9] என்று மு.வரதராசன் அவர்கள் கூறியுள்ளதை மெய்யாக்கும் வகையில்,

**"சிறு தினைக் கிளி கடிந்து அசைஇ.." (நற்.25)**

கிளி குறித்த இப்பாடல் வரியும்,

**"குருவி ஆர்ப்ப குரல் குவிந்தன தினை" (பரிபா.18)**

குருவிகள் ஆரவாரம் செய்யுமாறு தினைக் கதிர்கள் விளைந்து காணப்படும் மலை என்று மலையின் பெருமையும் இடம்பெற்றுள்ள இப்பாடல்கள் விளக்குகின்றன.

**கூகை**

சங்கப் புலவர்கள் ஒவ்வொரு பறவையையும் உற்று நோக்கியிருப்பதை கூகையின் உடல் உறுப்புகளைக் குறிப்பிடும் வகையில் அமைந்த நற்றிணைப் பாடல் ஒன்றில்,

**"எம் ஊர் வாயில் உண் துறைத் தடைஇய**
**...அஞ்சு வரக் கடுங் குரல் பயிற்றாதீமே" (நற்.83)**

இரவுக்குறியில் வந்து செல்லும் தலைவனிடம் விரைவில் வரைவு (திருமணம்) செய்து கொள்ள வழி உண்டு செய்வதன் பொருட்டு, தலைவி வலிமை மிகுந்த கூகையிடம் தேயாத வளைந்த வாயையும், தெளிந்த கண்ணையும், கூர்மையான நகங்களையும் கொண்டுள்ளாய் ஆனால் உன் குரல் எழுப்பிப் பிறரை வருந்த செய்கிறாய் என்று கூறுவதாகவும், அவ்வாறு குரல் எழுப்பாமல் இருக்க ஆட்டு மாமிசத்தோடு நெய் கலந்த சோறும், வெள்ளெலியின் சூடான இறைச்சியும் தருகிறோம். தலைவனைப் பிரிந்து தூங்காமல் சுழலும் பொழுதில் உன் கடுங்குரலால் துன்புறுத்தாதே என்றும் தலைவன் கேட்கும் வகையில் தலைவி கூறியதாக அமைந்துள்ள இப்பாடல் வழி விளங்கிக் கொள்ளமுடிகிறது. மேலும்,

**"குன்றக் கூகை குழறினும் முன்றிற்**
**அஞ்சும்மன்...................என் நெஞ்சம்..." (குறுந்.153)**

நெடுங்காலம் தலைவன் வரைவிற்கு சம்மதிக்காமல் இரவுக்குறியில் மட்டும் வந்து செல்வது குன்றிலுள்ள பேராந்தை ஒலித்தாலும் என் நெஞ்சம் அச்சம் கொள்ளும் என்பதிலிருந்து ஆந்தையின் ஒலி அச்சத்தை உண்டு பண்ணுவதாக இருப்பதை குறுந்தொகைப் பாடல் மூலம் அறியமுடிகிறது.

**கொக்கு**

மீன்களைக் கவரும் கொக்குகள் அதை அங்கு வைத்து உண்ணாமல் வேறு இடத்திற்கு எடுத்துச் சென்று உண்டிருப்பதை,

**"செழுங் கோள் வாங்கிய மாச் சினைக் கொக்கினம்**
**மீன் குடை நாற்றம் தாங்கல் செல்லாது,**
**மந்தி தும்மும் நாட!" (நற்.326)**

பலா மரத்தின் கிளையில் கொக்குக் கூட்டம் மீன்களைக் கவர்ந்து கொண்டு வந்து உட்கார்ந்து குடைந்து தின்னும் போது ஏற்படும் புலால் நாற்றத்தைப் பொறுக்க முடியாமல் மந்திகள் தும்மும் என்று இப்பாடல் வரியில் கூறப்பட்டுள்ளது.

**கோழி**

காட்டில் வாழும் கோழிகள் துயில் கொள்ளுவதைக் கண்ட புலவர்கள் அதனை வாழ்வியலோடு இணைத்திருப்பதை,

**“சிதர் நனை முனை இய சிதர் கால் வாரணம்” (நற்.297)**

மழைத்துளியால் நனைந்த மலரை வெறுத்து மெல்லிய கால்களையுடைய கோழி முதிர்ந்த மிளகுக்கொடி ஒன்றோடு ஒன்று பின்னி இருப்பதில் துயிலும் என்று தலைவியை வெறுத்த தலைவன் அவன் ஊரிலேயே இருந்ததாகக் கூறும் நற்றிணைப் பாடல் வழி அறியலாம்.

**சிச்சலி**

மீன்களைப் பிடிப்பதில் சிறந்து விளங்கக் கூடியப் பறவையாக மீன்கொத்தியைக் கூறலாம். இதனை நற்றிணையில்,

**“சிரல் வாய் உற்ற தளவின் பரல் அவல்” (நற்.61)**

என்ற இப்பாடலில் மீன்கொத்திக் குருவியின் வாய் முல்லைக்கு வருணணையாகத் தலைவி தன் மனதுள் நினைத்து கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது.

**மயில்**

மயிலிற்கு அழகு என்றால் அது தோகையையே குறிக்கும். மயில் இத்தோகையை கண்டு பிற உயிரினங்களை அச்சம் கொள்ளும் என்பதற்கு அகநானூற்றில்,

**“விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ, அரவின்**
**அணங்குடை அருந் தலை பை விரிப்பவைபோல்” (அகம்.108)**

என்ற இப்பாடல் வரியின் மூலம் தோகையில் புள்ளிகள் விரவிக் கிடக்கும் மயிலினைக் கண்டு அஞ்சிய பாம்பு தனது படத்தினை விரிக்கும் என்பதும் மயிலின் அழகான தோகை பிற உயிரினங்களை அஞ்ச செய்வதாக இருப்பதையும் அறியலாம்.

**மருதத்திணை**

நாகரீகத்தின் பிறப்பிடமாகவும், ஆற்றங்கரையோரத்தில் வயலும் வயலைச் சார்ந்ததாகவும் இருக்கும் மருத நிலம் திருமணம் என்னும் நிலைபெற்ற

குடும்பவாழ்க்கை வாழ்வில் தலைவன் தலைவியிடையே தோன்றும் ஊடலும் ஊடல் நிமித்தத்தினால் இப்பெயர் பெற்றதாகவும், மருதம் எனும் சொல்லை,

**மரு + தம் = மருதம்**

எனப் பிரித்தால் **'மரு'** என்பது மணம் அல்லது **'வாசனை'** என்று தமிழகராதி குறிப்பிடுவதால், **'தம்'** என்பது சாரியையாக இருக்கிறது எனலாம். எனவே மணமிக்க மலராக உள்ளதால் அஃது **'மருதம்'** என்று பெயர் பெற்றிருக்கலாமோ என்று எண்ணத்தூண்டுகிறது. மருதமரம் ஆற்றோரப்பகுதிகளிலே காணப்பட்டுள்ளதை, "மருத மரத்தோடு தொடர்பு படுத்தியே பொய்கையும் துறையும் புனலும் வெள்ளமும் கூறப்படுவதையும் நோக்குக. இதன் காரணமாகவே வயலும் வயல் சூழ்ந்த இடமும் மருதம் என்று பெயரிடப்பட்டது. ஆற்றங்கரையோரம் வயலும் தோட்டமும் தோன்றியதனால் மருதத்திணையாகிற்று"[10] என்கிறார் பி.எல்.சாமி. அதே போல எ.பாலுச்சாமி அவர்கள் "உணவு தேடும் வாழ்க்கையிலிருந்து மானிட சமூகம் உணவு உற்பத்திக்கு மாறியது இந்த நிலப்பகுதியில் தான். குறிஞ்சி, முல்லை நிலங்களில் வாழ்ந்த மக்கள் தமக்கு வேண்டிய உணவுகளைத் தாமே உற்பத்தி செய்து கொண்டதில்லை. வேட்டைச் சமூகத்தில் விலங்குகளை வேட்டையாடி அவற்றின் மாமிசங்களை எல்லோருமாக பங்கிட்டு உண்டு வந்ததை வரலாறு காட்டுகிறது"[11] என்று மருதநிலச் சிறப்பை எடுத்துக்காட்டியுள்ளார்.

மருத நிலப் பறவைகளாக அன்னம், ஆண்டலை, கம்புள், குயில், குறும்பூழ், கூகை, சிரல், சேவல், நாரை, நீர் கோழி, வெள்ளாங்குருகு போன்றவற்றைக் கூறுகின்றனர். இதில் குறிப்பிடப்பட்டுள்ள குறும்பூழ் என்பதை "குறும்பூழ் - இக்காலத்துக் காடை எனப்படும் பறவை"[12] என்று ஆ.சிவலிங்கனார் அவர்கள் தொல்காப்பிய அகத்திணை உரைவளம் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

மருத நிலத்தில் காணப்படும் மீன்கொத்திப் பறவையின் செய்கையை அகநானூற்றுப் பாடல் ஒன்றில்,

**"காஞ்சி நீழல், தமர்வளம் பாடி**
**ஊர்க்குறு மகளிர் குறுவழி, விறந்த**
**இறாஅல் அருந்திய சிறுசிரல் மருதின்**
**தாழ்சினை உறங்கும்……" (அகநா.286)**

கஞ்சி மரநிழலில் அமர்ந்து இளம் பெண்கள் தம் சுற்றத்தாரின் செல்வப் பெருக்கு குறித்து பாடல் பாடி விளையாடுவர். அப்போது இறால் மீனைப் பிடித்து தின்ற மீன்கொத்திப் பறவை அவர்களின் பாடலைக் கேட்டுக் கொண்டு மருத மரக்கிளையில் அமர்ந்து உறங்கும் என்று கூறப்பட்டுள்ளது. இதே போன்று மீன் பிடிக்கும் கொக்கின் செயலை,

**"...............................இறைமிசை**
**மாரிச் சுதையின் ஈர்ம் புறத்து அன்ன**
**கூரல் கொக்கின் குறும் பறைச் சேவல்**
**வெள்ளி வெண் தோடு அன்ன, கயல் குறித்து**
**கள் ஆர் உவகைக் கலி மகிழ் உழவர்**
**காஞ்சி அம் குறுந் தறி குத்தி............" (அகநா.346.)**

கொக்கு குருகக் குருகப் பறக்கும் இயல்புடையது. இதன் இறகு மழைக் காலத்தில் வீட்டின் இறப்பில் சுண்ணாம்பு பூசி குளிர்ச்சியடைந்த மேலிடம் போன்று காணப்படும். இஃது உழவர் அமைத்துள்ள அணையின் மீது அமர்ந்து வழிந்து வரும் நீரில் வெள்ளியால் ஆன வெண்மையான கயல்மீனை குத்திப் பிடிக்க காத்திருக்கும் என்று மருதநில நிகழ்ச்சியைப் புலவர் காட்சிப்படுத்தியிருப்பதைக் காணலாம்.

**குருகு**

நற்றிணைப் பாடல் ஒன்றில் குருகு இனத்தைப் பயன்படுத்தி திருமாவுண்ணியின் நிலையை விளக்கியுள்ளதை,

**"எரி மருள் வேங்கைக் கடவுள் காக்கும்**
**குருகு ஆர் துழனியின் இதணத்து ஆங்கண்" (நற்.216)**

என்ற பாடல் வரிகள் வேங்கை மரத்தைத் தெய்வம் காக்குமிடத்தில், பறவைகள் நிறைந்த வயலில் அமைத்துள்ள பரணின் பக்கத்தில், அயலவனால் ஏற்பட்ட மனக்கவலையால், ஒரு முலை அருத்த திருமாவுண்ணியின் துயரைக் கேள்விப்பட்டோர் வருந்துவர். அவ்வாறு தலைவியின் நிலை குறித்து அவளை விரும்பியவரை தவிர மற்றவர் அவ்வளவாகத் துன்பமடையமாட்டார் எனப் பரத்தைக் கூற்றை விளக்கும் வகையில் கூறியிருப்பதில் குருகுப்பறவையை மையப்படுத்தியுள்ளனர். மேலும் ஞாயிறு மறையும் நேரத்தில் நிறைந்த சிறகுகளையுடைய நாரைக் கூட்டம் விசும்பிலே நெருங்கிப் பறந்து செல்வதாகக் கூறப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது.

**கூகை**

தலைவன் தலைவின் களவு வாழ்க்கை குறித்து அறிந்ததால் ஊர் மக்களிடையே தோன்றும் அலரை விளக்க,

**"கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்" (குறுந்.393)**

என்று கோட்டானாகிய கோழியை உடைய வாகை என்னும் இடத்தில் ஏற்படும் போர் வெற்றி ஆரவாரம் போன்று ஊர் அலர் மிகுதியானதைத் தோழி தலைவனுக்கு உணர்த்தியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**கொக்கு**

மழைக்காலங்களில் அதிகமாகக் காணப்படும் கொக்குகள் எவ்வாறு காட்சியளிக்கும் என்பதை,

**"உள்ளுதொறும் நகுவேன் - தோழி! – வள் உகிர்**
**மாரிக் கொக்கின் கூரல் அன்ன................" (நற்.100)**

இப்பாடல் வரியில் ஆம்பல் மலர் மலர்வதை பெரிய நகத்தையுடைய மழைக் காலக் கொக்கின் கூம்பு நிலை போல என்று கூறியுள்ளதன் மூலம் அறியலாம்.

**நெய்தல் திணை**

இரங்கலும் இரங்கல் நிமித்தமும் என்ற ஒழுக்கத்தைக் கொண்டுள்ள நெய்தல் நிலம் கடலும் கடல் சார்ந்த பகுதியுமாகும். இங்கு மக்கள் வருணபகவானைத் தங்கள் தெய்வமாக வழிபாடு செய்து வாழ்கின்றனர். இந்நெய்தல் நிலம் நிலத்தையும், மலரையும் குறிப்பது என்பதற்கு சான்றாக அமையும் வகையில் சங்க இலக்கியங்களில் "74 இடங்களில் நெய்தல் என்னும் சொல் வந்துள்ளது. அச்சொல், நிலத்தை உணர்த்தி ஐந்து இடங்களிலும், பூவை உணர்த்தி 69 இடங்களிலும் கையாளப்பட்டுள்ளது"[13] என்று தி.செல்வம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். நெய்தலை

**நெய்தல் = நெய் + தல்**

என்று பிரித்தால் நெய் என்பது எண்ணெய்ப் பொருளைக் குறிப்பதால் எண்ணெய் உடைய உயிரினமான மீனையும் நெய்தல் மலரையும் குறிப்பதாகக் கொள்ளலாம். இதற்கு "நெய் எனில் கொழுப்பு எண்ணெய் என்று பொருள்படும். கடலின்

உயிரினம் மீன், நெய் என்ற அடியொட்டியே மீன்களுக்குப் பெயர்கள் அமைகின்றன. நெய்மீன், நெய்வெட்டி, நெய்திருக்கை முதலிய பெயர்களை மீன்களுக்கு வழங்கி வருவது இவ்வுண்மையைத் தெரிவிக்கின்றது. நெய்த்தோலி என்ற மீன் தற்காலம் நெய்தலி என்று வழங்கி வருகிறது. நெய்மீனுக்கு நெய்நெட்டி(சம்பங்கோரை) என்ற பெயர்களும் நெய்தல் மலர், நெய்தல் கொடியும் நெய் என்ற அடியொட்டியே அமைந்துள்ளது”[14] என்று மம்மது அவர்களும் கூறியுள்ளதைக் காணும் போது நெய்தல் பெயர் குறித்து பல்வேறு கருத்துக்கள் நிலவுவதைக் காணலாம்.

சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலப்பறவைகளாக பெருங்கடல் புள், அன்னம், நாரை, வெள்ளாங்குருகு, சிறுவெண்காக்கை, முதுகுருகு, இனபுள், மகன்றில், அன்றில், கொக்கு, குரீஇ(குருவி), குரால்(ஆந்தை), காக்கை, கூகை, கடல் சிறு காக்கை, முதுபுள், பருந்து போன்றவை எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**அன்றில்**

**“பெடை புணர் அன்றில் உயங்கு குரல் அளைஇ” (நற்.152)**
**“பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே” (நற்.218)**
**“மன்றப் பெண்ணை வாங்கு மடற் குடம்பைத்**
**துணை புணர் அன்றில் உயவுக் குரல் கேட்டொறும்” (நற்.303)**

மடலேறத் துணிந்த தலைவனுக்கு கூட்டில் தன் பெடையைச் சேர்ந்து இருக்கும் அன்றிலின் வருந்தும் குரல் செயலற்ற வருத்தத்தைத் தருவதாக செய்தி உள்ளது. பருத்த அடிமரத்தையுடைய பனை மடலிலேயிருக்கும் அன்றில் பறவையின் குரல் திருமணம் நடவாத இடைக் காலத்தில் தலைவியை வருத்தியது. காம வேட்கை தாங்க முடியாத தலைவிக்கு பனைமரத்தின் வளைந்த மடலில் உள்ள கூட்டில் தன் பெடையோடு சேர்ந்திருக்கும் அன்றிலின் வருத்தம் தரும் குரலைக் கேட்கும் தோறும் வருத்தம் தருவதாகக் கூறியுள்ளனர். பனை மரத்தின் மேலிருந்து அன்றில் பறவை ஒலிப்பது தலைவிக்கு காமத்தை மிகுதிபடுத்துவதாகக் கூறப்பட்டிருக்கிறது. மேலும்,

**“சிரற் சிறகு ஏய்ப்ப அறற்கண் வரித்த” (அகநா.324)**
**“குடுமிக் கொக்கின் பைங்காற் பேடை**
**நுண்ஞான் அவ்வகைச் சேவல் பட்டென**
**அல்குறு பொழுதின் மெல்குஇரை மிசையாது**
**பைதல் பிள்ளை தழீஇ...........”(அகநா.290)**

எனக் குழம்பு போன்ற சேறு நிறைந்த வயலில் உணவிற்காகக் காலையில் கொழுத்த மீனை வேட்டையாடச் சென்ற ஆண் கொக்கு சிறுவர்கள் இட்ட வலையில் அகப்பட்டுக் கொண்டது. ஆகையினால் வருத்தமுற்ற அக்கொக்கின் பெடை தனித்திருக்கும் காலத்தில் இரையேதும் உண்ணாது தன் குஞ்சுகளைத் தழுவிக்கொண்டு தன் இடமாகிய பனைமரத்தில் அமர்ந்து அன்பு தோன்ற ஒலித்துக் கொண்டிருக்கும் இயல்புடையது நெய்தல் நிலம் என்று கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

**குருவி**

மனையுறைக் குருவிகள் ஆரம்ப காலந்தொட்டு மக்களோடு இயைந்தே வந்திருக்கிறது என்பதை,

> **"சிறு தோட் கொத்த செவ் அரிப்பறையின்**
> **கண்ணகத்து எழுதிய குரீஇப் போல" (நற்.58)**

என்ற பாடலில் செல்வா் இல்லத்து சிறுவா்களின் பறையில் எழுதிய குருவி போல அடிபடுதல் வேண்டும் என்று பகற்குறி வந்து மீண்டு சென்ற தலைவன் மீது சினங் கொண்டு தோழி குதிரையின் மேல் வைத்து கூறியதாகவும்,

> **"உள் ஊா்க் குரீஇக் கரு உடைத்தன்ன**
> **பெரும் போது அவிழ்ந்த கருந்தாட் புன்னைக்" (நற்.231)**

என்று வீட்டிறைப்பில் வாழும் ஊா்க்குருவியின் முட்டை உடைந்தது போன்று புன்னை மரத்தின் பெரிய அரும்பு மலா்வதும் குறிப்பிடப்பட்டுள்ளதன் மூலம் அறியமுடிகிறது.

**குருகு**

பொய்கைகள் தோறும் இறா மீனைத் தின்னும் குருகுக் கூட்டம் எப்போதும் ஆரவாரத்துடன் இருப்பதை,

> **"நெடுஞ் சினைப் புன்னைக் கடுஞ் சூல் வெண்குருகு**
> **உலவுத் திரை ஓதம் வெரூஉம்" (நற்.31)**

புன்னை மரக்கிளையிலிருக்கும் முதிா்ந்த கருவையுடைய வெண்மையான குருகு அலை ஓசைக்கு அஞ்சுவது போல பிறந்த இல்லத்திலிருக்கும் தலைவி அன்னையின் கடுஞ்சொல்லுக்கு(நற்.70) பசலைநோய், தூது(நற்.138)அலா் போன்ற செயல்களுக்கு அஞ்சுவதாகவும் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளதோடு,

**“பொய்கை நாரை போர்வில் சேக்கும்**

**நெய்தல்அம் கழனி நெல்அரி தொழுவர்....” (புறம்.209)**

என்று நீர் நிலைகளில் மேயும் நாரைப் பறவையினம் தனக்கு தேவையான இரையை உண்டுவிட்டு வைக்கோல் போரிலே உறங்கும் தன்மையுடைய அழகிய நெய்தல் எனவும் மேற்குறிப்பிடப்பட்டுள்ள பாடல்களில் கூறப்பட்டுள்ளன.

**கூகை**

கூகை என்பது சாவுக்குருவி என்றே கருதப்படுகிறது. இதன் ஓசை அச்சம் தருவதாகவும், வெறுக்கத்தக்கதாகவும் இருந்திருப்பதை,

**“குரா அற் கூகையும், இரா அ இசைக்கும்” (நற்.218)**

திருமணம் நடவாத காலத்தில் வருந்தும் தலைவி பருத்த அடிமரத்தையுடைய வேம்பின் பெரிய கிளையில் அமர்ந்து கொண்டு தன் கொடிய குரலால் கூகை இரவில் கூப்பிடும் என்றும்,

**“மணல் மலி மூதூர் அகல் நெடுந் தெருவில்**

**கூகைச் சேவல் குராலோடு....................**

**...........................அஞ்சுவரக் குழறும்” (நற்.319)**

தலைவி இற்செறிக்கப்பட்டிருந்ததை அறியாது தலைவன் வந்திருத்த சமயம் மணல் மிகுந்த மூதூரில் தெருவில் ஆண் கூகை தனது பெடையுடன் சென்று அச்சம் உண்டாகும்படி கத்தும் என்றும் இந்நற்றிணைப் பாடல்களில் விளக்கப்பட்டுள்ளது.

**நீர்க்காக்கை**

பெரிய சிவந்த இறாமீனின் பஞ்சு போன்ற தலையை உடைய முடங்களைக் கொண்ட சிறிய வெண் காக்கை நாட்காலையில் இரையாகப் பெறுவதை,

**“கடல் அம் காக்கைச் செவ் வாய்ச் சேவல்**

**............இருஞ் சேற்று அயிரை தேரிய...” (நற்.272)**

என்ற பாடல்களில் கடற்காக்கை என்று குறிப்பிடப்படும் நீர்க்காக்கை, தனது முதற் கருப்பத்தோடு தங்கியிருந்த தனது அழகிய பேடைக்கு உணவுக்காக அயிரை மீனைத் தேடும் என்றும் அவ்வாறு தேடி நீர்ப்பரப்பில் இருந்து கவ்விய செவ்விய இறாமீனை பரவிய பெரிய உப்பங்கழியில் தான் விரும்பும் பசிய காலையுடைய தன் பெடையை அழைத்துக் கொடுக்கும் என்றும்,

**“பெருங் கடற் பரப்பின் இரும் புறம் தோய**
**சிறு வெண் காக்கை பலவுடன் ஆடும்**
**துறை புலம்பு உடைத்தே..................” (நற்.231)**

கடற்பரப்பில் கரிய முதுகு நனையும் படி சிறிய வெள்ளை நிறமான நீர்க் காக்கைகள் பல நீராடுவது, முன்னர் தன்னை காதல் செய்த நெய்தல் நிலத் தலைவனை நினைவு படுத்துவதாகவும் இப்பாடல்களில் கூறப்பட்டுள்ளன.

**பாலை திணை**

புணர்தல், பிரிதல், இருத்தல் போன்றவற்றைக் குறிக்கும் குறிஞ்சிக்கும், முல்லைக்கும் இடைப்பட்டது பாலை என்பதை உய்த்துணர வைத்தவர் தொல்காப்பியர். மேலும் பாலை நிலம் என்பது முல்லை நிலத்தின் காடும் குறிஞ்சி நிலத்தின் மலையும் தன் முறையில் திரிந்தால் பாலை நிலம் என்பது பல்வேறு அறிஞர்களின் கருத்தாக உள்ளது. இதனை “சுரமும் காடும் மழை வளங்காணாது வறண்ட மலைப்பகுதியும் மேய்ச்சல் நிலப்பகுதியும் பழந்தமிழர்களால் பாலை எனப்பட்டன. எனத் தனிநாயகமும் ‘மழை இல்லாமல் வறட்சியுற்ற மலையும் காடும் பாலை எனப்படும்’ என மு.வரதராசனும் ‘பாலையானது காட்டு நிலத்தின் சார்பைப் பெரிதும் மலை நிலத்தின் சார்கைச் சிறிதும் பெற்றுத் தோன்றுவதாகும்’ என மு.அருணாசலம்பிள்ளையும் ‘பாலை என்பது வேனிற் காலத்தே நீர் வளமற்று வறண்டு கிடக்கும் பகுதியைச் சுட்டும் என அ.மணவாளனும்’ குறிப்பிட்டுள்ளனர்”[15] என நா.ஆறுமுகம் குறிப்பிடுவதன் மூலமாக அறியலாகிறது.

கழுகு, பருந்து, புறாவை நம்பியகப்பொருளும், கூகை, கவுதாரி என்று சுவாமிநாதமும் பாலைக்குரிய பறவைகள் என்று கூறுகின்றன. இவை தவிர பூவை என்ற நாகணவாய்புள் என்னும் பறவையும் பாலைக்குரியது என்பர். இந்நாகணவாய்புள் கிளியை விடச் சிறப்பாகப் பேசும் என்று குறிப்பிடுவர். மேலும் “மைனா எனப்படும் பறவை பல்வேறு விதமான ஒலிகளையும், குரல்களையும் கேட்டு அவற்றைப் போல மீண்டும் ஒலிக்கும் அசாதாரணத் திறமை படைத்தது. ஆனால் அதனை மனிதர்கள் பிடித்துக் கூண்டில் அடைத்து, தங்கள் பொழுது போக்குக்காகப் பயன்படுத்திக் கொள்கின்றனர்”[16].

**காக்கை**

காக்கைகள் பாலை நிலங்களில் காணப்பட்டுள்ளதையும், அவை பிணம் உண்ணும் என்பதையும்,

> **“மணி வாய்க் காக்கை மா நிறப் பெருங் கிளை**
> **பிணி வீழ் ஆலத்து அலங்கு சினை ஏறி**
> **கொடு வில் எயினர் குறும்பிற்கு ஊக்கும்**
> **கடு வினை மறவர் வில்லிடைத் தொலைந்தோர்**
> **படு பிணம் கவரும் பாழ் படு நனந்தலை” (அகநா.319)**
> **“புற்று அரை யாத்த புலர் சினை மரத்த**
> **மைந் நிற உருவின், மணிக் கண், காக்கை**
> **பைந் நிணம் கவரும் படு பிணக் கவலை” (அகநா.327)**

இப்பாடல்களில் கரிய மணியைப் போல வாயை உடைய காக்கைக் கூட்டம் பிணிப்புண்ட விழுதுகளையுடைய ஆல மர கிளையில் அமர்ந்து இருக்கும். அவை கொடிய தொழில் செய்யும் மறவர்கள் வில் எய்ததால் இறந்தவர்களின் பிணத்தைத் தின்னும். பாழ்பட்ட பாலை நிலம் என்றும் அடிமரத்தில் புற்றுகள் கட்டப்பட்டிருக்கும் உலர்ந்த கிளைகளையுடைய மரத்தில் நீலமணியைப் போன்ற கண்களை உடையக் காக்கைகள் பிணங்களின் பசுமையானக் கொழுப்பை கவர்ந்து உண்ணும் நெறி என்றும் பாலை நிலம் பற்றி கூறுகின்றன.

**குருகு**

வேட்டைத் தொழில் செய்யும் வேட்டுவர்கள் அனைத்து பறவைகளையும் வேட்டையாட வில்லை என்பதை,

> **“பனிப் புதல் ஈங்கை அம் குழை வருட**
> **சிறை குவிந்திருந்த பைதல் வெண்குருகு,**
> **பார்வை வேட்டுவன், காழ் களைந்தருள..” (நற்.312)**

என்றும் நற்றிணைப் பாடலில் குளிர்ந்த புதரிலுள்ள ஈங்கையின் அழகிய தளிர் தடவத் தன் சிறகு குவிந்திருந்த வருத்தமிக்க வெண் குருகின் கட்டை வேட்டுவன் அவிழ்த்து விட்டதாகக் குறிப்பு காணப்படுவதன் மூலம் மனிதனிடம் வேட்டை சமூக மரபு இருந்துள்ளதை அறியலாம்.

**குயில்**

சங்க காலத்தில் தலைவன் தலைவியின் பிரிவின் போது பருவம் உணர்த்துவதில் குயிலின் பங்கு அதிகமாக இருந்திருப்பதைக் கீழ்க்காணும் பாடல்களால் அறியலாம்.

**"மின்னின் தூவி இருங் குயில், பென்னின்**
**நறுந் தாது கொழுதும்............" (குறுந்.192)**

இப்பாடலில் மின்னும் இனிய இறகுகளை உடைய கரிய குயில் தன் மேனியில் பொன்னை உரைத்த பொடியானது உரைகல்லை ஒக்கும் படி மாமரத்தின் கிளையில் உள்ள நறிய பூந்ததைக் கோதும் இளவேனிற் காலத்தில் தலைவர் வராமையால் புனையாத வெறுங் கூந்தலைத் தடவுவேன் என்று தலைவி வருந்தியதாகக் கூறப்பட்டுள்ளதையும்,

**"சேவலொடு கெழீஇய செங் கண் இருங் குயில்" (நற்.118)**

என்று குளிர்ந்த நறுமணமுள்ள சோலையில் சிவந்த கண்களையுடைய கரிய பெண் குயில்கள் ஆண்குயில்களோடு எதிர் எதிர் இருந்து மகிழ்ந்து கூவுவது போலத் தலைவனோடு தான் இருந்து மகிழ வேண்டும் எனத் தலைவி தன் மன ஆசையைக் கூறி வருந்தியதாவும், குயில் கூவும் ஒலியால் பிரிவுத் துன்பம் மிகுந்து தலைவி வருந்துவதாகவும் கூறியிருப்பதன் மூலமும், இதே போன்று,

**"செங் கண் இருங்குயில் எதிர் குரல் பயிற்றும்**
**இன்ப வேனிலும் வந்தன்று: நம்வயின், பிரியலம்..." (நற்.224)**

என்ற பாடலில் சிவந்த கண்களையுடைய கரிய குயில்கள் மாவின் பூங் கொத்துள்ள கிளையில் எதிர் எதிரில் அமர்ந்து கொண்டு, கணவனோடு சேர்ந்தவர்கள் பிரியாதீர்கள் பிரிந்தால் சேர்ந்து கொள்ளுங்கள் என்று குரல் எழுப்பும் இளவேனில் காலம். (246)பிரிவிடை மெலிந்த தலைவிக்கு பருவம் வந்ததை உணர்த்துவதாகவும் குயில் பற்றிய குறிப்புகள் கூறப்பட்டுள்ளன.

**பருந்து**

வலிமையுடைய பறவையாகக் கருதப்படும் பருந்திற்கு கற்பகால நிலையை தலைமக்களின் வாழ்வோடு இணைத்திருப்பதை,

**"ஈன் பருந்து உயவும் வாள் பொரு நெடுஞ் சினைப்" (நற்.3)**

ஈனுதலையுடைய பருந்து வருந்தும்படி அடைகாக்க உட்கார்ந்து இருக்கும் நிலையைக் காணாமல் வேப்ப மர நிழலில் சிறுவர்கள் வட்டு ஆடி மகிழ்வர். அது போல பொருள் தேடத் தலைவன் பிரிந்த சென்றதால் தனது நிலையும் ஆனது என்று தலைவி தன் நெஞ்சிற்கு கூறியதாக அமைந்துள்ள இப்பாடல் மூலம் அறியலாம். மேலும்,

**"அருஞ் சுரம் எளியமன், நினக்கே: பருந்து பட" (நற்.141)**

என்று பொருள் தேட பிரிய எண்ணிய நெஞ்சிற்கு தலைவன் பருந்து வட்டமிடும்படி வெற்றிப் படையுடைய கிள்ளிவளவன் நகரம் குறித்து எண்ணியதாகவும் இப்பாடல் இடம்பெற்றுள்ளன. இஃதோடு குறுந்தொகைப் பாடல் ஒன்றில்,

**"......இனம் தீர் பருந்தின் புலம்பு கொள் தெள் விளி**
**சுரம் செல் மாக்கட்கு உயவுத் துணை ஆகும்...." (குறுந்.207)**

பாலை நிலத்தில் உள்ள ஓமை மரத்தினது கிளையில் தம் இனத்திலிருந்து பிரிந்து வந்து இருக்கும் பருந்தின் ஓசை அவ்வழியில் செல்லும் மனிதர்களுக்கு உசாத்துணையாக அமையும் என்று கூறப்பட்டிருக்கிறது. இதே போன்று பாலை நிலக் கழுகின் செயல்களாக,

**"பல்ஆ தழீஇய கல்லா வல்வில்**
**உழைக்குரற் கூகை அழைப்ப ஆட்டி" (புறம்.261)**

வன்மையான வில் வீரர்களைக் கூகைத் தனது இனத்தை அழைப்பது போல அழைத்து துரத்தும் என்றும், கள்ளி மிகுந்த காட்டில் கூகை கூவுவதும்(புறம்.356), குறுநரிகளுடன் இணைந்து கூகை பிணம் உண்ணுவதும்(புறம்.359), பேய்மகள் அழுகுரலெடுத்து கூத்தாடும் போது கழுகுகளும், சிவந்த காதுகளையுடைய பருந்தும் வட்டமிட்டு சுற்றித்திரியும்(புறம்.370) என்பதை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மேலும்

**".........அலங்கல் உலவை ஏறி ஒய்யெனப்**
**புலம்பு தரு குரல் புறவுப் பெடை பயிரும்...." (குறுந்.79)**

பாலை நிலத்திலுள்ள ஓமை மரக்கிளையில் ஆண் புறா அமர்ந்து கொண்டு தன் பெடையை விரும்பி அழைக்கும் பாலை என்று இப்பாடல் கூறியுள்ள தன் மூலம் பறவை இனங்களும் தம் துணையின் பால் அன்பு வைத்து ஒழுகும் என்பதை அறியமுடிகிறது. இது போல,

**"கவை முடக் கள்ளிக் காய் விடு கடு நொடி**
**துதை மென் தூவித் துணைப் புறவு இரிக்கும்" (குறுந்.174)**

இப்பாடலில் கள்ளிக்காய் வெடிக்கும் ஒலியானது நெருங்கிய மெல்லிய சிறகுகளை உடைய ஆணும், பெண்ணுமாகிய இரட்டைப் புறாக்களை நீங்கச் செய்யும் கொடுமையான வழி எனத் தலைவன் பொருள் ஈட்டச் சென்ற பாலை வழி குறித்து கூறியுள்ளனர்.

**ஐந்திணைசார் பறவைகள்**

அன்றில், அன்னம், காக்கை, கானக்கோழி, கிளி, குயில், குருகு, குருவி, கூகை, கொக்கு, கோழி, சிச்சிலி, பருந்து, புறா, மயில் போன்ற பதினைந்து பறவைகள் சங்க இலக்கியத்தில் ஐந்திணைப் பாடல்களில் உவமைக்காகவும் உள்ளுறைக்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ள பறவைகளில் சில அந்நிலங்களின் கருப்பொருளாகவும் உள்ளன. அவையாவன,

- ✓ குறிஞ்சியின் கருப்பொருள் - கிளி, மஞ்ஞை
- ✓ முல்லையின் கருப்பொருள் - கானவாரணம், இரவை
- ✓ மருதத்தின் கருப்பொருள் - சிச்சிலி, நாரை, மயில், கிளி
- ✓ நெய்தலின் கருப்பொருள் - கடற்காகம்
- ✓ பாலையின் கருப்பொருள் - எருவை, கழுகு

என்று பிரிக்கப்பட்டுள்ளன.

**ஐந்திணையில் விளிக்குரிய அஃறிணைகள்**

ஒருவரின் கவனத்தை தன்பால் இழுத்து நிற்பதனை விளி என்பர். விளி என்ற சொல்லுக்கு கூப்பிடு, அழை, சத்தம், ஆரவாரம் என்றெல்லாம் அகராதிகள் பொருள் கூறுகின்றன. சங்க இலக்கியத்தில் விளிக்குரிய உயிரினங்களாக அஃறிணை உயிர்களாக குருகு, கூகை, கிளி, அன்றில், சேவல், காக்கை போன்ற பறவைகளும், இவற்றை விளிப்பவர்களாக தலைமக்கள் மட்டுமின்றி தோழி, செவிலி, நற்றாய், கண்டோர் ஆகியோரும் அஃறிணைகளை விளித்துத் தங்களது இன்பதுன்பங்களுக்கு ஆறுதல் தேடிக் கொள்கின்றனர். இருப்பினும் தலைவனும் தலைவியையுமே அதிக அளவில் அஃறிணை உயிரினங்களை விளிக்கின்றனர். பறவைகள் விளிக்கப்பட்டுள்ள இடங்களாவன,

**கருங்கால் வெள்ளாங்குருகு! (நற்.54)**
**சிறு வெள்ளாங்குருகு! (நற்.70)**
**வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை! (நற்.83)**
**செவ்வாய் பைங்கிளி ! (நற்.102)**
**வளைவாய் பாசினம் ! (நற்.376)**

எனத் தோழி, நற்றாய், செவிலி, பாங்கன், பாணன், கண்டோர் ஆகியோர் விளியினைப் பெறுவது போன்று பறவைகளும் விளியினைப் பெற்றுள்ளன. என்பதைக் காணும் போது பிறரிடம் சொல்ல இயலாத மனவுணர்வுகளை அஃறிணைகளை அழைத்துக் கூறியிருப்பதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது.

**பறவைகள் பற்றிய புனைவுகள்**

**உவமப் புனைவுகள்**

அகப்பாடல் இயற்ற நிலம் மற்றும் காலத்தின் இயற்கை அறிவு வேண்டும். மரஞ்செடி, கொடி, பறவை, விலங்குகளின் தன்மையை எடுத்துக் கூறும் கல்வி வேண்டும். அஃறிணை உயிர்களின் இன்பப்புணர்வை, மக்களின் இன்பப்புணர்வோடு ஒப்பிட்டுப் பார்க்கும் சீர்மை வேண்டும். காதலாய் பழகும் இளநெஞ்சங்களின் தூய எண்ண உணர்வுகளைக் கற்பனையால் அளந்து கவின் செய்யும் ஆற்றல் வேண்டும். சங்கச் சான்றோர் புறத்திணையை விட, அகத்திணை பாடுவதிலேயே அதிகமாக கவனம் செலுத்தியிருந்துள்ளனர். இயற்கையை இயற்கையாகவே பாடும் முறை சங்க காலத்தில் இல்லை. ஆனால் “இயற்கைப் பகுதிகளை உலகத்திடைக் காணப்படும் மரஞ்செடி, கொடி, பறவை, விலங்கு முதலான பொருள்களை உற்றுநோக்கிக் கையாளுகின்ற புலவன் வருணனைப் பொருத்தமாக அமைகின்றது”[17] என்பார் வ.சுப.மாணிக்கம். ஆகையினாலே மக்களது ஒழுக்கலாறுகளில் சிறப்பானதாகத் திகழ்ந்திருந்த காதல் ஒழுக்கத்திற்குப் பக்கப் பொருளாகப் பாடும் சார்புநிலையே இயற்கைக்கு அளிக்கப்பட்டிருந்தது. அத்தகைய உவமப் புனைவுகள் என்பது இலக்கியங்களில் பாடப்பட்டிருக்கும் பாடல்களில் இடம்பெறும் பொருட்கள், செய்திகள் எவ்வாறு உவமையாக புனையப்பட்டுள்ளது என்பதைக் குறிக்கும். மனிதனின் வாழ்க்கையில் உள்ள உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்த மொழியாகவும், கருவியாகவும் உவமைகள் பயன் படுத்தப்பட்டுள்ளன. இவ்வுவமப் புனைவுகள் இரண்டு வகைப்படும். அவை,

உவமப் புனைவுகள்

- உள்ளுறை உவமப் புனைவுகள்
- ஏனைய உவமப் புனைவுகள்

இவற்றுள் செய்யுட்கு மட்டும் உரியது உள்ளுறை உவமம். வழக்கு, செய்யுள் இரண்டிற்கும் உரியது ஏனைய உவமமாகும்.

**உள்ளுறை உவமம்**

உள்ளுறை என்பது உள் + உறை = உள்ளுறை. இ∴து உள்ளே உறைவது என்று பொருள்படும். அகப்பாடல்களில் உள் பொருளாகப் பொருந்தியிருக்கும். உள்ளுறை உவமம் செய்யுளில் கூறியிருக்கும் பொருளிலிருந்து கூறப்படாத பொருளைக் குறிப்பாக வெளிப்படுத்தும் முறையினை,

**"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிகென**
**உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்"**

**(தொல்.பொ.அகத்.51)**

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் கூறியிருக்கிறார். இதையே வ.சுப.மாணிக்கனார் அவர்களும் "சுருங்க சொல்லும் ஆற்றல் உண்டு கேட்டார் மனத்தார்க்கும் கூர்மையுண்டு ஆதலின் உள்ளுறை பண்பட்ட தமிழ் இலக்கியக் கருவி"[18] என்று கூறியுள்ளார். மேலும் உள்ளுறை தமிழ் இலக்கியத்திற்கே உரிய ஒரு தனிநெறியாகும். வெளிப்படையாகச் செடி, கொடி, மரம், பறவை, விலங்கு போன்றவைகளின் செயலினைப் புனைவது போல இருக்கும். உள்ளொன்று வைத்து புறமொன்று வெளிப்படும் வகையில் அமைவது, இதில் அகம் தொடர்பான உட்கருத்துக்கள் உடம்புள் உயிர்போல விளங்கும் வகையில் அமையப்பெற்றுள்ளது.

**உள்ளுறையின் நோக்கம்**

"நேரடியாகக் குறையைச் சுட்டினால் மனித மனம் எதிர்ப்புணர்ச்சியைக் காட்டும். ஆனால் கதை போல கூறினால் மனிதனின் மனம் வேறு யாரையோ சொல்வதாக நினைக்கும். மேலும் மனிதனின் உயர்வு தாழ்வுகளை அ∴றிணையோடு சார்த்திக் கூறுவது அடிப்படை உளவியலாகும். இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடும் போது

அ.ஃ.றிணையைச் சுட்டிக்காட்டி உயர்திணையைத் திருத்தச் செய்வது உள்ளுறை உவமத்தின் நோக்கம்"[19] என்று இராம.குருமூர்த்தி அவர்கள் தனது சங்க இலக்கியச் சிந்தனைகள் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**உள்ளுறைக்கான பின்னணி**

அகப்பாடல்களில் உள்ளுறை அமைத்து பாடியிருக்கும் கவிஞர்களுக்குத் தொல்காப்பியர், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை போன்றவற்றில் தெய்வம் ஒழித்த கருப்பொருளைப் பின்னணியாக்கி அமைக்க வேண்டும் என்பதை,

> **"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன் எனக்**
> **கொள்ளும் என்ப குறியுணர்ந்தோரே" (தொல்.பொ.அகத்.47)**

என்று கூறியதோடு கருப்பொருளில் தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, செய்தி, யாழ் போன்றவற்றுடன் பிற வாழ்வியல் கருத்துகளும் அடங்கும்,

> **"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
> **செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
> **அவ்வகை பிறவும் கருவென மொழிப" (தொல்.பொ.அகத்.18)**

எனத் தனது நூற்பாக்களில் கருப்பொருட்கள் மனிதனின் இன்ப நுகர்வுக்கு உட்பட்டவையாக இருப்பதனால் தெய்வம் தவிர என்னும் விதியைக் கூறியுள்ளார்.

**உள்ளுறை உவமமாகப் பயன்படுத்தப் பட்ட பறவைகள்**

- கிளி
- புறா
- மயில்
- வங்கா
- கடற்காகம்
- குருகு
- நாரை

போன்ற பறவைகள் தலைவன், தலைவியின் அக வாழ்வை உள்ளுறையாக வைத்து சங்க புலவர்கள் பாடியிருப்பதைக் காண முடிகிறது. இவ்வாறு பறவைகள் உள்ளுறையாக்கப் பட்டுள்ளதை,

**"எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்து**
**பொரி அகைந்தன்ன பொங்கு பல் சிறு மீன்**
**வெறி கொள் பாசடை, உணீஇயர், பைப்பயப்**
**பறை தபு முது சிரல் அசைபு வந்து இருக்கும்" (அகநா.106)**

என்ற பாடலில் தாமரை மலர்கள் நிறைந்து காணப்படும் வயல் நீரில் சின்னஞ்சிறு கெண்டைமீன்கள் துள்ளிக் குதிக்கும் **(நெற்பொரிகள் துள்ளி விழுவது மீன்கள் குதிப்பதன் உவமை)** அதனைக் கவர வந்திருக்கும் முதுமையால் பறக்க இயலாத சிரல் பறவை மீனுக்கு அருகில் உள்ள இலையில் அமர்ந்திருந்தும் மீனைக்கவர இயலாது இருக்கும். ஆனாலும் ஏனையச் சிரல் பறவைகள் மீனைப் பிடிப்பதற்கும் பொறுக்காது இருக்கும். அது போல வயது முதிர்ந்த தலைவி தலைவனைத் தானும் கொள்ளாது பிற இளம் பெண்களும் தழுவப் பொறுக்கமாட்டாதவளாக இருப்பது உள்ளுறையாக அமையப் பெற்றுள்ளது. இதே போல,

**"வருந்தி யாம் நோய் கூர,நுந்தையை என்றும்**
**பருந்து எறிந்தற்றாகக் கொள்ளும், கொண்டாங்கே" (கலித்.82)**

தலைவி தன் மகனுக்கு பரத்தையர் அணி அணிவித்திருந்ததைக் கண்டதும் உன் தந்தையை எந்நாளும் காத்திருந்து நினைத்த ஒன்றைப் பருந்து எடுத்துச் செல்வது போன்று கவர்ந்து சென்று விட்டனர். அதே போல நின்னையும் கொண்டு போவாள், ஆதலால் வெளியே செல்ல வேண்டாம் என்று கூறியிருப்பதைக் காணும் போது தலைவி தன் மைந்தன் மீது கொண்டிருந்த அன்பை உள்ளுறை அமைத்து கூறியிருப்பதைக் காணலாம்.

**ஏனைய உவமம்**

உள்ளுறை உவமம் அல்லாத பிற உவமைகளைப் பற்றிய புனைவுகள் ஏனைய உவமமாகும். உவமையானது ஒரு பாடலோ அல்லது கருத்தோ சிறப்படையக் காரணமாக இருப்பது. இ∴து பெண்களுக்கு அழகு சேர்ப்பது ஒப்பனை அது போல செய்யுளுக்கு அழகு கொடுப்பது இவ்வுவமைகளாகும். கற்றோர் உவமையைக் கவிதையில் மட்டுமின்றி உரை நடையிலும், பேச்சிலும் கூடக் கையாளுகின்றனர். உவமை சொல்லுவோரின் கருத்தைக் கேட்போர் எளிமையாகப் புரிந்து கொள்வதற்காகவே பயன்படுத்தப்பட்டுள்ளது.

உவமைகள் பயன்படுத்தப் பட்டிருப்பதன் பயனை இளம்பூரணார் "புலன் அல்லாத புலனாதலும், அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்"[20] என இருவகையாகக் கூறியுள்ளார். மேலும் இதனையே தொல்காப்பியரும்,

**"வினைபயன் மெய்யுரு என்ற நான்கே**
**வகை பெற வந்த உவமைத் தோற்றம்" (தொல்.பொ.அகத்.48)**

என்று தனது தொல்காப்பியத்தில் குறிப்பிட்டுள்ளார்.

**ஒப்புவமை**

ஒப்புவமை என்பது இரண்டு வெவ்வேறு பொருட்களை ஒப்புமைப்படுத்தி கூறுவதாகும். பொதுவாக இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் உவமைகளை ஒப்புவமை வகையினதாகக் கொள்ளலாம். சங்கப் பாடல்களில் பறவைகளைப் பற்றி கூறும் போது அவற்றிற்கு ஒப்புவமையாகக் கூறப்பட்டிருப்பவை,

| | |
|---|---|
| **ஊசி** | **- மீன்கொத்தி அலகு** |
| **ஆம்பல் இலை** | **- வௌவால் இறகு** |
| **பறவைகளின் கண்கள்** | **- மணிக்கண்** |
| **அம்பு குவியல்** | **- மலையுறைக் குருவிக் கூட்டம்** |
| **நெருப்பு** | **- அன்றில் தலை நிறம்** |
| **காதல்** | **- அன்றில்** |
| **நொச்சி பூ** | **- மயிலின் நகம்** |

இதைப் போன்று வேறு சில பறவைகளும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு பறவைகள் பயன்படுத்தப்பட்டுள்ள செய்யுள்கள் அனைத்தும் பல உவமைகளை மையமாகக் கொண்டுள்ளது. மேலும் மலையுறைக் குருவியின் முட்டை , சேவல் கொண்டை, குறும்பூழின் கால் போன்றவை அனேகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை குறுந்தொகை மற்றும் நற்றிணைப் பாடல்களில் காணலாம். மேலும்,

**"புறவுப் புறத்தன்ன புன் கால் உகா அத்து" (குறுந்.274)**

புறாவின் முதுகைப் போன்ற புல்லிய அடியை உடைய உகாய் மரம் காணும் வழி என்று பொருள் வயிற்பிரியக் கருதிய தலைவனுக்கு தலைவியை நினைத்து தன்

நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்துள்ள இப்பாடலில் புறாவின் புல்லிய முதுகு உகாய் மரத்தின் அடிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதும்,

**"……………………………கூர்வாய்**
**அழல்அகைந் தன்ன காமர் துதைமயிர்**
**மனைஉறை கோழி மறனுடைச் சேவல்**
**போர்புரி எருத்தம் போலக் கஞலிய**
**பொங்குஅழல் முருங்கின் ஒண்குரல்……." (அகநா.277)**

என்று கூர்மையான வாயையும், தீக் கொழுந்து விட்டு எரிவது போன்ற அழகிய மயிர்ச் சிறகையுடைய வீட்டில் வாழும் தோழியின் அஞ்சாமையுடைய சேவல் போரிடும் போது அதன் கழுத்து கிளர்ந்து எழுவது போல செம்முருங்கின் பூங்கொத்து காணப்படுவதாக அகநானூற்றுப் பாடலில் உவமை புனையப்பட்டுள்ளதையும் அறியமுடிகிறது. மேலும் குறுந்தொகையில்,

**"……………………………………..கிள்ளை**
**வளை வாய்க் கொண்ட வேப்ப ஒண் பழம்" (குறுந்.67)**

என்ற பாடலில் கிளி தன் வளைந்த அலகினிடத்தில் இருக்கும் வேம்பினது பழமானது கூரிய கைந்நகத்தில் இருக்கும் பொன் ஆபரணத்திற்குரிய பொற்காசு போன்று காணப்படும் என வேம்பினது பழத்திற்கு பொற்காசு உவமையாகக் கொடுக்கப்பட்டிருப்பதையும்,

**"குயிற்கண் அன்ன குரூஉக்காய் முற்றி…" (அகநா.293)**

என்று குயிலின் கண்ணைப் போன்று உகாய் மரத்தின் காய் முற்றியிருப்பதாக உவமை கூறப்பட்டுள்ளதையும்,

**"பூழ்க் கால் அன்ன செங் கால் உழுந்தின்**
**ஊழ்ப்படு முது காய் உழையினம் கவரும்" (குறுந்.68)**
**"இதல்முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி" (அகநா.133)**

என்று குறும்பூழ் என்னும் பறவையின் கால் போன்ற செவ்விய காலை உடைய உழுத்தினது முதிர்ந்த காய்களை மான் கூட்டம் தின்னும் என்று கூறியிருப்பதில் உழுத்தினது காய்களும், கவுதாரியின் காலில் உள்ள முள்ளைப் போன்று வெட்சிப் பூக்களும் இருப்பதாகப் பறவைகளின் கால்கள் உவமையாக கூறப்பட்டு இருப்பதையும் இப்பாடல்களில் காணலாம்.

பூங்கண் உத்திரையார் என்னும் புலவர் முதிய மூதாட்டியின் கூந்தல் நிறத்தை கூறுவதற்காக மீனைக் கவர்ந்து உண்ணும் கொக்கின் சிறகைப் போன்று வெண்மை நிறத்தில் இருப்பதை,

**"மீன்உண் கொக்கின் தூவி அன்ன**
**வால்நரைக் கூந்தல் முதியோள்...." (புறம்.277)**

என்றும்,

**"கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ**
**மாரிஅம் குருகின் ஈரிய குரங்க" (அகநா.235)**

அகன்ற வயல்களில் காணப்படும் திரண்ட கரும்பினது வெண்ணிறப் பூக்கள், மழையில் நனைந்த நாரையைப் போல ஈரத்துடன் இருப்பதாகத் தோன்றுவதாக தோன்றும் என்றும்,

**"கொக்கு உகிர் நிமிரல் மாந்தி எல் பட" (நற்.258)**

எனப் பொன் வளையில் அணிந்த நெய்தல் நிற மகளிர் கொக்கின் நகம் போன்ற வெள்ளை நிறமான சோற்றை காக்கைக்கு பலிச்சோறு இடப்பட்டதாகக் கூறியுள்ளனர் இதன் மூலமாக சோற்றிற்கு கொக்கின் நகம் வர்ணணையாகக் கூறியிருப்பது போன்று, அகநானூற்றுப் பாடலில்,

**"வளியொடு சினைஇய வண் தளிர் மாஅத்துக்**
**கிளி போல் காய கிளைத் துணர் வடித்து......" (அகநா.37)**

என்று வளமான தளிர்களை உடைய மா மரத்தில் கிளி போன்ற வடிவத்தில் மாங்காய்கள் காய்த்துள்ளதாக கூறியிருப்பதன் மூலம் மாங்காய்க்கு கிளியை உவமையாக கூறியிருப்பதைக் காணலாம்.

மகளிர் ஊசல் ஆடும் பொருட்டுக் கிளைகள் வெட்டப்பட்ட வேங்கை மரத்தின் பூங்கொத்துக்கள் நிரம்பிய கொம்பு, மலையின் பக்கத்தில் ஆடுமயிலின் உச்சியில் உள்ள அழகிய குடுமி போலக் காணப்படும் என்பதை,

**"ஒண் தொடி மகளிர்க்கு ஊச லாக**
**ஆடுசினை ஒழித்த கோடுஇணர் கதலிய**
**குறும் பொறை அயலது நெடுந்தாள் வேங்கை**
**முடமயிற் குடுமியின், தோன்றும் நாடன்" (அகநா.368)**

என்ற பாடலில் வரிகளில் வேங்கையின் பூங்கொத்திற்கு மயிலின் குடுமி ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது. இதே போல,

**"கழல் கட் கூகையொடு கடும் பாம்பு தூங்கப்" (திருமுரு.49)**

என்று வெளியே பிதுங்கும் கண்களை உடைய கூகையுடன் பேய் மகளின் சினத்தால் சூழலும் கண்களுக்கு உவமையாகக் கூறப்பட்டிருப்பதையும்,

**"நீர் பெயர்ந்து மாறிய செறி சேற்று அள்ளல்**
**நெய்த் தலைக் கொழு மீன் அருந்த, இனக் குருகு**
**குப்பை வெண் மணல் ஏறி, அரைசர்**
**ஓண் படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்." (நற்.291)**

என்று மீன் உண்ண வரும் குருகு கூட்டம் குவிந்த வெண் மணலில் இருப்பதற்கு அரசனின் ஒன்றியப் படைத்தொகுதி போல இருக்கும் என்று குருகு கூட்டத்திற்கு அரசனின் படையும் உவமைப் படுத்தப்பட்டுள்ளதையும் இப்பாடல்களால் அறியமுடிகிறது.

**உடனுறை உவமை**

உடனுறை உள்ளுவமத்திற்கு இளம்பூரணார், உடன் உறையும் ஒன்றினைச் சொல்ல அதனாலே பிறிதொரு பொருள் விளங்குவது என்று விளக்கம் கொடுத்துள்ளார். இதனையே நச்சினார்க்கினியர் உடனுறை உள்ளுறையை, இறைச்சிப் பொருள் என்று கூறினாலும் ஒன்றைச் சொல்லப் பிறிதொரு பொருள் விளங்குவதால் இதனை உள்ளுறை என்பதே பொருத்தமுடையதாகும். உடனுறை உவமத்திற்குச் சான்றாக குறுந்தொகைப் பாடல் ஒன்று,

**"யாரினும் இனியன் பேரன் பின்னே**
**உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்**
**சூன்முதிர் பேடைக் கினில் இழைகியர்**
**தேம் பொதிக் கொண்ட தீம் கழைக் கரும்பின்**
**நாறா வெண் பூக் கொழுதும்**
**யாணன் ஊரன் பாணன் வாயே" (குறுந்.85)**

உள்ளூரில் வாழும் மனையுறைக் குருவிகளில் ஆண் குருவியானது, பெண் குருவி கருவுற்று கருப்பம் முதிர்ந்து இருக்கும் போது கணவன் குருவிப் பரத்தையை நாடி அலையவில்லை, கருவுயிர்ப்புக்குத் தேவையான பேற்றிடம் அமைப்பதற்காகப் பொருளைத் தேடுவதற்காகவே வெளியே சென்று வருகிறது. அஃறிணைக்

குடும்பத்தில் காணப்படும் கடமை உணர்ச்சி கண்டும் தலைவன் கடமை உணர்ச்சி பெறவில்லை, என்று வாயில் வேண்டி வந்த பாணனிடம் தோழி தலைவனை மறைமுகமாகத் தாக்கியிருப்பதையும், உயிர்கள் துன்பம் அடையும் போது கருணையோடு உதவுவது அன்பின் நிலையை வெளிப்படுத்துவதோடு இத்தகைய அன்பு பறவைகளிடமும் இருப்பதை என்று குறிப்பிட்டிருப்பதன் மூலமாக அறியமுடிகிறது.

**கொக்கு**

மாலை நேரங்களில் பறவைகள் தங்களது இருப்பிடத்தைச் சென்று அடையும் என்பதை,

**"நெடு வேள் மார்பின் ஆரம் போல**
**சேவ் வாய் வானம் தீண்டி, மீன் அருந்தும்**
**பைங் காற் கொக்கினம் நிரை பறை உகப்ப...." (அகநா.120)**

என்ற பாடலில் முருகப்பெருமானின் நிறம் போன்ற செவ்வானத்தில் மீனை உண்ணும் பசிய கால்களையுடைய கொக்கினம் உயரத்தில் வரிசையாகப் பறந்து சென்று சூரியன் மறையும் மேற்கு திசையில் உள்ள மலையைச் சென்று அடையும் என்று கூறுவதற்கு, முருகப்பெருமானின் மார்பில் அணிந்திருக்கும் முத்துமாலை உவமையாகக் கூறப்பட்டிருப்பதன் மூலமாக தெரிந்து கொள்ளமுடியும். இதே போன்று,

**"நாரை நல்லினங் கடுப்ப மகளிர்**
**நீர்வார் கூந்தல் உளரும் துறைவ" (ஐங்.186)**

என்ற பாடலில் நாரைகள் நீரால் நனைந்த தமது சிறகு உலர்வதற்காக உதறி வயிற்றில் அடித்துக் கொள்ளும். அதைப் போல மகளிர் நீர் ஒழுகும் கூந்தலை உலர்த்துவர் என்று உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இ∴தோடு,

**"கழை வளர் அடுக்கத்து, இயலி ஆடு மயில்**
**நனவுப் புரு விறலியின் தோன்றும் நாடன்" (அகநா.82)**

என்னும் அகநானூற்று பாடலில் மலையில் மயில்கள் உலவி ஆடுகின்ற காட்சி, ஆடுகளத்திற் புகுந்தாடும் விறலி போலத் தோற்றம் தரும் என்றும்,

**"மட மா மிசையோர்**
**பிடிமேல் அன்னப் பெரும் படை அனையோர்" (பரிபா.12)**

மெல்லிய நடையை உடைய பெரிய பெண் அன்னம் போன்ற மகளிர் என்றும் அன்னப் பறவையும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**கானக்கோழி**

இந்தியாவைத் தாயகமாகக் கொண்ட காட்டுக் கோழியில் இருந்தே உலகிலுள்ள அனைத்துக் கோழியினங்களும் தோன்றியிருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. இத்தகு கான வாரணத்தை,

**"உருக் குறு நறு நெய் பால் விதிர்த்தன்ன**
**பேடை நோக்கிய பெருந்தகு நிலையே....." (நற்.21)**

உருக்கிய நல்ல நெய்யைப் பாலில் சிதறினாற் போல ஒலி நிரம்பாத ஓசையையுடைய கழுத்தினையும், அழகிய புள்ளிகளையும் காட்டுக் கோழி மழை நீர் ஓடிய முல்லைக் காட்டில் உலராத ஈர மணலை நன்கு கிளறி அன்றைய இரையை வைத்துக் கொண்டு தன் பெடையை பெருமை தங்கிய நிலையோடு அழைக்கும். இது போலவே தலைவியின் விருப்பமும் காணப்படும் என கானக்கோழியின் காதல் உவமையாகக் கூறியுள்ளனர். இவ்வாறு சங்கப்புலவர்களின் உவமை நயத்தை "சங்கப்பாடல்களுக்கு அணி பயக்கும் உவமைகள் புலவர்களின் மதிநுட்பத்தால் கவினுறக் காட்சியளிக்கின்றன. அணிகளுக்கெல்லாம் தாயணியாகக் கருதப்படுவது இவ்வுவமையணியாகும். சங்கப்புலவர்கள் சிறப்பான உவமைகளைக் கையாளுவதில் வல்லவர்கள்"[21]என்பார் ப. மகேஸ்வரி அவர்கள்.

**இறைச்சிப் பொருள்**

அகப் பாடல்களில் காணப்படும் உள்ளுறையைப் போன்று இலக்கியங்களில் எடுத்தாளப்பட்டுள்ள பொருள் நய உத்தி முறை இறைச்சி எனப்படும். இதனைத் தொல்காப்பியரும்,

**"இறைச்சி தானே உரிப்புறத்ததுவே"**
**"இறைச்சியிற் பிறக்கும் பொருளுமாருளவே"**
**"அன்புறு தகுவன இறைச்சியிற் சுட்டறும்"**

**(தொல். பொ.அகத். 33, 34, 35)**

என்று குறிப்பிட்டுள்ளார். இறைச்சி என்னும் சொல் கருப்பொருளைக் குறிக்கும். சிறப்பாக பறவைகளைக் குறிக்கும். மக்களின் ஒழுக்கலாறுகளாகக் கருதப்படும் புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்னும் உரிப்பொருள்களைச் சிற்றுயிர்கள் மேல் ஏற்றி உரிப் பொருளைச் சிறப்பித்துக் கூறுவது இறைச்சியாகும்.

**இறைச்சிப் பொருளில் வரும் பறவைகள்**

- பாலை நிலப் பருந்து
- கணந்துள்
- குயில்
- மனையுறைக் குருவி
- புறா
- கிளி

போன்ற பறவைகள் இறைச்சிப் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**வர்ணனையில் மயிலின் பங்கு**

சங்க இலக்கியங்களில் புலவர்கள் எவ்வாறு வருணனையை பயன்படுத்தியிருந்தனர் என்பதனை "நிலத்தை அடுத்து மரபு வழி வருவது வருணனை ஆகும். சங்க காலப் பாடல்களில் வருணனை ஒருவகை, கண்ணால் பார்ப்பதை மனம் எவ்வாறு ஏற்றுக் கொள்கிறதோ அவ்வாறே பாடும் இயல்பு பல்கியிருந்த காலம் இது"[22] என்று அ.ச.ஞானசம்பந்தன் கூறியுள்ளதற்கேற்ப ஐங்குறுநூற்றில் மயில் இடம்பெற்ற பாடல்களில்,

**"விசும்பிழி தோகைச் சீர்போன்றி சினே**
**பசும் பொன் அவிர் இழை பைய நிழற்ற" (ஐங்.74)**

தலைவி மரத்திலிருந்து நீரில் பாயும் போது மயில் போலவும், அப்போது காற்றின் விசையால் அசையும் கூந்தல் வானினின்று இறங்கும் தோகை மயிலின் தோற்றத்தை ஒத்துருந்ததாகவும்,

**"பொய்படுபு அறியாக் கழங்கே-மெய்யே**
**மணிவரைக் கட்சி மடமயில் ஆலும்நம்**
**மலர்ந்த வள்ளி அம்கானம் கிழவோன்" (ஐங்.250)**

என்று மணிகள் நிறைந்த மலைச் சாரல் காட்டில் மடப்பம் பொருந்திய மயில்கள் வள்ளிக் கொடி அடர்ந்த காட்டில் மகிழ்ந்து ஆடுவதாகவும்,

**"அணிமயில் அன்ன அசை தடைக் கொடிச்சியைப்" (ஐங்.258)**

அழகிய மயில் போன்ற அசைந்த நடையையுடையவள் கொடிச்சி எனவும்,

**"மயில்கள் ஆலக் குடிஞை இரட்டும்" (ஐங்.291)**

பருந்த தோள்களையும் மெல்லிய தழையுடை கிடந்து அசையும் அல்குலையும் உடையவளான தலைவியின் நாட்டில் மயில்கள் மகிழ்ந்து அசைந்தாடும் என்றும்,

**"மயில்கள் ஆலப் பெருந்தேன் இடிரத்**
**தண்மழை தமீஇய மாமலை நாட" (ஐங்.292)**

மயில்கள் குளிர்ந்த மேகங்களால் உண்டாகும் மழையால் இன்புற்று மகிழ்வன எனவும், (ஐங்.293) மயில் போன்ற சிறப்பு உடைய மங்கையர் கூந்தல் மயில் தோகை போன்றது என்றும், (ஐங்.294) நெருப்பைப் போன்ற மலர்களையுடைய வேங்கை மரத்தில் அமர்ந்திருந்த மயில் பொன் அணிகளை அணிந்த மகளிர் போன்று காட்சியளிக்கும் என்றும், (ஐங்.296) தினை விளையும் மலைக்கு பக்க மலையில் வாழும் மயிலினம் தினையைக் கள்ளத்தனமாக கவர்ந்து உண்ணும் என்றும், (ஐங்.297) வேங்கை மரத்தில் அமர்ந்திருக்கும் மயில் மரத்தில் ஏறிப் பூப்பறிக்கும் பெண் போன்று இருப்பதாகவும், (ஐங்.298) மழையின் முகிலைக் கண்டால் மகிழும் மயில் ஆரவாரத்துடன் நடனமாடும் என்றும், (ஐங்.299) தன் காதலி மயிலைப் போன்று அசைந்து நடப்பதாகவும், (ஐங்.300) குறமகளின் கூந்தலுக்கு ஒப்பாவது போல மயில் தனது தோகையை விரித்ததாகவும் இடம்பெற்றுள்ள இப்பாடல்கள் மூலம் மங்கையைப் பாராட்ட மயிலையும், மயிலை வர்ணிக்க மங்கையையும் ஒப்பிட்டுள்ளமை வியக்கச் செய்யும் வகையில் உள்ளது. இங்ஙனம் "மகளிரின் சொல் கிளிக்கும், நடை மயில், அன்னம் ஆகியவற்றிற்கு உவமிக்கப்பட்டுள்ளது. புள்ளும், விலங்கும், செடி கொடிகளும் உவமைக்கு இடமாதல் போலத் தெய்வங்கள் உவமைக்கு இடனாக அமையவில்லை"[23] என்பது இரா.சீனிவாசன் கருத்தாகும்.

**ஆரம்பகாலந்தொட்டு பறவைகளின் செயல்பாடுகளும் மக்களின் அணுகுமுறைகளும்**

இறப்பு ஏற்பட்ட இடத்திற்குச் சென்று துக்கம் விசாரித்தல் என்பது, அனைத்தையும் பகுத்தறியத் தெரிந்த மனிதர்களிடம் காணப்படும் பழக்கம். ஆனால் இதனை ஐந்தறிவு படைத்த பறவைகளிடமும் ஆறுதல் கூறும் பண்பு இருந்திருப்பதை,

**"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
**காணிய சென்ற மடநடை நாரை**
**மதிப்ப நக்க கண்போல் நெய்தல்." (ஐங்.151)**

என்ற பாடலில் இந்த அவலக் காட்சியை வெள்ளாங்குருகின் குஞ்சு இறந்து விட்ட செய்தியைக் கேள்விப்பட்டு அதைப் பார்ப்பதற்கு மடப்பம் பொருந்திய நடையை உடைய நாரைச் சென்றதாகவும் வருத்தத்தில் நாரை நடந்த இடத்தில் நீரில் பூத்திருந்த நெய்தல் பூக்கள் அழிந்ததாகவும் கூறியிருப்பதன் மூலம் வெள்ளாங்குருகு என்பது நாரையினத்தின் வேறு ஒரு வகை என்பதையும் ஓவியமாகத் தீட்டியிருப்பதைக் காணலாம். மேலும் ஐங்குநுறூற்றில்,

**குருகுடைத் துண்ட வெள்ள கட்டியாமை**
**அரிப்பறை வினைநர் அல்குமிசைக் கூட்டும்" (ஐங்.81)**

என்று குருகுகள் உண்டு கழித்து விட்ட யாமை இறைச்சியை உழவர்கள் தம் உணவுடன் கூட்டி உண்பார்கள் என்ற செய்தியை இப்பாடல் வழி அறிவதுடன்,

**"மனை சேர் பெண்ணை மடி வாய் அன்றில்**
**துணை ஒன்று பிரியினும் துஞ்சாகாண் என" (அகநா.50)**

எனப் பனை மரத்தில் ஒன்றியிருக்கும் வளைந்த வாயை உடைய அன்றில் பறவைகள் துணையானது பிரிந்தாலும் சிறிதும் துயிலாமல் இருப்பதைக் கண்டு அப்பறவைகளுக்காகத் தான் கண்ணீா் விடுவதாகத் தலைவி பாவனை செய்ததாகவும் பறவைகளின் செய்கைகளோடு மக்களின் செய்கைகள் ஒன்றித்து பார்க்கப்பட்டுள்ளன.

**தலைவி கூற்றில் பறவைகள்**

தலைவி சங்க இலக்கிய மாந்தர்களில் முதன்மையான இடத்தைப் பெறுகிறாள். தலைவியை சுற்றியே பிற மாந்தர்கள் இடம்பெறுகின்றனர். தனக்கு தானே நிகரான பாத்திரமாக இருப்பவள் தலைவி. எனவே அகத்திணைக் கூற்றுக்குள் அமைந்த மையப்புள்ளியாக கருதப்படுகிறாள். இத்தகைய தலைவி கூற்றில் இடம் பெற்றுள்ள பறவைகள் குறித்து கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அன்றில்**

துணையுடன் கூடிய அன்றில் பறவைகள் யான் வருந்துவேன் என்று எண்ணி இரவில் அழைக்காமல் நம் வருத்தம் கண்டு அப்பறவைகளும் வருத்தம் அடைந்தது (கலித்.131) என்று பறவைகளின் இயல்பான வாழ்வை தலைவியின் வாழ்க்கையோடு இணைத்து கூறியிருப்பது புலவர்களின் கற்பனைத்திறத்தை மெய்சிலிர்க்கச் செய்கிறது. இதே போன்று

**"அன்னையோ..................................**

**அன்ன வான் சேவல் புணர்ச்சிபோல், ஒண்ணுதல்" (கலித்.147)**

கணவனைப் பிரிந்து இன்னல்களை அடைந்த தலைவியிடம் அன்னப் பறவை விரைந்து செல்லும் போது அதைத் தொடர்ந்து அன்னச் சேவலின் கூட்டம் இணைந்து செல்லுவதைப் போன்று தலைவன் திரும்பி வந்து தலைவியை மகிழ்ச்சி அடையச் செய்தான் என்று கூறப்பட்டிருப்பதில் தலைவியை அன்னத்துடன் ஒப்புமை படுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது.

**பறவையுடன் உரையாடல்**

வருத்தமிகுதியின் போது நம்மை அறியாது நமது மனதில் இருக்கும் கலக்கத்தை நெருங்கிய உறவுகளிடம் வெளிப்படுத்தி ஆறுதல் தேடிக் கொள்ள விரும்பும் அவ்வகையில் தலைவி அன்றில் பறவையிடம் உரையாடியதை,

**"காதல் செய்து அகன்றாரை உடையையோ – நீ**

**மன்று இரும் பெண்ணை மடல் சேர் அன்றில்" (கலித்.129)**

என்று முன்பு காதல் மொழி பேசி பின்பு நீங்கிய தலைவரை எண்ணி எம்மைப் போல் நீயும் வருந்துகிறாயோ என்று மன்றத்தில் உள்ள கரிய பனை மடலில் இருந்து ஆரவாரம் செய்யும் அன்றில் பறவையிடம் தலைவி வினவியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**இருதலைப்புள்**

இருதலைப்புள் என்று சங்க இலக்கியத்தில் கூறப்பட்டிருக்கும் பறவை தற்போது இருவாச்சி என்று அழைக்கப்படும் பறவையாக இருக்கலாம் என்பதற்கு சான்றுகள் இன்மையால் ஐயம் மட்டுமே காணப்படுகிறது. இப்பறவையை வைத்து புலவர்கள் மறைமுகப் பொருள் கொண்டுள்ளதை,

**"யார் பிரிய யார் வர யார் வினவ யார் செப்பு**

**நீர் உரை செய் நீர்மை மை இல் சூள் என்றி நேரிழாய்" (பரிபா.8.)**

என்ற பாடலில் தலைவியும் நானும் இருதலைப் பறவையின் ஓர் உயிர் போன்றவர்கள் என்று கூறப்பட்டுள்ளது. இதனையே பரிமேல்அழகரும் தனது உரையில் நேரிழாய் ! யார் பிரிய யார் வர யார் வினவ யாரது செப்பு என்றது, இருதலைப்புள்ளின் ஒருயிரேயாம் ஆதலாற் பிரிவும் வரவும் வினவும் செப்பு

நம்மிடை உளவாகா என்று கூறியுள்ளதைக் காணும் போது சங்க இலக்கியத்திற்கு உரை எழுதியிருக்கும் உரையாசிரியர்களிமும் கருத்துக்களில் வேறுபாடு தோன்றியுள்ளதைக் காணமுடிகிறது.

**பெண்கள் கிளியோட்டுதல்**

மலைப்பிரதேசங்களில் மட்டுமே தினை வளரும் தகவமைப்பு இருப்பதை நம்மால் காணமுடியும். இத்தினையே நமது குறிஞ்சி நில மக்களின் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து உயிர்பெறச் செய்த உயிர்நாடி என்று கூறலாம். குறிஞ்சி நில மக்கள் தினையைப் பொன் போல் போற்றி வாழ்ந்துள்ளனர் என்பதை,

**"புனவன் துடவைப் பொன்போல் சிறுதினை"** (குறுந்.133)
**"நன்பொன் அன்ன புனிறு நீர் ஏனல்"** (ஐங்.263)

என்ற பாடல் வரிகள் நமக்கு உணர்த்துகின்றன. இத்தினைப் புனத்திற்கு வரும் பாதிப்புகளாக மழையின்மை, பன்றி, யானை, கானங்கோழி, கிளி, மயில் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

கிளிகள் பற்றியச் செய்திகள் அதிகமாக காணப்படுகிறது. தினைப்புனத்தைக் காப்பதில் ஆண், பெண் இருவரும் பங்கு பெற்றிருந்தனர். ஆண்கள் வலிமை வாய்ந்த பன்றி, யானை போன்ற விலங்குகளிடமிருந்து தினையைக் காத்தனர். பெண்கள் மட்டுமே கிளி ஓட்டுதலில் ஈடுபட்டிருந்தனர் என்று கூற முடியும். ஏனெனில் அந்தளவிற்கு சங்கப்பாடல்களில் சான்றுகள் உள்ளதை,

**"கொடுங் குரற் குறைந்த செவ்வாய்ப் பைங் கிளி**
**அஞ்சல் ஓம்பி, ஆர் பதம் கொண்டு**
**கானக் குறவர் மட மகள்**
**ஏனல் காவல் ஆயினன்"** (நற்.102)

வளைந்த தினைக் கதிர்களைக் கொய்து விளங்கும் சிவந்த வாயுடைய பசிய கிளியே அஞ்சாமல் விரும்பிய மட்டும் கதிர்களை உணவாகக் கொள்ளும் அத்தகைய தினைப்புனம் காக்க நேர்ந்தது என்று கூறியுள்ளதன் மூலமும்,

**"இனக் கிளி யாம் கடிந்து ஓம்பும் புனத்து அயல்"** (கலித்.37)
**"கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந் தினை**
**முந்து விளை பெருங் குரல் கொண்ட மந்தி"** (நற்.22)

என்ற பாடல்களில் கிளிகள் தினைப் புனத்தில் வந்து உண்ணாமல் கிளியை ஓட்டிப் பாதுகாக்கும் தினைப் புனத்தில் உள்ள ஊசலில் அமர்ந்து ஆடினேன் என்று தலைவி கூறியிருப்பதன் மூலம் தலைவியின் குழந்தைத் தன்மை புலப்படுவதோடு, தலைவி காக்கும் தினைப் புனத்தில் உள்ள கதிர்களை மந்தியும் கைக் கொண்டுள்ளது என்று கூறியுள்ளனர். மேலும்,

**"தே மொழித் திரண்ட மென் தோள் மா மலைப்**
**பரீஇ வித்திய ஏனல்**
**குரீஇ ஒப்புவாள் பெரு மழைக் கண்ணே" (குறுந்.72)**

தினையின் இடையிடையே பருத்தி விதைக்கப் பெற்ற கதிர்கள் முதிர்ந்த தினைப் புனத்தில் கதிர்களைக் கவர வரும் குருவிகளை இனிய மொழியையும், மெல்லிய தோளினையும் உடைய தலைவி ஓட்டிக் கொண்டிருப்பதாக கூறும் இப்பாடல் வரிகளின் வழி கூட்டுப்பயிர் முறை இருந்துள்ளதையும் தினையையும், பருத்தியையும் கூட்டுப்பயிராக உற்பத்தி செய்ததும் அறியலாகிறது. இதனோடு,

**"படி கிளி பாயும் பசுங் குரல் ஏனல்" (கலித்.50)**

தினைப்புனத்தில் பசுமையான கதிரை உடைய தினையில் வந்து பொருந்தும் கிளியை ஓட்டுதலை மறக்கச் செய்ததாகத் தலைவி தலைவனிடம் கூறியுள்ளதன் மூலம் தலைவியின் காதல் உள்ளத்தை அறியமுடிகிறது. போன்ற பாடல்களில் பெண்கள் தினைப்புனம் காத்தற்கானச் சான்றுகளாக அமைகின்றன. மேலும் பெண்கள் கிளியை விரட்ட பல வழி முறைகளைக் கையாண்டுள்ளனர். அவையாவன,



**ஒலியெழுப்புதல்**

பெரும்பாலும் தினையைச் சேதப்படுத்துவது போன்ற செய்திகளில் தினைக்கதிர் முற்றும் பருவம் நீர் பாய்ச்சுவதற்கு உகந்தது அன்று. அப்போது வளமுடையதாக இருக்கும் கதிர்களைக் கவர்ந்து உண்ண வரும் கிளிகள் தினையில் உட்காருமானால் முதிர்ந்திருக்கும் கதிர்கள் உதிர்ந்து விடும். கதிர் உதிர்ந்த பின் தட்டை மட்டும் இருப்பதைத் தவிர்க்க தினைப்புனம் காக்க வரும் தலைவியைத் தலைவன் சந்தித்தலின் போது தினையில் படியும் கிளிகளை ஓட்ட தெளிந்த ஒலிகளை இடையிடையே பலகாலும் எழுப்பி வருவதை,

**"பூக்கெழு தொடலை நுடங்க எழுந்து எழுந்து**
**கிள்ளை தெள்வளி இடை இடை பயிற்றி**
**ஆங்கு ஆங்கு ஒழுகாய் ஆயின் அன்னை**
**சிறுகிளி கடிதல் தேற்றாள் இவள் என" (அகநா.28)**

என்ற பாடல் நமக்குத் தெளிவாகப் பகர்கின்றது. மேலும் இசைக் கருவிகளைப் போன்று இனிய ஓசையை உடைய பறவைகளின் ஒலி மிகுந்த தினைப் புனத்தில் பெருத்த ஓசையையுடைய தெளிந்த சொற்களைச் சொல்லி கிளிகளை ஓட்டியதை,

**"புள் ஆர் இயத்த விலங்கு மலைச் சிலம்பின்**
**வள் உயிர்த் தெள் விளி இடைஇடைப் பயிற்றி**
**கிள்ளை ஒப்பியும் கிளை இதழ் பறியா" (குறிஞ்சிப்.99 -101)**

என்ற வரிகளில் குறிப்பிட்டுள்ளனர். இதேப் போன்று,

**"குறும் படைப் பகழிக் கொடு வில் கானவன்**
**புனம் உண்டு கடிந்த பைங் கண் யானை**
**நறுந் தழை மகளிர் ஒப்பும் கிள்ளையொடு" (குறுந்.333)**

என்ற பாடலில் தினையை உண்டதால் அம்பையும் வில்லையும் கொண்ட வேட்டுவனால் விரட்டப்பட்ட யானை, நறிய தழையடை அணிந்த மகளிர் கிளியோட்டும் இடத்திற்கு செல்ல நோக்குவதாக கூறப்பட்டிருப்பதால் மகளிரிடம் கிளி ஓட்ட வலிமையான ஆயுதங்கள் என்பது தெளிவாகுவதோடு,

**"படுகிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே..........**
**......கிளி, அவள் விளி எழல் ஒல்லாவே......" (குறுந்.291)**

தினையில் வீழும் கிளிகளை ஓட்ட தலைவி எழுப்பும் ‘குளிர்’ என்னும் கருவியின் ஒசையை தலைவியின் பாட்டின் தாளம் எனக் கருதிக் கிளிகள் தாம் படிந்த கிளையிலிருந்து நீங்காமல் இருக்கும் என்று கூறியிருப்பதன் மூலம் தினையைக் கவரவரும் பறவைகளைக் கூட பயங்கர ஆயுதங்களைக் கொண்டு விரட்டாமல் இசைக் கருவிகளைப் பயன்படுத்தி பறவைகளை ஓட்டியிருப்பதைப் பாடல்கள் மூலமாக தெரிந்து கொள்ள முடிகிறது.

**பரணமைத்து கிளியோட்டுதல்**

தினை விதைக்கப்பட்டிருக்கும் இடங்களில் மரங்களின் மீதும், மலைக் குகைகளின் மீதும் பரண் அமைத்து தினைகளைக் காத்துள்ளனர் என்பதை,

**“களிறு அணந்து எய்தாக் கல் முகை இதணத்து**
**சிறு திணைப் படு கிளி.........................” (அகநா.308)**

தலைவியின் தந்தை அவளுக்காக களிறுகள் தன் துதிக்கையை உயர்த்தி பற்ற இயலாத வகையில் மலைக்குகையின் மீது பரண் அமைத்து வைத்துள்ளதில் இருந்து கெண்டு தினைப்புனத்தில் வீழ்கின்ற கிளிகளைத் தலைவனும் நம்முடன் ஓட்டினான் என்பதை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மேலும்,

**“பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஒப்பி**
**ஓங்குஇருஞ் சிலம்பின் ஒள்இணர் நறுவீ**
**வேங்கைஅம் கவட்டிடை நிவந்த இதணத்து” (அகநா.388)**

தினையில் கடியும் கிளிகளை ஓட்ட, உயரமான மலையில் காணப்படும் மணங்கமழும் மலர்களை உடைய வேங்கை மரத்தின் கவையில் கட்டிய பரணில் அமர்ந்து கொண்டு வண்டின் இசையைக் கேட்ட வண்ணம் இருப்பதாகவும் கூறியுள்ளனர்.

**கருவிகளைப் பயன்படுத்துதல்**

பறவைகளின் முக்கிய உணவாக இருப்பது தினைகளாகும். இத்தினையைக் கவர வரும் கிளிகளை விரட்டும் வழக்கம் ஆரம்ப காலம் தொட்டு இன்று வரைத் தொடரும் ஒரு செயலாகும். இவ்வாறு தினையைக் கவரவரும் கிளிகளை விரட்ட சங்க காலத்து மக்கள் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை கீழ்க்காணும் பாடல்களால் அறியமுடியும்.

**“சிறு தினைப் படு கிளி கடீஇயர், பல் மாண்**
**குளிர் கொள் தட்டை மதன் இல புடையா**
**சூரரமகளிரின்.......................................” (அகநா.32)**

சிறு தினையைக் கவர வரும் கிளிகளை ஓட்ட சூரரமகளிர் குளிர், தட்டை என்ற இரு கருவிகளைப் பயன்படுத்தியதாகவும்,

**“தொண்டகச் சிறு பறைப் பாணி அயலது**
**பைந் தாட் செந்தினைப் படு கிளி ஒப்பும்” (நற்.104)**

என்ற பாடல்களில் தலைவியுடன் தங்கியிருந்து சிறிய தினையைக் கவர வரும் கிளிகளை தலைவனும் விரட்டியதாகவும், தினையைக் கவர வரும் கிளிகள் தொண்டகப் பறையின் ஒலிக்கு அஞ்சி வெருண்டோடியதாகவும் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. மேலும்,

**“செவ்வாய்ப் பாசினம் கடீஇயர், கொடிச்சி**
**அவ்வாய்த் தட்டையொடு அவணை ஆக!” (நற்.134)**

கிளிக் கூட்டம் தினையைக் கொத்தி தின்னாதபடி அழகிய வாயையுடைய தட்டை என்ற கிளியோட்டும் கருவியோடு தினைக் கொல்லையில் இருக்குமாறு தாய் கூறியதாகவும்,

**“செவ்வாய்ப் பைங் கிளி கவர, நீ மற்று**
**எவ்வாய்ச் சென்றனை அவண்? எனக் கூறி,**
**அன்னை ஆனாள் கழற.....” (நற்.147)**

பெரிய தினைக் கதிர்களைச் சிவந்த வாயையுடைய பசிய கிளிகள் கவர்ந்துள்ளதைக் கண்ட தாய் தலைவியிடம் தட்டை என்னும் கிளி கடி கருவியைக் கொண்டு எங்கு சென்றாய் என்று வினவியதாகவும்,

**“அம்ம – வாழி, தோழி –நம்மலை**
**அமைஅறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்**
**நறுவிரை ஆரம் அறஎறிந்து உழுத**
**உளைக்குரல் சிறுதினை கவர்தலின், கிளைஅமல்**
**பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஒப்பி,” (அகநா.388)**

தினையில் விளைந்த கதிர்களைக் கிளிகள் கவர வருவதால், அவற்றை மலையில் வளர்ந்த மூங்கிலை அறுத்துச் செய்த தட்டை கொண்டு கிளிகளை ஓட்டுவதாகவும்,

**"தளிர் சேர் தண் தழை தைஇ, நுந்தை**
**குளிர் வாய் வியன் புனத்து..." (நற்.204)**

என்ற பாடல் வரிகள் தளிர் சேர்ந்த தண்ணிய தழையாடையை அணிந்த தலைவி தனது தந்தை கொடுத்த கிளி கடிக் கருவியை எடுத்துக் கொண்டு தினைப் புனத்திற்கு சென்றதாகவும் கூறியுள்ளன. மேலும்,

**"செவ் வாய்ப் பாசினம் கவரும் என்று அவ் வாய்த்**
**தட்டையும் புடைத்தனை, கவணையும் தொடுக்க என**
**எந்தை வந்து உரைத்தனனாக...." (நற்.206)**

தினையின் இளங்கதிர்கள் பால் நிறைந்து தலை சாய்ந்து நிற்பதால் கிளிக் கூட்டம் கவர்ந்து செல்ல வரும். ஆகையால் தினைப் புனத்திற்குச் சென்று தட்டை புடைத்தும், கவண் கல் வீசியும், காவல் புரிக என்று தலைவியின் தந்தை கூறியதாகவும்,

**"தந்தை வித்திய மென் தினை பைபயச்**
**சிறு கிளி கடிதல் பிறக்கு யாவணதோ**
**குளிர் படு கையள் கொடிச்சி செல்க என**
**நல்ல இனிய கூறி, மெல்லக்**
**கொயல் தொடங்கினரே கானவர்.." (நற்.306)**

தலைவியின் தந்தை விதைத்த தினைகதிர் விளைந்ததினால் கிளி கடிக் கருவியைக் கையில் கொண்டு இருக்கும் கொடிச்சியிடம் நல்ல இனிய சொற்களைக் கூறித் தலைவியை இல்லத்திற்குச் செல்லுமாறு கானவர் கூறிவிட்டு தினைக்கதிர்களைக் கொய்யத் தொடங்கியதாக கூறியிருப்பதன் மூலம் தாயைப் போலவே தந்தையரும் பெண் மக்களை அன்போடு நடத்தியுள்ளதைக் காணமுடிகிறது. இதே போன்று குறிஞ்சிப்பாட்டில் உள்ள,

**"தழலும் தட்டையும் குளிரும் பிறவும்**
**கிளி கடி மரபின...." (குறிஞ்சிப்.42:44)**

என்ற பாடல் அடிகளின் வழி உயர்ந்த மரத்தில் பரணிடத்தில் இருப்பவன் அமைத்துக் கொடுத்த பரணில் ஏறி அமர்ந்து கொண்டு பிரம்பினால் அழகுண்டாகப் பின்னிய தழல் என்னும் கருவியும், தட்டை என்னும் கருவியும், குளிர் என்னும்

கருவியும் இவை போன்ற பிற கருவிகளும் முறை முறையாக கையில் கொண்டிருந்தனர் என்ற குறிப்பைக் காணும் போது கிளிகளைகள் விரட்ட கருவிகள் பயன்படுத்தப் பட்டுள்ளதையும் காணமுடிகிறது. மேலும்,

**"மெல்லியல் மகளிர் ஒல்குவனர் இயலி**
**கிளி கடி................................." (பதிற்றுப்.78)**

மென்மையான இயல்புடைய மகளிர் மருத வயலுக்குச் சென்று அங்குள்ள தாமரை மற்றும் நெய்தல் மலர்களை அரிந்து கொண்டு முல்லை நிலத்திற்குச் சென்று அங்கு படியும் கிளிகளை ஓட்டும் குரல் எழுப்புவர் என்று கூறப்பட்டுள்ளதைக் காணும் போது பெண்கள் பறவைகளை விரட்ட தங்களது மென்மை தன்மையைப் புலப்படுத்தும் விதமாக பூக்களை எடுத்துச் சென்றுள்ளதையும் அறியமுடிகிறது. மேலும் காவலின் போது பறவைகளுக்கு துன்பம் விளைவிக்கக் கூடிய ஆயுதங்களைப் பயன்படுத்தவில்லை என்பதும் தெரிந்து கொள்ளப்பட்டுள்ளது.

இவ்வாறு தினைக் காவல் செய்த பெண்கள் ஒரு குறிப்பிட்ட காலம் மட்டுமே இத்தொழிலைச் செய்துள்ளனர் என்பதை,

**"குன்றக் குறவன் காதல் மட மகள்**
**மென்தோள் கொடிச்சியைப் பெற்ற கரிது தில்ல**
**பைம்புறப் படுகிளி ஒப்பலாப் பலர்" (ஐங்.260)**

என்ற இப்பாடல் வரிகளின் மூலம் தினைமுற்றி இல்லத்தின் கண் சேர்ப்பதாயின் குறவனின் மகளாகிய கொடிச்சி பசுமையான புறத்தையுடைய கிளிகளை ஓட்டுதல் பணியை இனி செய்யமாட்டாள் என்பது அறியப்பட்டது.

**பொய்ப்புலி**

மலைப் பகுதியில் புன்செய் நிலத்தில் தினைப் பயிரை விதைத்த குறவர்கள் விலங்குகள் பயிரை வந்து அழிக்காமல் இருப்பதற்காக பெண்புலியைப் போன்ற உருவம் செய்து தினைப் புனத்தின் நடுவில் வைப்பர். அந்த புலியின் கண்ணாக கழற்சி காயை அமைப்பர் என்பதை,

**"வெறிசெறித்தனனே வேலன் - கறிய**
**கன்முகை வயப்புலி கழங்குமெய்ப்படூஉ**
**புன்புலம் வித்திய புனவர் புணர்ந்த**

**மெய்ம்மையன்ன மெண்பாற் புணர்ந்து**

**மன்றில் பையுள்தீரும்" (ஐங்.246)**

என்ற ஐங்குறுநூறு பாடல் வரியால் அறிந்து கொள்ள முடிகிறது. மேலும்,

**"புணர் குறி செய்த புலர்குரல் எனல்**

**கிளி கடி பாடலும் ஒழிந்தனள்................" (அகநா.118)**

பகற்குறியில் புணர்ந்திருந்த தலைவி தினைப்புனத்தில் தினை முற்றியதால் கிளிகளிடமிருந்து கதிர்களைக்காப்பதற்கு கிளி ஓட்டும் பாடலைப் பாடுவதற்குமின்றி இற்செறிக்கப்பட்டால் என்பதன் மூலம் கிளியேட்டுவதற்கு இசைக்கருவிகளைப் பயன்படுத்தியது போன்று பாடல்கள் பாடியும் கிளி ஓட்டும் பழக்கம் இருந்திருப்பது இப்பாடலால் தெளிவாகிறது.

**குயில்**

காகத்தை விடச் சற்று சிறிய அளவுடைய குயில் மரக்கிளையில் மறைந்திருக்கும். குயிலைச் சோம்பேறிப் பறவை என்றும் கூறலாம். ஆண், பெண் இரண்டுமே வெவ்வேறு வகையில் பாடும். இதனை,

**"கோகுலமாய்க் கூவுநரும்" - (பரிபா.9)**

தேவ சேனையின் தோழியர் வள்ளியின் தோழியர் செயல்களைக் கண்டு அஞ்சி, குயில்களாய் மாறிக் கூவினர் என்று மகளீரின் குரலொடு ஒப்பிட்டும்,

**"குயில் ஆலும் பொழுது எனக் கூறுநர் உளராயின்" (கலித்.30)**

வெயிலின் ஒளியில்லாத மலர்களை உடைய சோலையில் குயில் கூவும் இளவேனிற்காலம் வந்தது என்று பரத்தையிடம் சென்ற தலைவனிடம் கூறுபவர் இருந்தால் தலைவர் திரும்பி வருவார் என்று தலைவி கூறியுள்ளதை நோக்கும் போது அவளது அறியாமைத் தன்மை தெளிவாகப் புலப்படுகிறது. இவ்வாறே ஐங்குறுநூற்றில்,

**"அலரே குரவ நீள்சினை உறையும்**

**பருவ மாக் குயிற் கௌவையின் பெரிதே" (ஐங்.369)**

அலர் என்பது குரவ மரத்தின் நீண்ட கிளையிலிருந்து கொண்டு வேனிற் பருவத்தில் கூவும் இயல்புடைய குயில் செய்யும் ஓசையை விடப் பெரிதாயிற்று என்றும், பெண்குயில் அன்பொழுக வேண்டும் என்பதற்காக தனது இணையைப் பல முறை கூவியழைத்து ஆரவாரம் செய்வது கௌவை என்று இப்பாடலில் கூறியுள்ளனர்.

**குருவி**

மனையுறைக் குருவிகள் எப்போதும் கூட்டமாகவும், இன்பமாகவும் இருப்பதாகக் குறுந்தொகைப் பாடலில்,

**"ஆம்பற் பூவின் சாம்பல் அன்ன**
**இல் இறைப் பள்ளித் தம் பிள்ளையொடு வதியும்..." - (குறுந்.46)**

ஆம்பல் மலர் வாடியது போன்ற குவிந்த சிறகுகளை உடைய வீட்டின் கண் தங்கும் குருவிகள் முற்றத்தில் உலரும் தானியம் தின்று பொது இடத்திலுள்ள எருவின் நுண்ணிய பொடியைக் குடைந்து விளையாடிய பின் வீட்டின் இறப்பில் உள்ள தம் குஞ்சுகளோடு தங்கும் என்று பிரிவிடை ஆற்றாத தலைவி குருவிகளைக் கூறி வருந்துவதில் இருந்து இவ்வாறு ஐந்தறிவு பறவைகளின் கூட்டு வாழ்வைக் கண்டும் தலைவன் மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற மாலைக்காலத்திலும் திரும்ப வில்லை என்பதையும் கூட்டு வாழ்க்கை முறையை மக்களுக்கு புலவர்கள் உரைப்பதைக் காணலாம்.

**குருகு**

ஊராரின் பலிச் சொல்லுக்கு அஞ்சும் தலைவியின் நிலையை புலவர்கள் குருகுடன் இணைத்துள்ளதை,

**"ஓதம் சென்ற உப்புடைச் செறுவில்,**
**கொடுங் கழி மருங்கின், இரை வேட்டு எழுந்த**
**கருங் கால் குருகின் கோள் உய்ந்து போகிய**
**முடங்கு புற இறவின் மோவாய் ஏற்றை**
**................................பொதி தாழை**
**வண்டு படு வான் போது வெரூஉம்." (நற்.211)**

என்ற இப்பாடலில் உப்பங்கழியில் இரையை விரும்பி எழுந்த கரிய காலையுடைய குருகின் பிடிக்குத் தப்பிப் பிழைத்த இறாமீன். தாழையின் வெள்ளைப் பூவைப் பார்த்து குருகு என்று அஞ்சுவது போல ஊராரின் பழிச்சொல்லுக்கு அஞ்சிய தலைவி, தன் அன்னையைப் பார்க்கும் இடமெங்கும் தன்னைக் கண்டிப்பாலோ என்று உள்ளுறைப் பயன்படுத்தப்பட்டுள்ளதன் வழி அறியமுடிகிறது.

**நாரை**

நெற்கதிர்களையுடைய வயல்களில் மேயும் பெரிய கால்களையுடைய நாரைகள் வெண் கை மகளிருக்கு அஞ்சி ஓடும். ஆவை அங்கு பற்றிய கொழுவிய மீன்களை உண்ண மரங்களில் கூட்டமாய் தங்கியிருக்கும் அதனை கையில் வளை அணியாத அச்சிறு மகளீா் வெண்நாரைகளை விரட்டி விளையாடுவா். மீனைத் தின்னும் நாரைகளை ஓட்டுவது அவா்களுக்கு ஒரு விளையாட்டாக மட்டுமே பாா்த்திருக்கின்றனா் என்பதையும் (பதிற்று-29.),

**"வயல்அமா் கழனி வாயிற் பொய்கைக்**
**கயலாா் நாரை உகைத்து வாளை**
**புனலொடு மகளிா் வளமனை ஒய்யும்.." (புறம்.354)**

கழனிக்கு வாயிலாக விளங்கும் நீா் நிலையில் உள்ள கயல் மீன்களைப் பிடித்து உண்ணும் நாரைக்கு அடங்காது துரத்தப்பட்ட வாளை மீனை அங்கு நீரில் விளையாடும் பெண்கள் கைப்பற்றிச் செல்லும் வளமான ஊா் பொலிவற்ற போவது போன்று முன்பு முடிமன்னருக்கு அரியவளாக இருக்கும் பெண் அவ்வூரானது அழகு இழக்கும் போது மற்ற மன்னரால் கைப்பற்றப்படுவாள் என்று பொருள் கொள்ளும் வகையில் இப்பாடலில் இறைச்சி பொருள் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும்,

**"தன் துணைப் பிரிந்து அயாஅம் தனிக் குருகு உசாவுமே" (கலித்.121)**

தலைவனைப் பிரிந்து வாடிய முகத்தை உடைய தலைவிக்கு இரவுக் காலத்தில் தன் சேவலைப் பிரிந்து வருந்தும் தனிமையுடைய குருகு தன் துணையாக உரையாடும் என்றும்,

**"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே?**
**ஒள்ளிழை உயா் மணல் வீழ்ந்தென**
**வெள்ளாங் குருகை வினவுவோளே" (ஐங்.122)**

தலைவி மணல் பரப்பில் விளையாடியதால் அவளது ஒளியுடைய அணி மணலுக்குள் வீழ்ந்தது அதனைத் தேடும் பொழுது பக்கத்தில் மெய்ந்து கொண்டிருந்த பேசும் தன்மையற்ற குருகிடம் அணியைப் பாா்த்தாயா? என்று மடமையுடன் பறவையிடம் தலைவி வினவியதாக தலைவனிடம் பரத்தைக் கூறியதாகவும் தலைவியின் செயல்களை இப்பாடல்கள் விளக்குகின்றன.

**பருந்து**

சுரவழியின் கொடுமையைக் கூற அங்கு வாழும் பருந்தின் காத்திருப்பையும், அதன் பண்பையும் கூறியுள்ளதை,

> **"............கொலை வேல் மறவர்..........**
> **......படு முடைப் பருந்து பார்த்திருக்கும்.." (குறுந்.283)**

மறவர் இனத்தவர் வழிப் போவோரைக் கொன்றதனால் உண்டான புலாலைப் பருந்துகள் எதிர்நோக்கித் தங்கியிருக்கும் இடம் என்று தலைவர் சென்ற வழியின் கொடுமையை எண்ணி தலைவி வருந்தி கூறியதாகவும்,

> **"வளை வாய் பருந்தின் வான் கட் பேடை,**
> **ஆடு தொறு களையும் அவ்வாய்க் கடுந்துடிக்**
> **கொடு வில் எயினர் கோட் புரம் படர,**
> **நெடு விளி பயிற்றும் நிரம்பா நீள் இடை" (அகநா.79)**

தலைவன் பொருள் தேடச் சென்ற சுரவழியில் பெரிய சிறகையும், வளைந்த வாயையுமுடைய ஆண் பருந்தின் வெண்மையான கண்களை உடைய பேடை, தன் துணையை நோக்கி நெடுங்குரல் எழுப்பி அழைத்தும் கொண்டே இருக்கும் என்றும் கூறப்பட்டுள்ள இப்பாடல்கள் மூலமாக அறியமுடிகிறது.

**தலைவியின் புலம்பல்**

தலைவனைப் பிரிந்து புலம்பும் தலைவியின் நிலைப் பற்றிக் கூறக் காதல் பறவையான புறாவை பயன்படுத்தியிருப்பதை அகநானூற்றில்,

> **"ஒண் தொடி மகளிர் வெண் திரிக் கொளாஅலின்**
> **குறு நடைப் புறவின் செங் காற் சேவல்**
> **நெடு நிலை வியல் நகர் வீழ்துணைப் பயிரும்**
> **புலம்பொடு வந்த புன்கண் மாலை......" (அகநா.47)**

இல்லங்களில் மகளிர் விளக்கு வைக்கும் மாலைவேளையில் குறுகிய நடையையும், சிவந்த காலையுமுடைய ஆண் புறா அவ்வீட்டின் மேல் நிலையில் அமர்ந்து கொண்டு தன் பெடையை அழைக்கும். அப்போது தலைவி தன் தலைவன் எங்குள்ளாரோ என்று புலம்புவதாக என்ற இப்பாடலைப் புலவர்கள் அமைந்துள்ளனர்.

**மயில்**

களவில் காதலரைப் புணரும் மகளிர் மயில் போன்ற சாயலை உடையவர்கள். அவர்கள் களவொழுக்கத்தைக் கைவிட்டு கணவன் இல்லத்தில் போய் அடங்கும் செல்வப் பெருக்கையுடைய வையை மகளிர் என்று கூறப்பட்டுள்ளது (பரி-11.). இதே போன்று வளை அணித்த மகளிர் மருத மரத்தில் ஏறி மயிலை ஓட்ட தெளிந்த தம் குரலால் இசைப்பதைக் கேட்ட மயில்கள் அவர்களின் இசைக்கு ஏற்ப ஆடும், அதனால் ஆரவாரம் எழும் என்றும் (பதிற்று.27), மேலும்,

**“வலை உறு மயிலின் வருந்தினை, பெரிது............” (கலித்.128)**

தலைவி தான் கண்ட கனவில் வலையில் அகப்பட்ட மயிலைப் போன்று காவலில் அகப்பட்டுத் தலைவன் பெரிதும் வருந்தினான் என்று தோழியிடம் கூறியதாக அமைந்துள்ள, இப்பாடலின் வழியாக தலைவி அவளது மென்மைத் தன்மையைப் போன்றே தலைவனுக்கு துன்பம் வர இருப்பதாகக் கண்ட கனவில் கூட மென்மையான பறவைக்கு கேடு தோன்றியதாகக் கூறி அதனால் தலைவனுக்கு ஊறு தோன்றும் என்றும் ஒப்புமைப்படுத்தியிருப்பதைக் காணலாம்.

**தலைவன் கூற்றில் பறவைகள்**

இலக்கியங்களில் சிறந்தவனாகப் படைக்கப்படுவன் தலைவன். காதலின் காரணமாக தலைவி தலைவனின் இதயம் போன்றவளாகிவிடுகிறாள். இத்தகைய காலத்தில் தலைவன் நினைவுகள் “கலக்கம், ஆற்றாமை, ஏமாற்றம், ஏக்கம் போன்றவை இவற்றுடனே ஒன்றோடு ஒன்று கலந்தவைப் போன்று காணப்படும்”[24] என்று தெ.கலியாணசுந்தரம் கூறியுள்ளதை உணர்த்தும் வகையில் பொருளின் பொருட்டு பிரிந்து செல்லும் தலைவனுக்கு காட்டில் வாழும் பறவைகளின் செயல்பாடுகள் தலைவியின் நினைவை ஏற்படுத்துவதை,

**“உலறுதலைப் பருந்தின் உளிவாய்ப் பேடை” (ஐங்.321)**

இப்பாடலில் ஆண் பருந்தின் உளி போன்ற அலகை உடைய பேடை ஓமை மரத்தில் அமர்ந்து தனது தனிமைத் துயரத்தில் கூவுவது, காடுகளைக் கடந்து வந்த தலைவனுக்கு காதலியின் நினைவை வரச் செய்கிறது. இப்பேடையின் செயல் மூலம் தலைவன், தலைவியின் காதல் துயரத்தை அறியலாம். இதே போன்று,

**“நம்முடை மதுகையள் ஆகி, அணிநடை**
**அன்னமாண் பெடையின் மென்மெல இயலி,” (அகநா.279)**

என்ற பாடலில் பொருள்வயிற் பிரியும் தலைவன் தன் நெஞ்சிடம் நம்மையே தனது வலிமையாகக் கொண்டு இருக்கும் தலைவியின் நடையை அன்ன பெடை போன்று அழகிய நடை என்று கூறியதாகவும், மேலும்,

**"புனக் கிளி கடியும் பூங் கட் பேதை" (குறுந்.142)**

எனத் தினைப்புனத்தில் கதிரை உண்ணும் பொருட்டு வரும் கிளிகளை ஓட்டிக் கொண்டு இருக்கும் தலைவிக்கு என் நெஞ்சம் அவள் பால் சென்றது அறிந்தாளோ என்று தலைவியை எண்ணி தலைவன் கூறியதாகவும் இப்பாடல் வரிகள் அமைந்துள்ளன.

**ஆண்களும் கிளியோட்டியுள்ளமை**

சங்கப்பாடல்களில் பெரும்பாலான பாடல்கள் மகளிர் கிளியோட்டியதாகக் கூறியிருப்பதால் ஆண்கள் கிளியோட்டும் தொழில் செய்ததில்லையோ என்ற ஐயத்தைப் போக்கும் வகையில்,

**"பைந்தாட் செந்தினைக் கொடுங்குரல் வியன்புனம்**
**செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்." (அகநா.242)**
**"தினைப் புன மருங்கில் படுகிளி ஓப்பியும்" (குறுந்.346)**
**"....இன மீன் ஆர்ந்த வெண் குருகு மிதித்த**
**வறு நீர் நெய்தல் போல......................" (நற்.183)**

என்ற பாடல்களில் கழுத்தில் சிவந்த கோடுகளையுடைய கிளிகள் தினைக் கதிர்களை உண்ண வரும் அக்கிளிகளை ஓட்ட தன்னுடன் தலைவன் இருந்துள்ளான் என்று தலைவி நினைப்பதாகவும், தலைவனும் நம்மோடு வந்து தினைப் புனத்தில் வந்து வீழுகின்ற கிளிகளை ஓட்டியும் இருந்தவன் இரவுக்குறியை நயந்தான் என்று தோழி தலைவியிடம் கூறியதாகவும், மீன் இனத்தைத் தின்ற வெண்மையான குருகு மிதித்த நீரில்லாத நெய்தல் போல தலைவன் வரைவை இடை வைத்து பிரிந்து செல்வதால் அவன் அறியாமை உடையவன் என்று கூறுவதாகவும் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. மேலும்,

**"வெள்ளவரம் பின் ஊழி போகியும்**
**கிள்ளை வாழிய பலவே-ஒள்ளிழை" (ஐங்.281)**

தினைப்புனத்திற்கு கிளிகள் வருவதில்லை என்றால் அங்கு காவலுக்கு அவசியமில்லை என்ற செய்திகளைக் காணுகையில் தினைப்புனத்தில் ஆண்களும் கிளி ஓட்டியுள்ளதை அறியமுடிகிறது. மேலும் தலைவி புனங்காவலை மேற் கொள்ள வழி செய்தமைக்கு நன்றி என்று தலைவன் சிறிய வாழ்வினைக் கொண்ட கிளிகளைத் தலைவன் தனக்கு உதவியதற்காக எண்ணிலடங்கா காலம் வாழ வேண்டுமென வாழ்த்தியுள்ளதைக் காணும் போது அக்காலத்தவா் பறவைகளிடமும் நன்றியுணா்வு கொண்டிருந்ததையும், கிளியின் வாழ்நாள் குறுகிய காலம் கொண்டது என்பதும் அறியப்பட்டது.

**தலைவன் தலைவியை வா்ணித்தல்**

காதலில் தலைவன் தலைவியை வா்ணித்தல் என்பது ஒரு நெறியாகவே இருந்து வருகிறது. இவ்வா்ணனை என்பது காதலை மெருகூட்டுவதாக இருப்பதை,

**"பூ அமன்றன்று, சுனையும் அன்று**
**மெல்ல இயலும், மயிலும் அன்று" (கலித்.55)**
**"அணி மயிற் பெடை என" (கலித்.56)**
**"மா வென்ற மட நோக்கின் மயில் இயல் தளா்பு ஓல்கி" (கலித்.57)**

என்ற பாடல்களில் தலைவியின் கண் மலரின் தன்மையது. அது பிறக்கும் சுனையான இடமும் அன்று சாயல் பொருந்த மெல்ல நடக்கும் மயிலும் அன்று என்றும், அழகிய பெடையை உடைய மயிலைப் போன்றவள் என்றும், மயில் போன்ற சாயலை உடையவள் தலைவி என்றும் தலைவியைத் தலைவன் மயிலோடு ஒப்பிட்டு வருணித்துள்ளதைக் காணலாம். மேலும்,

**"இளமழை சூழ்ந்த மடமயில் போல,**
**சூா்மகள் மாதோ என்னும் - என் நெஞ்சே" (அகநா.198)**

இளமுகில் சூழ்ந்த மடப்பத்தையுடைய மலையிடத்து மயில்போல அஞ்சி அஞ்சி நடந்து வந்து, ஊா் உறங்கும் நள்ளிரவில் நம்மைத் தழுவி மகிழ்ந்து மீண்டு போயினள், அத்தகையாள், நிறைந்த கற்பினால் உயா்ந்த பெருமையையுடைய அழகிய மாமை நிறங்கொண்ட பெண்ணோ அல்லள், தென்திசைக்கண் உள்ள ஆய் என்பானது நல்ல நாட்டில் தெய்வம் வாழும் மலையில், கவிரம் என்னும் பெயரினையுடைய அச்சம் தரும் மக்கமலையில், அழகிய மலா்களையுடைய நீா் நிறைந்த சுனையில் வாழ்கின்ற தெய்வமாகிய சுரமகளே ஆவாள் என்றும்,

**"ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பில்**
**களிமயிற் கலாவத் தன்ன தோளே" (அகநா.152)**

ஏழில் என்னும் நெடிய மலையைச் சார்ந்த பாழி என்னும் பக்க மலையிடத்துள்ள மகிழ்ந்தாடும் மயிலின் தோகையைப் போன்ற வளைந்த சுருண்ட கூந்தல்களை உடையவள் எம் தலைவி என்றும்,

**"மைந்து உற்றாய் வெஞ் சொல் மட மயிற் சாயலை**
**வந்திக்க வார் என மனத்தக்க நோய் இது" (பரிபா.20)**

பரிபாடலில் சினம் கொண்டு பேசிய பரத்தையிடம் நீ கொடிய சொல் பேசி பேதைமை உடையவள் ஆனாய், இந்தப் பாவம் நீங்க மடப்பம் உடைய மயில் போன்ற மென்மையான தலைவியை வந்து வணங்கு என்று தலைவனிடம் தோழி கூறியதாகவும் காணப்படும் கருத்தில் தோழியும் தலைவியை வர்ணித்திருப்பது தெரிந்து கொள்ளப்பட்டது.

**"சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணுமைக்கு**
**எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்**
**வெகுவகு கானம்" (அகநா.297)**

சிற்றூரிலுள்ள வீரர்கள் எழுப்பிய ஏறுகோட் பறையொலியைக் கேட்ட ஆண் பருந்து தன் சிறகினை விரித்துப் பறந்து போதற்கு இடனான அச்சம் தரும் காட்டிற்கு நம்முடன் வருவேன் என்றும் நம் காதலி மகிழ்ந்து கூறினாள். மடப்பம் பொருந்திய அவளுடைய பார்வையினைக் கண்டு வைத்தும் அவளைப் பிரிந்து இக் கானகத்து வந்து விட்டோம் என்று தலைவன் வருந்தி தன் நெஞ்சிற்குக் கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது. மேலும்,

**"நேரேம் ஆயினும் செல்குவம் கொல்லோ**
**கடலின் நாரை இரற்றும்**
**மடலம் பெண்ணை அவனுடை நாட்டே" (ஐங்.114)**

கடலில் உள்ள மீனைக் கவர்ந்து உண்ணாது, நாரை மடல் பொருந்திய பனையில் வந்து தங்கி ஒலிக்கும் அதுபோல தலைவன் வரைதலை நினைக்காமல் தலைவன் தன் மனையிலேயே தங்கியதாக இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**தோழி கூற்றில் பறவைகள்**

இலக்கியங்களில் பெற்றோரை விட சிறுவயது முதலாக தலைவியுடன் அதிகமாக இருப்பதும், தலைவியின் உணர்வுகளைப் புரிந்து கொள்வதும் தோழியே. இவள் கற்பொழுக்கத்தை விட களவொழுக்கத்தில் இன்றியமையாதவளாக காணப்படுகிறாள் என்பதை சரளா ராசகோபாலன் அவர்கள் "தோழி அக இலக்கிய முக்கோண வடிவத்தின், மேல் முனையாக விளங்குகிறாள். அவள் தலைவன், தலைவி என்ற இரு கரைகளை இணைக்கும் பாலமாகச் செயல்படுகிறாள். களவுலகக் கடலில் தலைவியின் நெஞ்ச மரக்கலம் இடையூறு பாறைகளின் இடையில் தடுமாறும் போது வடதுருவ விண்மீனாக விளங்கி வழிகாட்டுகிறாள்"[25] என்று கூறியுள்ளார். மேலும் அவர் கூறியுள்ள முக்கோண வடிவமாக,




இதனைக் கொள்ளலாம். இத்தகைய உயரிய நிலையில் இருக்கும் தோழியின் செய்கைகளாக,

> **"..................................................பைங் குரல்**
> **படுகிளி கடிகம்" (குறுந்.198)**
> **"விரி காஞ்சித் தாது ஆடி இருங்குயில் விளிப்பவும்" (கலித்.34)**
> **"நனி எள்ளும் குயில் நோக்கி இனைபு உகு நெஞ்சத்தால்**
> **துறந்து உள்ளார் அவர்..................................................." (கலித்.35)**

தானிய மணிகள் நிறைந்த பசிய கதிர் குலைகளில் வந்து படியும் கிளிகளை ஓட்ட தலைவி தினைப்புனத்திற்கு சென்றுள்ளதை தோழி தலைவனிடம்

கூறியதாகவும், மலர்ந்த காஞ்சிப் பூவின் தாதில் ஆடிக்கொண்டு கரிய குயில்கள் தம் பெடையை அழைப்பது கண்ட தோழி தலைவனின் வரவைத் தலைவியிடம் கூறி அவளை மகிழ்வித்ததோடு, தலைவியின் மொழிக்குத் தோற்றிருந்த குயில் பகையால் அவளை இகழ்வதாகவும், அக்குயிலைப் பார்த்து பிரிந்து சென்ற தலைவர் இனி உன்னை நினைக்கமாட்டார் என்றும் அவர் மீது வெறுப்புக் கொள்ளாதே என்று தோழி தலைவியைத் தேற்றி ஆறுதல் அளிப்பதையும் இப்பாடல்களில் காணமுடிகிறது. மேலும்,

**"கோகுலமாய்க் கூவுநரும்" - செவ்வேள் (பரிபா.9)**

தேவ சேனையின் தோழியர் வள்ளியின் தோழியர் செயல்களைக் கண்டு அஞ்சி குயில்களாய் மாறிக் கூவினர். இதனால் பல துன்பங்களை அனுபவித்தனர் என்று பரிபாடலிலும்,

**"இறவு ஆர் இனக் குருகு இறை கொள இருக்கும்" (நற்.131)**

சுறா மீனின் கொம்பு போன்ற தாழையின் மடல் மீது இறா மீன் தின்ற நாரை அமர்ந்திருப்பது போல தலைவியின் மனதில் தலைவன் இருப்பதாக தோழி கூறியதாகவும் காணப்படும் குறிப்புகள் மூலம் கடவுளின் முதலாக சாதாரண பெண்கள் வரை தோழி இருந்துள்ளதை இப்பாடல்களால் அறியலாம். மேலும்,

**"உருகெழு மஞ்ஞை ஒலிசீர் ஏய்ப்ப,**
**தகரம் மண்ணிய தண்துறு முச்சி,**
**புகர்இல் குவளைப் போதொடு தெரிஇதழ்**
**வேனில் அதிரல் வேய்ந்தகின்**
**ஏமுறு புணர்ச்சி இன்துயில் மறந்து" (அகநா.393)**

என்று மயிலின் தோகையினைப் போன்ற குவளை மலருடன் காட்டு மல்லிகையினையும் சேர்த்துக் கட்டிச் சூடிய மயிர்ச்சாந்து பூசப்பெற்ற நின் கூந்தலில், புணர்ச்சி இன்பத்துக்குப் பின்னர் அவர் கொண்ட இனிய துயிலினை மறந்து சென்றவிடத்துக் காலம் தாழ்த்து இரார், விரைந்து இன்றே வருகுவர், எனவே, அவர் வரும் வரையிலும் நீ ஆற்றியிருத்தல் கடனாகும் என்று தோழி தலைவியை ஆற்றியிருக்கச் செய்வதாக இப்பாடல் அமைந்துள்ளது. இவ்வாறு படைக்கப்பட்டுள்ள தோழியை "தலைவன் தலைவி நல்வாழ்வில் ஆர்வங் கொண்ட தோழி, உலகியல் அறிவும் சொல்லாற்றலும் மிக்கவள். தலைவனுக்கு அவ்வப்போது

நன்னெறிகளை எடுத்துக்கூறி நன்னெறிப்படுத்துபவள் தோழியே. வரைவுகடாவுதல் துறையில் தோழி கூற்றாக அமைந்துள்ள நெய்தற்கலிப்பாடல் தோழியின் அறம் உரைக்கும் திறத்திற்கு ஒரு சான்று”[26] என்று முனைவர் வே. முத்துலக்குமி குறிப்பிட்டுள்ளார்.

**செவிலி கூற்றில் பறவைகள்**

சங்க அகப்பாடல்களில் தலைவியுடன் நெருங்கிய உறவுடையவர்களாக தாய், தந்தை, செவிலி, தோழி, பாங்கன், பரத்தை ஆகியோர் கூறப்பட்டாலும் பெருமளவு தொடர்புடையோர் மகளிரே. இவர்களுள் செவிலி பொருளிற்காகப் பணி செய்யும் பணிப் பெண் போல் அல்லாது தலைவியின் பிறப்பு முதல் சிறப்பாக போற்றி வளர்க்கும் வளர்ப்புத் தாயாகக் கருதப்படுகிறாள். செவிலியின் எண்ணம் எப்பொழுதும் தலைவியுடையதாக இருப்பதை,

**“முதுவாய்ப் பெண்டின் செது காற் குரம்பை**
**மட மயில் அன்ன என் நடை மெலி பேதை” (அகநா.63)**

முதுமை வாய்ந்த பெண்ணின் சோர்ந்த கால்களையுடைய சிறிய குடிலில் இளைய மயிலைப் போன்ற தளர்ந்த நடையினைக் கொண்ட என் பேதை மகள் குறித்துச் செவிலியின் நெஞ்சம் கவலை கொண்டதாகவும்,

**“மயில் இயல் சேயிழை மகளிர் ஆயமும் அயரா” (அகநா.378)**

மயில் போன்ற சாயலையுடைய பொன்னாற் செய்த செவ்விய அணிகலன்களை அணிந்த தோழியர் கூட்டமும் விளையாட்டை வெறுத்தது, அவளால் வளர்க்கப்பட்ட பூஞ்செடிகளையுடைய தொட்டிகளும் மலர்களை மலர்விக்கவில்லை, சுவரின் கண் முத்துவடம் புனைந்து அழகுறத் திகழ்ந்த கடவுட் பாவைகளும் தமக்குரிய பலியென தேனையும் பெறவில்லை, தலைவியின் பிரிவால் நிகழ்ந்த இந்நிகழ்ச்சிகளைக் கண்டு நோய் வருத்த, வருந்தியிருப்பதாகவும்,

**“தன்ஓ ரன்ன ஆயமும் மயில் இயல்**
**என்ஓ ரன்ன தாயரும்” (அகம் - 385)**

என்று செவிலித் தாய் ஆற்றாமையால் வருந்திக் கூறியதாகவும் மயில் போலும் சாயலையுடைய என் மகள் என உடன் போக்கு சென்ற தலைமகள் குறித்து தலைவி வருந்துவதாகவும் இப்பாடல்கள் அமைந்துள்ளன.

**கண்டோர் கூற்றில் பறவைகள்**

கண்டோர் உடன் போக்கின் போது தலைவன் தலைவியை எதிர்பட்டு தீமையை எடுத்துரைப்பவர்களாகவும், தலைவியைப் பிரிந்து சென்ற தலைவனின் வரவை உரைப்பவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர் என்பதை, "தலைவனோடும், தலைவியோடும் நெருங்கிய தொடர்பில்லா அயலோரே கண்டோர் ஆவர்"[27] என்று ச. திருஞானசம்பந்தம் கூறியுள்ளார். இத்தகைய கண்டோர் கூற்றாக,

**"குறுங்கால் மகன்றில் அன்ன**
**உடன்புணர் கொள்கைக் காதலோரே" (பெரியபு.381)**

நீண்ட சிறகுகளையும் குறுகிய காலையும் உடைய மகன்றில் பறவைகள் துணைபிரிந்து வாழதவை. அவை போல் பிரிதற்கு அரிய இயல்புடைய காதலையுடையவராய் உள்ளனர் என்று சுரநெறியில் சென்ற காதலர்களைக் கண்டோர் கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**ஆறலைக்கள்வர் பாடல்களில் பறவைகள்**

சுரவழியில் செல்வோரை வதைத்து கொலை செய்யும் தொழிலையுடையவர்களாக ஆறலைக் கள்வர்கள் கருதப்படுகின்றனர். இவர்களின் கொலைத் தொழில் பறவைகளுக்கு எவ்வாறு பயன்பட்டுள்ளது என்பதை விளக்குவதாக,

**"வடிநவில் அம்பின் ஏவல் ஆடவர்,**
**ஆள்அழித்து உயர்த்த அஞ்சுவரு பதுக்கை,**
**கூர்நிசிச் செவ்வாய் எருவைச் சேவல்**
**படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ,**
**மல்லல் மொசிவிரல் ஒற்றி. மணிகொண்டு,**
**வல்வாய்ப் பேடைக்குச் சொரியும்" (அகநா.215)**

மறவர்கள் வழிப்போவாரைக் கொன்று பிணங்களைக்கற்கள் கொண்டு மூடிவைப்பர். கண்டார்க்கு அச்சம் தரும் அக்கற்குவியல்களில், கூர்மையான அலகினைக் கொண்ட சிவந்த வாயினையுடைய ஆண் பருந்துகள் ஒன்றாகக் கூடி, இறந்துபட்ட பிணங்களின் பசிய தலைகளைப் பெயர்த்தெடுத்து, அவற்றின்கண் உள்ள கண்மணிகளைத் தம் வலிமையான விரல்களால் தோண்டி எடுத்து, அவற்றைத் தம் கண்மணி அனைய பெண் பருந்துகட்டு உணவாகக் கொண்டுகொடுப்பதாக இப்பாடலில் குறிப்பு காணப்படுகிறது. மேலும்,

**"உலறுமுடை வம்பலர் உயர்மரம் ஏறி,**
**ஏறுவேட்டு எழுந்த இனமதீர் எருவை**
**ஆடுசெவி நோக்கும் அத்தம்" (அகநா.285)**

என்று வழிப்போக்கர், உயர்ந்த மாத்தில் ஏறியிருந்து, தன் கூட்டத்தினின்றும் பிரிந்து வந்து, உணவைப் பாய்ந்தெடுத்தலை விரும்பி, விரைந்தெழுந்த பருந்து வானிலே பறந்து செல்லும் திசையினை நோக்கியிருப்பதாகவும்,

**"எருவை இருஞ்சிறை இரீஇய, விரிஇணர்த்**
**தாதுஉண் தும்பி முயல்இசை கடுப்ப,**
**பரியினது உயிர்க்கும் அம்பினர்" (அகநா291)**

பெரிய சிறகுகளையுடைய பருந்துகள் அஞ்சியோட, விரிந்த பூங்கொத்துகளில் உள்ள தேனை உண்ணும் வண்டுகள் ஒலிக்கின்ற ஓசையைப் போன்று ஒலியெழுப்பிக் கொண்டு பாய்ந்து செல்லும் ஆம்பினையுடையவரும், காண்பார் அஞ்சும் தழைமாலை சூடிய தலையினையுடையவருமாகிய ஆறலை கள்வர்கள் என்றும் இப்பாடல்களில் பறவைகள் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளது.

**பறவைகளின் மூலம் உணர்த்தப்படும் வாழ்க்கை தத்துவம்**

இலையின்றி காணப்படும் மரங்கள் நிறைந்த சுரம் வெம்மையானது. நீரும் மக்களும் இல்லாத பாலை நிலத்தில் பறவைகள் உணவும், தண்ணீரும் இல்லாமல் அலையும். அங்கு நிழலும் நீருமின்றி தவிக்கும் பெண் புறாவிற்கு தன் மென்மையான சிறகுகளை விசிறி காதலியின் வெப்பத்தை ஆண் புறா தணிப்பதாகவும் பெண் புறாக்களுக்கு வெயிலால் உண்டாகும் வருத்தம் தீர்க்கக் தம் சிறகை விரித்து ஆண் புறாக்கள் நிழல் உண்டாக்கும் என்பதையும், **'கற்றறிந்தார் ஏத்தும் கலி'** என்ற சிறப்புடைய கலித்தொகை அந்தக் காட்சியை,

**"துன்புறூஉம் தகையே காடு என்றார், அக் காட்டுள்**
**அன்பு கொள் மடப் பெடை அசைஇய வருத்தத்தை**
**மென் சிறகால் ஆற்றும், புறவு எனவும் உரைத்தனரே" (கலித்.11)**

என்று கூறுகிறது. வலிமையான ஆண் மென்மைத் தன்மையுடைய பெண்ணிற்கு தக்க சமயத்தில் உதவிசெய்ய வேண்டும் என்னும் உயரிய மானுட உண்மையை உறவை நாடும் பறவைகள் மூலமாக பெருங்கடுங்கோ கூறியுள்ளதோடு,

**"நிரை பறைக் குரீஇயினம் காலைப் போகி**
**முடங்கு புறச் செந்நெல் தரீஇயர், ஓராங்கு**
**இரை தேர் கொட்பின ஆகி, பொழுது படக்**
**படர் கொள் மாலைப் படர்தத்தாங்கு**
**வருவர் என்று உணர்ந்த, மடம் கெழு நெஞ்சம்" (அகநா.303)**

என்று மலைக் குருவியினம் காலையில் ஒன்றாகச் சென்று சிவந்த நெற்கதிர்களையுடைய இடத்தை ஆராய்ந்து திரிந்து கதிரவன் மறைந்து துன்பத்தைத் தரும் மாலைப் பொழுதில் நெற்கதிர்களுடன் திரும்பும் அது போல பொருள் தேடச் செல்லும் தலைவனும் திரும்பி வருவான் என்று தலைவி கூறுவதாக இப்பாடல்கள் விளக்கமளிக்கின்றன. மேலும்,

**"வெண் நுதற் கம்புள் அரிக்குரற் பேடை**
**தண் நறும் பழனத்துக் கிளையோடு ஆலும்" (ஐங்.85)**

வெண்மையான தலையையுடைய கம்புள் கோழியின் தனது கனைகுரல் கொண்டு தன் சேவலுடனின்றியும் தனது இனத்தைச் சேர்ந்த பறவைகளுடன் சேர்ந்து குற்றம் இல்லாதது மகிழ்ச்சியுடன் ஆரவாரம் செய்யும் என்றும் கூறப்பட்டுள்ளது.

**"இணர் துதை மா அத்த புணர் குயில் விளித்தொறும்**
**நம் வயின் நினையும் நெஞ்சமொடு......................" (நற்.157)**
**"செங் கண் இருங்குயில் எதிர் குரல் பயிற்றும்**
**இன்ப வேனிலும் வந்தன்று: நம்வயின்,பிரியலம்..." (நற்.224)**

குயில் கூவும் ஒலி கேட்குந்தோறும் பிரிவுத் துன்பம் மிகுந்து தலைவி மிகுந்த துன்பம் அடைவாள் என்பதாகவும், மாவின் பூங்கொத்துள்ள கிளையில் எதிர் எதிரில் அமர்ந்து கொண்டு, கணவனோடு சேர்ந்தவர்கள் பிரியாதீர்கள் பிரிந்தால் சேர்ந்து கொள்ளுங்கள் என்று இளவேனில் காலம் சிவந்த கண்களையுடைய கரிய குயில்கள் குரல் எழுப்பும் என்றும்,

**"அஞ்சினைப் பாதிரி அலர்ந்தெனச்**
**செங்கண் இருங் குயில் அறையும் பொழுதே" (ஐங்.346)**

அழகிய பாதிரி மலர்ந்ததும், சிவந்த கண்களையுடைய கருங்குயில் கூவுவது இளவேனிற்பருவம் வந்தமையால் புணர்ந்த காதலரிடம் பிரியாதிருந்து இன்பம் அடைக என்று உணர்த்துவதாகவும் இப்பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**அரிய காட்சிகளில் அமைத்த உவமை**

எங்கோ எப்பொழுதோ கண்டு அல்லது கேட்டு மனதில் நிறுத்தியக் காட்சிகளை செய்யுளில் உவமைகளாக அமைத்து பாடப்பட்ட செய்யுள்கள் தனிச்சிறப்பு வாய்ந்தது மட்டுமின்றி மிக்க அழகுணர்வை நமக்கு அளிப்பனவாகவும் அமைகின்றன. இதனை "கற்பனை உலகம் நாம் இருந்து காணும் இவ்வுலகத்தோடு எவ்வளவு தொடர்பும் மாறுபாடும் கொண்டிருக்க வேண்டும் என்று நாம் அறுதியிட்டுக் கூற இயலாது. நாம் காணும் இவ்வுலகம் விஞ்ஞானம் சரிதம் என்ற இவ்விரண்டாலும் அளந்து கண்டற்குரியது. ஆனால் கலைஞனது உலகம் இந்த அளவு கோல்களுக்குள் அடங்காத ஒன்று அவனாக வேண்டுமென்று சில பொருட்களைப் படைத்துக் கொள்ளலாம் அவை நம்மால் நம்ப முடியாதவையாக இருக்கலாம்"[28] என்று அ.ச.ஞானசம்பந்தன் கூறியுள்ளது சங்க புலவர்களுக்கு அதிகமாக ஒத்திருக்கிறது என்பதை, கார் காலத்தில் மயில்கள் நடனமாடும் நிகழ்வை நம்மில் பலர் பார்த்திருப்போம். இதனை,

**"கொடுமிடல் நாஞ்சிலான் தார் போல், மராத்து" (பாலைக்கலி)**
**"மணி நிற மலர்ப் பொய்கை, மகிழ்ந்து ஆடும் அன்னம் தன்**
**அணி மிகு சேவலை அகல் அடை மறைத்தென…………" (கலித்.70)**

என்று சங்கப்பாடலில் அரிய காட்சியை மிகச் சிறப்பாக உவமை வழி கூறியுள்ளதைப் போன்று, பல மணிகளைப் போன்ற மலர்கள் நிரம்பிய நீர் நிலையில் ஆண் அன்னத்துடன் விளையாடும் பெண் அன்னம் அழகு மிகுந்த ஆண் அன்னத்தைத் தாமரை இலை ஒன்று மறைத்ததால் கலங்கியது. பின் மதியின் நிழலை நீரில் கண்டு தனது சேவல் என எண்ணும் அப்போது தன்னைச் சேரவரும் ஆணைக் கண்டு மலர்களின் செறிவுக்குள் புகுந்து மறைந்து கொள்ளும் என்று அன்னப் பறவையின் அக வாழ்வை இப்பாடலில் புலவர்கள் படம் பிடித்துக்காட்டியுள்ளனர். மேலும்,

**"ஆய் தூவி அன்னம் தன் அணி நடைப் பெடையோடு**
**மேதகத் திரிதரூஉம் மிகு புனல் நல் ஊர…" (கலி - 69)**

மென்மையான இறகையுடைய அன்னப்பறவை தன் பெட்டையுடன் கூடி, அந்தணன் மணத்தின் தன் மனைவியுடன் தீ வலம் வருவது போல அன்னங்கள் பொய்கையில் தாமரை மலரைச் சூழ வந்தது என்று வர்ணனையும் கூறப்பட்டுள்ளது. இதே போன்று,

**"செந்நாய் ஏற்றை கம்மென ஈர்ப்ப**
**குருதி ஆரும் எருவைச் செஞ் செவி**
**மண்டு அமர் அழுவத்து, எல்லிக் கொண்ட**
**புன் தேர் விளக்கின், தோன்றும்" (அகம்.111)**

ஆண் செந்நாய் பன்றியைக் கொன்று இழுத்துச் செல்லும் போது வழியெங்கும ஒழுகிய குருதியை பருகும் பருந்தின் செவிகள், தொடர்ந்து போர் செய்யும் போர்க்களத்தில் விழுப்புண் பட்டு வீழ்ந்த வீரர்களின் புன்களை ஆராய கையில் கொண்டு செல்லும் விளக்குகளைப் போன்று தோன்றும் என்றும் உவமைகள் கூறப்பட்டுள்ளன.

நாம் இயல்பாக நோக்கும் பறவைகளைச் சங்க புலவர்கள் ஆர்வத்துடன் அறிவியல் அறிவோடும், கற்பனைகளோடும் கண்டுள்ளனர் என்பதை,

**"பினி வீடு பெறுக மன்னவன் தொழிலே**
**பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை" (ஐங்.447)**

கார்காலமாகிய குளிர்ந்த பருவத்தில் மீன்கொத்திப் பறவையின் அலகு வளரும் இயல்புடையது என்று கூறியுள்ளதன் மூலமும்,

**"கல்மிசை மயில் ஆல, கறங்கி ஊர் அலர் தூற்ற" (கலி.27)**

என்று தலைவனைப் பிரிந்த தலைவிக்கு சாயல்(அழகு) கெட்டதைப் பார்த்து மலை மீது மயில்கள் மகிழ்வுடன் ஆடுகின்றன என்று கூறியுள்ள புலவர்களின் கற்பனை வியப்பைத் தருகின்றது. மேலும் அகநானூற்றுப் பாடலில்,

**"பூத்த தாமரைப் புள்இமிழ் பழனத்து**
**வேப்புநனை அன்ன நெடுங்கண், ஈர்ஞெண்டு**
**இரைதேர் வெண்குருகு அஞ்சி, அயலது**
**ஒலித்த பகன்றை இருஞ்சேற்று அள்ளல்...." (அகநா.176)**

தாமரைப் பூக்கள் நிறைந்த வயலில் நாரைகள் ஒலிக்கும் ஓசைக்கு அஞ்சி பழனத்து நண்டு ஓடி மண் வளையில் மறைந்து கொள்ளும் அது போல பரத்தையர் சேரியில் அவர்களது நலம் நுகர்ந்த தலைவன் பழிக்கு அஞ்சி தன் வீட்டிற்கு விரைந்து வந்தான் என்று உள்ளுறை கூறியுள்ளதையும் காணலாம். இதே போன்று,

**"பைம்புதல் நளிசினைக் குருகுஇருந் தன்ன**
**வண்பிணி அவிழ்ந்த வெண்கூதாளத்து**
**அலங்குகுலை அலரி தீண்டித் தாதுஉகப்" (அகம்.178)**

என்று ஆற்றின் அடுத்துள்ள நீர் ஊறும் இடத்திலுள்ள புதரின் கிளை மீது வெண்ணிற நாரைகள் அமர்ந்திருப்பது போன்று வெண்மையான கூதளஞ் செடியின் அசை கொடியின் கொத்தில் உள்ள மலர்கள் இருப்பதை புலவர்கள் உவமையாகவும் குறிப்பிட்டுள்ளனர். மேலும்,

**"இருவி இருந்த குருவி வருந்துறப்**
**பந்து ஆடு மகளிரின் படர்தரும்" (ஐங்.295)**

கானவர் கொள்ளிக்கு அஞ்சித் தன் இருப்பிடத்துக்குச் செல்லும் மயில்கள். தினைப்புனம் கொய்தபின் உள்ள அரிதாளிலே தங்கியிருந்த குருவிகள் தன் சிறகை விரித்து எழுவதும் விழுவதுமாய் இருக்கும் காட்சி பந்தாடும் மகளிரின் காட்சியோடு ஒப்பிட்டு இப்பாடலில் கூறப்பட்டுள்ளன.

**மயிலினைப் பயன்படுத்தி தரப்பட்ட செய்திகள்**

மயிலின் இறகினைப் பயன்படுத்தி மாலைக்கட்டப்பட்டதும்(புறம்.50), முருகப்பெருமான் மயிற்கொடியையும், மயில் ஊர்தி கொண்டிருந்ததையும்(புறம்.56), காட்டில் வாழும் மயில் போன்று விறலியர் தோற்றமளிப்பதாகவும்(புறம்.60,133), மலர்கள் நிறைந்த சோலையில் மயில் தோகை விரித்து ஆடியதாகவும்(புறம்.116), வரகினை ஈன்றணிமை கொண்டதாக இருக்கும் பெண் மயிலோடு ஒப்புமை படுத்தியும்(புறம்.120), மென்மைத் தன்மையுடையதாகக் கருதப்படும் மயில் குளிரால் நடுங்கும் என்று எண்ணி பேகன் என்ற மன்னன் மயில் போர்வையை போர்த்திக் கொள்ளாது என்பது தெரிந்தும் போர்வை கொடுத்த செய்தி(புறம்.141,145) போன்ற புறநானூற்று குறிப்புகளுடன்,

**"சுரும்பு இமிர்பு ஊத, பிடவுத் தளைஅவிழ**
**அகும்பொறி மஞ்சை ஆல" (அகம் -304)**

கோடுகளையுடைய வண்டுகள் ஒலித்து ஊதப் பிடாவினது அரும்புகள் மலர்ந்தன, புள்ளிகளையுடைய மயில்கள் ஆடுதலைச் செய்தனவென்றும்,

**"உள்ளுதொறும் நகுவேன் - தோழி! – வள் உகிர்**
**மாரிக் கொக்கின் கூரல் அன்ன................" (நற் - 100.)**

பெண்கள் காக்கைக்கு இடும் சோறு ஆம்பல் மலர் மலர்வதை பெரிய நகத்தையுடைய மழைக் காலக் கொக்கின் கூம்பு நிலை போல என்றும் கூறியுள்ளனர். இவ்வகையில் "பறவைகளுள் மயில் மிகுதியான இடம் பெறுகிறது.

இதனை இந்த நாட்டு அடையாளப் பறவைக்கு உரிமை பெறுகிறது, என்பதற்கு வேண்டிய தலைமையும் சிறப்பும் அளித்திருக்கிறார்கள் என்று கூறலாம்"[29] என்று ரா.சீனிவாசன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

**குறியிடம் அறிவித்தல் கூற்றில் பறவைகள்**

காதல் வாழ்க்கை மேற்கொண்ட தலைவனும், தலைவியும் குறியிடை வைத்து சந்திப்பர். இதனை நற்றிணை பாடல் ஒன்றில் பகற்குறி, இரவுக்குறி எனக் இருவகைக் குறியிலும் வந்து செல்லும் தலைமகன் இடையீடு காரணமாக வராமல் இருப்பது கண்ட தலைமகள், வரைதல் விருப்பம் மிகுதியாகக் கொண்டவளாய் நாரையை நோக்கி தான் படும் துன்பத்தை தலைவனிடம் உரைக்குமாறு தோழிக்கு கேட்கும் வகையில்,

**"சிறு வெள்ளாங்குருகே……………………**
**துறைபோகு அறுவைத் தூமடி அன்ன**
**நிறம் கிளர் தூவிச் சிறு வெள்ளாங்குருகே**
**எம்மூர் வந்தெம் ஒண்டுறை துழைஇச்**
**சின்னக்கெளிற் றார்கையை அவரூர்ப் பெயர்தி**
**அனையஅன் பினையோ பெருமற வியையோ**
**ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்குங்**
**கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்**
**இழை நெகிழ் பருவரல் செப்பாதோயே…" (நற்.70)**

என்று நீர் துறையில் வந்து கெளிற்று மீன்களை உண்ணும் வெளுத்த வெள்ளாடையின் மாசற்ற மடிபோன்ற வெள்ளை நிறமான சிறகுகளையுடைய சிறு வெள்ளாங்குருகிடம் தலைவி நீ எம் துறையில் உண்டுவிட்டு தலைவனது ஊருக்கு சென்றாலும் எனது பசலைநோய் குறித்து தலைவனிடம் கூறாமல் இருக்கிறாய் ஆகையினால் நன்றியுணர்வு இல்லை என்று கூறுவதன் மூலமாக இப்பாடலில் தலைவி அறியாமை உடையவளாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

**"வளை வாய்ச் சிறு கிளி விளை தினைக் கடிஇயர்" (குறுந்.141)**

என்று வளைந்த அலகையுடைய சிறிய கிளிகள் விளைந்த தினையிடத்து கடியாமல் இருக்கும் பொருட்டு அன்னை எம்மை காவலுக்கு செல்ல சொன்னாள். எனவே இரவில் வராமல் பகலில் வருக என குறியிடம் குறித்து

அறிவுறுத்துவதாகவும் குறுந்தொகைப் பாடலில் கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் நிகழ்வது "தமிழ் நூற்படி நள்ளிரவே காதலர் கூட்டத்திற்கேற்றது. ஏனெனில் நள்ளிரவில் தான் தடங்கல்கள் குறையும். நள்ளிரவில் தலைவன் வரும் காட்சியைப் பல சங்கப் பாடல்கள் படம் பிடித்தாற்போற் காட்டுகின்றன. அதில் (அகம்.122) நடு இரவில் காதலன் வருவான். அவனைப் பார்த்து வல்வாய் நாய்கள் குரைக்கும், கெடுமதி முகில் விட்டுத் திடுமென வெளிவரும், தன்கதிர் ஒளி பாய்ச்சும், கூகை குழறும்,ஆந்தை அலறும், முட்டாள் சேவலொன்று விடிந்ததோ எனக் கூவும், இயற்கையின் இரவுத் திருவிளையாடல்களெல்லாம் காதலனுக்குத் தாங்க முடியாதத் தடங்கல்கள், இடைஞ்சல்கள் எதிர் பாராத **'பல்முட்டுக்கள்'** தோன்றும் என்றும், இதே போன்று,

**"முளி கொடி வலந்த முள்ளரை இலவத்து" (நற்.105)**

இப்பாடலில் 'முள்ளரை இலவம்' என்ற மரம் குறித்து கூறப்பட்டுள்ளது. இ∴து மிக உயரமாகவும் பல கிளைகள் கைகள் போல எதிரெதிராக விரிந்து நெடிதாகவும் வளர்வதால் காற்றடிக்கும் போது ஒரே இரைச்சலாக இருக்கும். காற்று வீசியடிக்கும் போது இதன் பூக்கள் எளிதில் விழுந்து விடுகின்றன என்று தலைவன் தலைவி சந்திப்பின் போது நடக்கும் செயலாக சங்கப் புலவர்கள் கூறியுள்ளனர். இலவின் பூவிதழ்களை மைனா,காக்கை முதலிய பறவைகள் விரும்பி உண்பதாகவும் அதனால் மகரந்தச் சேர்க்கை உண்டாகிக் கருவுறுவதாகவும் செடி நூலார் கூறுவர்"[30].

**இற்செறிப்பு கூற்றில் பறவை**

களவொழுக்கத்தால் தலைவி இல்லத்திலேயே இருக்கும் சூழலுக்கு உள்ளாக்கப்படுவது இற்செறிப்பாகும். இச்சூழலில் தலைவியின் நிலை பறவைகளோடு இணைத்து கூறப்பட்டுள்ளதை,

**"ஆடு அமை ஆக்கம் ஐது பிசைந்தன்ன**
**தோடு அமை தூவித் தடந் தாள் நாரை**
**……கைதை அம் படு சினைப் புலம்பொடு வதியும்." (நற்.178)**

மூங்கிலின் உள் பிசைந்து வைத்தது போல இருக்கும் மெலிதான பொருள் போன்று இறகுகளையும் வளைந்த கால்களையுமுடைய ஆண் நாரையால் நலன் உண்ணப்பட்டதும் துன்ப முற்றதுமான பெண் நாரை கழிக்கரையில் சிறிய

மீன்களையும் உண்ணாமல் தாழையின் கிளையில் வருத்தத்தோடு தங்கி இருக்கும். அது போன்று தலைவியும் எதும் உண்ணாமல் இற்செறிக்கப்பட்டு இருப்பதாகவும்,

**"………அசை வளி தூக்குதொறும், குருகின்**
**வெண் புறம் மொசிய வார்க்கும்……………" (நற்.74)**

கொண்டல் என்னும் கீழ்க்காற்று வீசும் போது புன்னை மொட்டு அவிழ்ந்த விழும் தாதுக்கள் குருகின் வெண்மையான முதுகில் நெருங்கத் தூர்க்கும் என்றும் இற்செறிப்பு கூற்றுகளில் பறவைகள் இடம்பெற்றுள்ளன.

**உடன்போக்கு கூற்றில் பறவை**

களவுக்காலத்தில் தலைவன் தலைவியின் வரைவிற்கு பெற்றோர் உடன்படாத நிலையில் நிகழ்வது உடன்போக்கு என்று கருதப்படுகிறது. இக்கூற்றில் இடம்பெற்ற பறவையாக,

**"தினை கிளி கடிதலின் பகலும் ஒல்லும்**
**இரவு நீ வருதலின், ஊறும் அஞ்சுவல்…**
**யாங்குச் செய்வோம்…………………." (குறுந்.217)**

தினையில் படியும் கிளிகளை ஓட்ட அன்னை எம்மைப் போக விட்டாளாயின் பகற்குறியும், இரவுக்குறியும் நினக்கு பொருந்தாது ஆதலால் தலைவன் உடனழைத்துச் செல்ல விரும்புகிறான் எனத் தலைவியைத் தோழி தலைவனுடன் உடன்போக்கிற்கு உடன்படச் செய்தாக உள்ள இப்பாடலில் கிளி பயன்படுத்தப்பட்டுள்ளது.

**வாயில் மறுத்தலில் பறவைகள்**

கற்பு வாழ்வில் பரத்தையிடம் சென்று மீண்டுவரும் தலைவனுக்கு பரத்தமை ஒழுக்கம் தவறானது என்பதை உணர்த்தவும், மீண்டும் தலைவன் தவறு செய்யாமல் இருப்பதற்காகவும் தலைவி மற்றும் தோழியால் வாயில் மறுக்கப்படுகிறது. இக் கூற்றில் இடம்பெறும் பறவைகளாக,

**"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
**காணிய சென்ற மடநடை நாரை**
**உளர ஒழிந்த தூவி குவுவுமணல்" (ஐங்.153)**

வெள்ளாங் குருகின் குஞ்சினைத் தனது குஞ்சு என்று எண்ணி அதைப் பார்ப்பதற்குச் சென்ற மடப்பம் பொருந்திய நடையையுடைய நாரை தன் அலகினால் கோதியதால் வீழ்ந்த தூவி காற்றில் பறந்து சென்று மணற்குவியலில்

போய் நிற்கும் நெய்தல் நிலத் தலைவன் பரத்தையிடம் சென்ற தலைவனுக்கு வாயிலாக வந்த தோழியிடம் தலைவி வாயில் மறுத்துக் கூறியதாக அமைந்துள்ள இப்பாடலில் பறவைகளின் வர்ணனையோடு கருத்தைத் தெரிவித்திருப்பது சிறப்பிற்குரியதாக உள்ளது. மேலும்,

**"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
**காணிய சென்ற மடநடை நாரை**
**மிதிப்ப நக்க கண்போல்" (ஐங்.150)**

வெள்ளாங் குருகின் குஞ்சினைத் தனது குஞ்சு என்று எண்ணி அதைப் பார்ப்பதற்குச் சென்ற மடப்பம் பொருந்திய நடையையுடைய நாரை தன் காலால் மிதிக்கும் என்று கூறப்பட்டுள்ளது. இங்கு வெள்ளாங்குருகு என்பது பரத்தையாகவும், பிள்ளை என்பது தலைமகன் பரத்தையுடன் கொண்டிருக்கும் ஒழுக்கத்தையும், மடநடை நாரை என்றது வாயில்களாகவும்,

**"இருங் கழி துழைஇய ஈர்ம் புற நாரை**
**இற எறி திவலையின் பனிக்கும் பாக்கத்து." (நற்.127)**

பெரிய உப்பங்கழியில் இரை தேடி உண்ணும் நாரை. இரை தேடும் போது நனைந்த தன் ஈரமான முதுகை இறகால் எறியும் போது அதிலிருந்து வரும் நீர்த்துளிகளால் குளிர் உண்டாகும் என்று தலைவனைப் பிரிந்து இருக்கும் தலைவி பாணனை வாயில் மறுத்ததாக இப்பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

**உரையாசிரியர்கள் கருத்து**

புலவர்கள் நமக்கு விட்டு சென்ற இலக்கியங்களை நாம் புரிந்து கொள்ளும் வகையில் படைப்பது உரையாசிரியர்கள். இவர்கள் இலக்கியத்திற்கு உரையெழுதும் போது புலவர்கள் படைத்த கற்பனையை நம்மிடையே அப்படியே கொடுப்பதில் ஏற்படும் சிக்கலாக சில இடங்களில் பலரிடையே கருத்து வேறுபாடுகள் இருப்பதை,

**"குடுமி நெற்றி, நெடுமாத் தோகை**
**காமர் கலவம் பரப்பி ஏமுறக்**
**கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த**
**வல்இலைக் குருந்தின் வாங்குசினை இருந்து**
**கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்." (அகநா.194)**

குடுமியுடையத் தலையினையும், மடப்பத்தையுமுடைய கரிய மயில் வரகின் பிளவுபட்ட கதிர்களை உண்ட களிப்புடன் தனது அழகிய தோகையை விரித்துக் கொண்டு, உழவர்கள் கூழ் உண்பதற்கு செல்லும் வலிமையான இலைகளையுடைய குருத்த மரத்தின் கிளையில் அமர்ந்து அகவுவது, கிளிகளை ஓட்டும் மகளிரின் ஒலியைப்போன்று இருப்பதாக குறிப்பிட்டிருப்பதில் கரிய மயில் என்ற குறிப்பைக் காணும் போது தூரத்தில் அமர்ந்திருக்கும் பறவைகளின் வண்ணம் மாறி அஃது ஒரு நிழல் உருவம் மட்டும் தென்படும் ஆகையினால் புலவர் கரிய மயில் என்று கூறியிருக்கலாம் அல்லது உரையாசிரியர்களின் கற்பனையாகவும் இருக்கும் என்று எண்ணத் தோன்றுகிறது. மேலும்,

**"இரும் புலி தொலைத்த பெருங் கை யானைக்**
**கவுள் மலிபு இழிதரும் காமர் கடாஅம்**
**இருஞ் சிறைத் தொழுதி ஆர்ப்ப, யாழ் செத்து**
**இருங் கல் விடர் அளை அசுணம் ஓர்க்கும்" (அகநா.88)**
**"அசுணங் கொல்பவன் கைபோல்" (நற்.304)**
**"மறையின் தன் யாழ் கேட்ட மானை அருளாது**
**அறைகொன்று, மற்று அதன் ஆர் உயிர் எஞ்ச**
**பறை அறைந்தாங்கு, ஒருவன் நீத்தான்" (கலித்.143)**

என்ற பாடல்களில் அசுணம் என்பது இசையை அறியும் ஒரு உயிரி. இஃது யாழ் ஒலியைக் கேட்டு மகிழ்வதால், பறையொலியால் துன்பமடைவதாகவும், யாழ் கேட்ட மானை பறை அடித்து கொன்றான் என்றும் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் விலங்கு என்றும் பறவை என்றும் உரையாசிரியர்களிடம் கருத்துவேறுபாடுகள் இருப்பதால் அசுணம் பறவையா, மானா என்று ஐயம் காரணமாக அசுணம் ஆய்விற்குரிய உயிரியாக உள்ளது. பரிபாடலில்,

**"புள் ஏர் புரவி பொலம் படைக் கைம்மாவை" (பரிபா.11)**

என்ற பாடலில் பறவைப் பறப்பதைப் போல விரைவாக ஓடும் குதிரை என்று உவம உருபு பயன் படுத்தப்பட்டுள்ளது. மேலும் இங்கு புள் என்பது சில இடங்களில் மனையுறைக் குருவியைப் புலவர்களில் கூறியிருந்தாலும் இப்பாடலைக் காணும் போது எந்த பறவையைச் சுட்டியிருக்கின்றனர் என்பதை உரையாசிரியர்களும் கூறாத நிலையில் இஃது தெளிவடைய முடியாத நிலையில் உள்ளது. மேலும்,

**"புதல்மிசை நுடங்கும் வேழ வெண் பூ**
**விசும்பு ஆடு குருகின் தோன்றும் ஊரன்" (ஐங்.17)**

என்று வேழத்தின் வெண்மையான பூ வானத்தில் பறக்கும் வெண்குருகைப் போல் தோன்றும். அது போல தலைவன் புறத்தொழுக்கம் உடையவராயினும் தலைவியின் கனவில் அன்புடையவனாக தோன்றுவான் என்னும் உள்ளுறையாகப் பழைய உரையாசிரியர்களின் விளக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

**பறவைகளிடமிருந்து மக்கள் பெற்றிருக்கும் படிப்பினைகள்**

மனிதன் உடற்பிணியை வெல்லுவதற்குத் தன்னைச் சுற்றியுள்ள சுற்றுப்புறத்தையும், அதன்கண் வாழும் உயிரினத்தையும் உற்று நோக்கினான். ஆறறிவுக்கும் குறைவான விலங்குகள் தன் நாவினால் தன் உடலை நக்கியும், புல்லின் மேல் புரண்டும், சேற்றையும், புழுதியையும் தம் மேல் பூசிக் கொண்டும் பிணியை நீக்கிக்கொள்ளும். இதே போல் பறவைகளும் தங்கள் சிறகை அலகுகளால் சீர்ப்படுத்திக் கொள்வதன் மூலம் பிணியிலிருந்தும், சோம்பலிலிருந்தும் தங்களைக் காத்துக் கொள்ளும் இந்நுட்பத்தை அறிந்து கொண்ட மனிதன், பறவைகளிடமும் படிப்பிணைகளைப் பெற்றுக் கொண்டான் என்பதை,

**"மா நனை கொழுதிய மணி நிற இருங் குயில்**
**படு நா விளி யானடுநின்று, அல்கலும்**
**உரைப்ப போல, ஊழ் கொள்பு கூவ**
**இனச் சிதர் உகுத்த இலவத்து ஆங்கண்...." (அகநா.25)**

நீலமணி போன்ற கரிய நிறமுடைய குயில்கள் மாமரத்தின் தளிரைத் தின்றுவிட்டு தம் நாவினால் இனிய குரல் எழுப்பிக் கூவும். இவ்வாறு மாறி மாறிக் கூவுவது பிணக்கம் கொண்ட காதலரின் பிணக்கம் தீர்க்கும் பொருட்டு நடுவுநிலையில் நின்று அவர்களுக்கு அறம் கூறுவது போன்று இருப்பதாக இப்பாடல் விளக்கமளிக்கிறது. நற்றிணையில்,

**"கொடுங் கண் காக்கைக் கூர் வாய்ப் பேடை**
**நடுங்கு சிறைப் பிள்ளை தழீஇக் கிளை பயிர்ந்து**
**..........சூருடைப் பலியொடு கவரிய..........." (நற்.367)**

என்ற பாடலில் காக்கைப் பேடை தன் பிள்ளையைத் தழுவிக் கொண்டு கிளையை (கூட்டத்தை) அழைத்து வெண் சோற்றுத் திரளைக் கவர தனது மனையில் கூடி

இருக்கும் என்று தலைவிக்கு கூறி கணவன் கொண்டு வரும் பொருளை வாங்கி அதை வைத்து தலைவனோடு கூடி இருக்குமாறு கூறுவதாகக் குறிப்பிட்டுள்ளனர். மேலும்,

**"பொதும்பு தோறு அல்கும் பூங் கண் இருங்குயில்**
**கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை இட்டு**
**அகறல் ஓம்புமின், அறிவுடையீர்………………" (நற்.243)**

மாமரச் சோலையில் எங்கும் தங்கியிருக்கும் பூப் போன்ற கண்களையுடைய குயில்கள் அறிவுடையோரைக் கண்டு சூதாடு கருவி போன்று வாழ்க்கை நிலையில்லாதது. ஆதலால் காதலியரை விட்டுப் பிரியும் தலைவனை காதலியரை விட்டு பிரியாதீர் என்று கூறுவது போல இப்பாடல் அமைந்துள்ளது.

இவ்வாறு புலவர்கள் கடற்கரை அருகிலும் சிறிய நீர்நிலைகளிலும் வரிசையாக அமர்ந்திருக்கும் கொக்கின் கூட்டத்தைப் பார்த்து நாட்டைக் காக்கும் காவலர்களின் காலாட்படையைப் போன்று நின்றதாகவும், காவிநிறக் கொக்கு ஒன்று தன் அலகைத் தாழ்த்தி கரையிடத்து ஒற்றைக் காலில் நிற்பதை, இறைவனிடத்தில் உள்ளத்தை ஒன்றச் செய்து மறையை முணுமுணுத்து கொண்டு துறவிக்கு உவமையாக்குவதும், ஆண் பறவைகள் தன் பெடையிடம் கடமையுணர்ச்சியோடும், கட்டுப்பாட்டுடனும் வாழும் முறை போன்றவற்றை மிக நுணுக்கமாகவும், பொருள் பொதிந்த தத்துவங்களாகவும் மக்கள் அறிந்து வாழ வேண்டிய அரிய நெறிமுறைகளாகும். இதனை "ஆறறிவு படைத்த மக்களும் இவை இயற்கையன்னையளிக்கும் அரிய அறிவுரைகளாம். வீரர்களெல்லாம் விதிமுறை தவறாது, ஒழுங்குநிலை குலையாது உயர்வுடன் வெல்க! துறவிகளாவர் தூய்மை குலையாது, தனிமையிலிருந்து தவமியற்றி அவன் தாளினைச் சேர்க்க! இல்லறத்தார்-காதலிருவர் கருத்தொருமித்துக் கடமையுணர்ச்சியுடன் ஆதரவாய் வாழ்க! என்ற இப்பயன்மிகு படிப்பினைகளை – அரும் பெரும் கருத்துக்களை, நுண்மாண் நுழை புலம் கொண்ட புலவர் பெருமக்கள், நமக்கு இப்பறவைகள் வாயிலாய் இனிதுணர்த்துகின்றனர்"[31] என்று வித்துவான் தி.முத்து கண்ணப்பன் அவர்கள் தனது சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம் என்ற நூலில் கூறியுள்ளார்.

**பறவைகளின் செயல்பாடுகளும் மக்களின் அணுகுமுறைகளும்**

பண்டைய காலங்களில் வாழ்ந்த மக்கள் உயிரினங்களைப் போற்றிப் பாதுகாத்துள்ளமையை,

**“கடுநவைப் படீஇயர் மாதோ களிமயில்**
**குஞ்சரக் குரல குருகோடு ஆலும்....” (அகம்.145)**

என்ற பாடலில் ஐம்புல இன்பங்களும், நெல்வளம் நிறைந்துள்ளதுமாகிய மாளிகையில் ஆடிக்களிக்கும் மயில்கள் யானை போன்று குரல் எழுப்பும் யானையங் குருகு என்னும் ஒருவகைப் பறவைகளோடு கூடி ஒலிக்கும் என்று கூறியுள்ளனர். இதன் மூலம் மாளிகைகளில் மயில், யானை, குருகு போன்ற பறவைகளை வளர்த்துள்ளனர் என்பதையும், பறவைகளும் அச்சமின்றி மனிதர்கள் வாழும் மாளிகைகளுக்குள் சுதந்திரமாக இருந்துள்ளமையை வைத்து அறியலாம். இதே போன்று ஐங்குறுநூற்றில்,

**“பேரமர் மழைக்கண் கொடிச்சி கடியவும்**
**சோலைச் சிறுகிளி உன்னு நாட” (ஐங்.282)**

என்ற பாடலில் மலைச்சாரலில் அமைந்த காட்டில் விதைக்கப்பட்ட பெரிய கதிர்களையுடைய சிறு தினையில் அமர்ந்திருக்கும் கிளிகளை, குளிர்ந்த கண்களையுடைய கொடிச்சியாகிய குறமகள் கடியவும் அஃது குறித்த கவலையின்றி இடைவிடாமல் அக்கிளிகள் மீண்டும் தினைகளைக் கவரவே என்றும், புன்புலத்தை உழுது கானவர் தினை விதைத்துள்ளமையும் (ஐங்.283), அறுவடை செய்தபின் சிவந்த அலகினை உடைய கிளிகளின் நிலை வருந்ததக்கது என்று எண்ணுவதும் (ஐங்.284), மூங்கில் கொண்டு செய்ய பட்ட தட்டையாகிய கிளியோட்டும் கருவி குறித்தும் (ஐங்.285), சிறு தானியமாகிய தினையை அறுவடை செய்த பின் ஊடுபயிராக வளக்கப்பட்ட அவரையை நாடி கிளிகள் வரும் எனவும்(ஐங்.286), குறிய கால்களையுடைய மான்களைக் கண்டு தினையில் படியும் கிளிகள் அஞ்சி விலகும் என்றும் (ஐங்.287), கிளிகளுக்கு எந்த உதவியும் தான் செய்யவில்லை என்று தலைவன் கூறுவதாகவும்(ஐங்.288), தலைவி கிளியோட்ட எழுப்பும் ஒலியை தன் இனத்தின் ஒலி என்று கருதி கிளிகள் தினைப்புனத்திற்கு வருவதாகவும்(ஐங்.289),கிளியைத் தன் இல்லத்தில் அன்போடு வளர்க்கும் தலைவி, அதே இனம் தன் தினைப்புனத்தை அழிக்கும் போது விரட்டுவதாவும்(ஐங்.290) போன்ற பாடல்களில் கிளிகளின் செயல்களையும் அதற்கு மனிதர்களின் எதிர்வினை எவ்வாறு இருந்துள்ளது என்றும் அறிந்து கொள்ளப்பட்டது.

பெண்கள் மென்மை தன்மை கொண்டவா்கள் என்று கூறப்படுவதற்கான காரணம் அவா்கள் செயல்களில் இருந்தது என்பதை,

**"துணை புணா் அன்னத்தின் தூவி மெல் அணை அசைஇ**
**ஊடும் மென் சிறு கிளி உணா்ப்பவள் முகம் போல" (கலி.72)**

என்ற பாடலில் துணையுடன் கூடிய அன்னப்பறவையின் தூவியால் ஆன மெல்லிய அணையில் அமா்ந்து வெள்ளிக் கிண்ணத்தில் பாலை வாா்த்து கிளியை உண்பித்த தலைவியிடம் கிளி உண்ணாது போக அ·து உண்ண வேண்டிய சொற்களைச் சொல்லி உண்ணச் செய்து முத்தம் கொடுப்பாள் என்று தற்காலிக இயல்பு வாழ்க்கையை கூறியிருந்தாலும் அதில் பறவைகளின் இயல்பை மனிதா்களின் பண்பிற்கு ஏத்தி கூறியுள்ளதைக் காணலாம். மேலும்,

**"புறவுக் கருவன்ன புன்புல வரகின்" (புறம்.34)**
**கூருகிா்ப் பருந்தின் ஏறுகுறித் தொரீஇத்**
**தன்னகம் புக்க குறுநடைப் புறவின்**
**தபுதி யஞ்சிச் சீரை புக்க**
**வரையா ஈகை உரவோன்.." (புறம்.43)**

வரகின் அரிசி புறாவின் முட்டையைப் போன்று இருந்ததாகவும், வளைந்த சிறகையும், கூா்மையான நகத்தையும் உடைய பருந்தின் தாக்குதலில் இருந்து தப்பி தன்னை நாடிய குறுநடை கொண்ட புறாவின் அழிவிற்கு அஞ்சிய சிபி தனது அழிவிற்கு அஞ்சாது துலாத்தட்டில் புகுந்தான் என்ற செய்தியை (புறம்.39,46) போன்ற பாடல்களிலும் இருக்கும் குறிப்புகள் மூலம் பறவைகளின் உயிா் போற்றிப் பாதுகாத்துள்ளமையைக் காணும் மகிழ்ச்சியை ஏற்படுத்தக் கூடிய வகையில் தோன்றினாலும் "மனிதருக்குச் சராசரி ரத்த அழுத்த அளவு 120 மி.மீ ஆகும். எலிக்கு அது 100 மி.மீ. கோழிக்கு 180 மி.மீ புறாவுக்கு 145 மி.மீ. பறவைகளின் இரத்தத்தில் உள்ள சா்க்கரைச் சத்து, பாலூட்டிகளின் குருதியில் இருப்பதை விட இருமடங்காகும்"[32] என்ற பறவை ஆராய்ச்சியாளரின் புறாவை பற்றிய இச்செய்தி வியப்பிற்குரியதாக உள்ளது.

**பறவைத் தூது விடுத்தல்**

பழங்காலத்தில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு செய்தியைக் கொண்டு செல்வதை தூது என்று கூறுவா். இத்தூது முறை அரசா்கள் முதலாக சாதாரண மக்களிடம் இருந்திருப்பதை,

**“அன்னச் சேவல் அன்னச் சேவல்**
**ஆடுகொள் வென்றி அடுபோர் அண்ணல்**
**அன்புறு நன்கலம் நல்குவன் நினக்கே” (புறம்.67)**

என்ற பாடலில் குமரியில் அயிரை மீனை மேய்ந்து, வடக்கில் உள்ள இமயமலைக்குச் செல்வாயனால் உறையூரில் உள்ள கிள்ளியிடம் யான் பிசிர் என்ற ஊரில் உள்ள ஆந்தையின் அடியவன் என்று கூறுமாறு பிசிராந்தையார் அன்னத்தை தூது விடுத்ததோடு தூது சென்றால் அதன் பயனாக பெண் அன்னம் அணிய நல்ல அணிகலன்களையும் அளிப்பான் என்று மன்னர்களின் கொடைத்திறம் குறித்தும் கூறி அன்னப்பறவையை கிள்ளிவளவனிடம் தூது விடுத்து இருப்பதைக் காணமுடிகிறது.

**வேட்டைத் தொழில்**

இந்தியாவில் பறவைகளை வேட்டையாடுபவர்கள் வேடர் என்னும் சாதியினராகவே உருவாகியிருக்கிறார்கள். பறவைகளை வேட்டையாடி அழிப்பது அவர்களுடைய குல தருமமாகக் கொள்ளப்பட்டுள்ளது. கூண்டுப் பறவையிடம் மட்டும் அக்கறையும் அன்பும் செலுத்தும் மனிதன் வெளி உலகப் பறவைகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. பறவைகளை மட்டுமின்றி மீனையும் வேட்டையாடியுள்ளதை,

**“.......................................பரதவர்**
**நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்**
**பறிகொள் கொள்ளையர், மறுக உக்க**
**மீன்ஆர் குருகின் கானல்அம் பெருந்துறை....” (அகநா.300)**

இப்பாடல் வரிகளில் பரதவர் மீன் வேட்டையில் பிடித்து வந்த மீன்களை மணற்பரப்பில் காயவைப்பர். அவர்கள் காய வைத்துள்ள மீன்களைத் தின்பதற்கு கொக்கு போன்ற பறவை இனம் அம் மணற்பரப்பிற்கு வரும் என்று கூறுப்பட்டுள்ளது.

இவ்வாறு வேட்டைத் தொழில் செய்பவர்களுக்கு விதிமுறைகள் இருந்துள்ளதை “பழங்குடிகளும், பண்டை சமூகங்களும் வேட்டையாடுவதற்கு விதிகளை வகுத்திருந்தனர். வேட்டையாடுவது தப்பில்லை. உணவுத் தேவைக்காக வேட்டையாடுவது இயல்பான நடவடிக்கைதான். அப்படி வேட்டையாடும் போது, மனிதனும் ஒரு இரைகொல்லி விலங்காக மாறிவிடுகிறான். தேவைக்கு அதிகமாக வேட்டையாடுவதில்லை. பல பழங்குடி சமூகங்களில் வேட்டையாடிய பிறகு கிடைத்த இரையை இன்றும் பகிர்ந்து உண்கிறார்கள். ஆளுக்கு ஒரு விலங்கை

வேட்டையாடுவதில்லை, வேட்டையின் போது கருவுற்றிருக்கும் விலங்கை கொன்றதில்லை. அடுத்து வரும் சந்ததியை சுமந்துள்ளது என்பதாலும், புதிய விலங்கு பிறந்தால் தான் தனக்கு மீண்டும் வேட்டையாட விலங்கு கிடைக்கும் என்ற எளிமையான புரிதலும் இதற்குக் காரணம்”[33] என்பது ஆதி வள்ளியப்பனின் கருத்தாகும்.

**பறவைகளை வேட்டையாடுதல்**

“ஆதிகாலத்தில் மனிதன் விலங்கோடு விலங்காக வாழ்ந்த காலத்தே விலங்கைத் தாக்கி வீழ்த்தி வாழ முற்பட்ட நிலையில் வேட்டைத் தொழில் தோன்றி இருத்தல் வேண்டும். அன்று தொடங்கி இத்தொழில் காலந்தோறும் வளர்ந்து வேட்டைக் கலையாகப் போற்றுமளவிற்குச் சிறந்து விளங்குகின்றது. இக்காலத்தில் காட்டிற்கு வேட்டைக்குச் செல்லுதல் ஒரு கலையாகப் போற்றப்படுகிறது. இக்கலை வீரத்தின் விளைவு என்று கூறலாம். சங்க காலத்தில் வேட்டைத் தொழில் சிறப்பாகப் போற்றி வளர்க்கப் பெற்றுள்ளது. வேட்டைக்குச் செல்வோர் அதற்குத் தேவையான கருவிகளுடன் செல்லுதல், காட்டில் அலைதல் போன்றவற்றை நுட்பத்துடன் செயல்படுத்தியமை சங்கப்பாக்களால் வெளிப்படுகிறது”[34] என்பார் சு.அரங்கநாதன் அவர்கள். மேலும் வேட்டுவர்கள் இருந்துள்ளதை,

> **“வரிப் புற இதலின் மணிக் கட் பேடை**
> **நுண் பொறி அணிந்த எருத்தின், கூர் முட்**
> **சேங் கால், சேவல் பயிரும் ஆங்கண்” (அகநா.387)**

என்ற பாடலில் புறத்தே வரிகளை உடைய பெண் காடை வேட்டுவரின் கூப்பாட்டிற்கு அஞ்சி நுட்பமான புள்ளிகளை உடைய கழுத்தையும் கூர்மையான முள் போன்ற வரியைக் கொண்ட சிவந்த காலையும் உடைய தனது சேவலை அழைக்கும் என்ற குறிப்பு உள்ளதால் அறியலாம். குறுந்தொகைப் பாடல் ஒன்றில் மயிலைப் பிடிக்க வலையைப் பயன்படுத்தியுள்ளதை,

> **“நன் மயில் வலைப்பட்டாங்கு” (குறுந்.244)**

என்று கூறப்பட்டுள்ளதன் மூலமாக அறியமுடிகிறது. மயிலைத் தவிர்த்து வேறு பறவைகளையும் வேட்டையாடியுள்ளதை,

**"மான் அதட் பெய்த உணங்கு தினை வல்சி**
**கானக் கோழியொடு இதல் கவர்ந்து உண்டென**
**ஆர நெடுப்பின் ஆரல் நாறத்…………………." (புறம்.320)**

என்ற பாடலில் மான் தோலில் பரப்பி வைக்கப்பட்ட தினையை காட்டுக்கோழியும் , இதல் என்ற பறவையும் உண்ணவரும். அங்கு வேடர்கள் இட்டுள்ள கண்ணியில் அப்பறவைகள் அகப்பட்டுக் கொள்ள அதனை வேடர்கள் எடுத்துச்சென்று துண்டாக நறுக்கி ஆரல் மீனோடு அதனை விருந்தினர்க்கு கொடுப்பர். இ்.து வேடர்களின் இல்லங்களில் நிகழ்வது என்று கூறியிருப்பதன் மூலம் சங்க காலத்தில் வேட்டைச் சமூகத்தினர் பறவைகளையும் வேட்டையாடி உணவிற்கு பயன்படுத்தியுள்ளதைக் காணமுடிகிறது. மேலும்,

**"யானை வேட்டுவன் யானையும் பெறுமே**
**குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே" (புறம்.214)**

யானையைக் கூட எளிதாக வேட்டையாடக்கூடிய வேட்டுவன். குறும்பூழை வேட்டையாடச் சென்று அவை கிடைக்காமல் வெறுங்கையோடு திரும்புவன் என்ற செய்தியை உண்மையாக்க பெரியசாமி அவர்களும் "வேட்டையாடப்படுகின்ற கவுதாரி, காடை போன்ற பறவைகளின் நிறம் அவை வாழ்கின்ற வயல் மண்ணின் நிறம் போலப் பழுப்பாகவும் அங்காங்கே கரும்புள்ளிகள் உடையதாகவும் இருப்பதால், பக்கத்தில் போகும் போது கூட அவற்றை எளிதில் கண்டு கொள்ள முடியாது"[35] என்று கூறியுள்ளதைக் காணும் போது இப்பறவைகளை வேட்டையாடுதல் என்பது கடினமானதாகவே இருந்திருக்கும் என்பதை உறுதிசெய்யலாம்.

இயல்பாக புறாக்கள் பறக்கும் போது தன் சிறகுகளை 1 நிமிடத்திற்கு 8 முதல் 10 முறை அசைக்கிறது. ஆனால் தேவையான பொழுது ஒரு மணி நேரத்திற்கு புறாவின் வேகம் 1312YPM அல்லது 25:35 மைல்கள் வரை இருக்கும் என்று கூறப்படுகிறது. மேலும்,

**"கொலை வல் வேட்டுவன் வலை பரிந்து போகிய**
**கானப் புறவின் சேவல் வாய் நூல்**
**சிலம்பி அம் சினை வெரூ உம்.......................... " (நற்.189)**

என்று விவேகத்தோடு செயல்பட்டு வேட்டுவனின் வலையை அறுத்துப் பறந்து செல்லும் ஆண் புறா சிலந்தியின் வாய் நூல் பின்னலைக் கடந்து செல்ல அஞ்சும்

இவ்வாறு அச்சம் கொண்டு பறந்து செல்லும் தருணங்களில் பறக்கும் வேகமும், சிறகு அசைக்கும் எண்ணிக்கையும் அதிகரிக்கும் எனலாம்.

**உணவிற்காக வளர்க்கப்பட்ட பறவைகள்**

புறாவையும் மனிதன் நெடுங்காலமாக வளர்த்து வருகிறான். மனிதனோடு முதலில் பழகியது புறாவா, கோழியா என்று நிச்சயமாகச் சொல்ல முடியாதிருக்கிறது. பழங்காலத்து மன்னர்கள் புறாவைச் செய்தி கொண்டு செல்வதற்குப் பழக்கிப் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். இறைச்சிக்காகவும் புறாவை நெடுங்காலமாக வளர்த்து வந்திருக்கிறார்கள். இதனை,

**"படலை முன்றிற் சிறுதினை உணங்கல்**
**புறவும் இதலும் அறவும் உண்கெனப்" (புறம்.319)**

இப்பாடலில் கட்டப்பட்ட வீட்டின் முற்றத்தில் சிறிய உலர்ந்த தினைகளைப் புறாக்களையும், இதல் பறவைகளையும் முழுவதையும் உண்ண விட்டு அவற்றைத் தெளித்து பிடித்து சமைத்து வைத்து கதிரவன் மறைந்து இரவும் வந்தாயிற்று, ஆதலினால் போருக்கு சென்றிருக்கும் தன் தலைவனுக்கு முயலின் சுட்ட கறியை அளிப்பேன் என்று போர் வீரன் ஒருவனின் மனைவி பாணனிடம் கூறியிருப்பதைக் காணும் போது பறவைகளின் இறைச்சி உணவாகப் பயன்படுத்தியிருப்பதனை அறியலாம்.

**பறவைகளால் மனிதனுக்கு ஏற்படும் நன்மைகள்**

உயிரினங்களால் ஏற்படும் மகரந்தச் சேர்க்கையை **'Zoophily'** என்பர். இதனை பி.எல்.சாமி அவர்கள் குயில் மூக்கில் மகரந்தம் ஒட்டிக்கொள்வது இயல்பு அதனால் மகரந்தச் சேர்க்கை பிறிதொரு பூவை குயில் நாடும் போது ஏற்படுவது இயற்கை என்பார். மகரந்தச் சேர்க்கை பற்றிய குறிப்பு ஒன்றை சங்க இலக்கியத்தில் அகநானூற்றுப் பாடலில்,

**"பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்" (அகநா.229)**

என்று குயில் முருங்க மலரினைத் துருவி தாது எடுத்துண்பதாக கூறிப்பட்டுள்ளது. இதனை மெய்ப்பிக்கும் வகையில் தத்தா என்ற செடி நூலறிஞர் "It is now known that Erythirina indica (முருக்கம்) is pollinated by Birds"[36] பறவைகளால் மகரந்தச் சேர்க்கை அடைவதற்கு எடுத்துக்காட்டாக முருங்க மரம் ஒன்றை மட்டுமே குறிக்கின்றார். அவ்வாறு குயில் மட்டும் இம்மகரந்தச் சேர்க்கையைச் செய்கிறதா அல்லது பிற பறவைகளாலும் மகரந்தச் சேர்கை நடைபெறுகிறதா? என்பது ஆராய வேண்டிய செய்தி என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## தொகுப்புரை

- இலக்கியத்தில் பறவைகள் பற்றி கூறப்பட்டிருக்கும் எந்தவிதமான செய்திகளும் நேரடியானதாக இல்லாமல் உவமையாகவும், புணைவுகளுமாகவே இடம்பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.

- தலைமக்கள் மட்டுமின்றி தோழி, செவிலி, நற்றாய், கண்டோர் போன்றோர் தங்களது இன்பதுன்பங்களுக்கு ஆறுதல் தேடிக் கொள்ளும் பொருட்டு சில பறவை மற்றும் விலங்குகளை விளிக்குரிய அஃறிணை உயிரியாகக் கொண்டு அவற்றை விளிப்பதைக் காணமுடிகிறது.

- வாழ்வியல் ஆதாரங்களுக்காக சுற்றித் திரிந்த மனிதன் நிலையாக வாழ முற்பட்டு நிலங்களின் இயற்கைச் சூழலுக்கு ஏற்ப திணைப் பாகுபாட்டினைச் செய்துள்ளதை அறியலாம்.

- காடு, மலை, வயல், கடற்கரை என்ற நானிலங்களை முதலில் கூறிப் பாலை நிலமானது முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் வறண்ட பின் உருவாகும் பகுதி என்று திணைக்கோட்பாடு கொடுத்துள்ளமை அறியலாகிறது.

- முல்லைத் திணைக்குரிய பறவைகளாக வானம்பாடி, கானங்கோழி, மயில், சிவல், புறவு, கான வாரணம் போன்ற பறவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

- முல்லை நிலப்பறவைகள் தலைவியைத் தலைவனோடு கூடியிருக்குமாறு கூறுவதாகவும், தலைவியின் ஆற்றாமையைக் கூறுவதாகவும், குயில் ஓசை தலைவிக்கு வருத்தமளிப்பதாகவும் கூற்றுக்கள் இடம்பெறுகின்றன.

- ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்னும் கருத்தை பறவையினம் கடைபிடித்து இருப்பதைப் போன்று மனித இனமும் ஒழுக்கத்தைக் காக்க தவறக்கூடாது என்ற உரையாசிரியர்களின் கருத்தைக் காணமுடிகிறது.

- மலையும் மலை சார்ந்ததாகக் கருதப்படும் குறிஞ்சித் திணைக்குரிய பறவைகளாக கிளி, மஞ்ஞை ஆகிய இரண்டும் குறிப்பிடப்பட்டிருப்பினும், அன்னம், குருவிகள், கூகை, கொக்கு, கோழி, சிச்சிலி முதலான பறவைகளும் குறிஞ்சி நிலத்தில் காணப்படுவதாகக் குறிப்புகள் உள்ளன.

- நாகரீகத்தின் பிறப்பிடமாகக் கூறப்படும் மருத நிலத்திற்குரிய பறவைகளாக அன்னம், ஆண்டலை, கம்புள், குயில், குறும்பூழ், கூகை, சிரல், சேவல், நாரை, நீர்க்கோழி, வெள்ளாங்குருகு போன்ற பறவைகள் கூறப்பட்டிருப்பது தெரிந்து கொள்ளப்பட்டது.
- திருமாவுண்ணியின் துயரை வெளிப்படுத்தவும், போர் வெற்றியின் ஆரவாரத்தைக் கூறவும், கொக்கு மீன் பிடிப்பதையும், மலர் மலர்வதையும் கூறப் புலவர்கள் பறவைகளையும், பிற உயிரினங்களையும் கொண்டு மருத நில நிகழ்ச்சிகளைக் காட்சிப்படுத்தியிருப்பதைக் காணமுடிகிறது.
- இரங்கலும் இரங்கல் நிமித்தத்தையும் ஒழுக்கமாகக் கொண்டிருக்கும் நெய்தல் நிலத்தின் பறவைகளாக பெருங்கடல் புள், அன்னம், நாரை, வெள்ளாங்குருகு, சிறுவெண்காக்கை, முதுகுருகு, இனப்புள், மகன்றில், கொக்கு, குரீஇ, குரால், காக்கை, கூகை, கடல் சிறு காக்கை, முதுபுள், பருந்து போன்ற பறவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.
- நெய்தல் நிலக்காட்சிகளாக தலைவியின் காம வேட்கை, சிறுவர்கள் வலையிட்டு பறவைகளைப் பிடிக்கும் முறை, பறையில் குருவியின் உருவம் எழுதும் முறை போன்ற பல அழகிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.
- வறட்சியுற்ற பகுதியாக விளங்கும் பாலை நிலப்பறவைகளாக கழுகு, பருந்து, புறா, கூகை, கவுதாரி, நாகணவாய்புள் முதலியவை கூறப்பட்டுள்ளன.
- கொடிய தொழில் செய்யும் மறவர்கள் குறித்தும், குருகினை வேட்டுவன் காப்பாற்றியதற்கான குறிப்பு, தலைவியின் வருத்தம், சிறுவர்கள் வட்டு ஆடும் முறை போன்ற நிகழ்ச்சிகளைக் கூற பறவைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.
- மனிதனது வாழ்வில் நடைபெறும் உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்த மொழியாகவும், கருவியாகவும் இலக்கியங்களில் உவமைகள் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியலாம்.
- மகளிர் கூற்றுகளில் பறவைகள் அதிகமாகப் பயன்படுத்தியிருப்பதைக் காணமுடிகிறது. வர்ணணைக்காகப் பயன்படுத்தியிருக்கும் பறவைகளும் மென்மை தன்மை உடையனவாகவே படைக்கப்பட்டுள்ளன.

- பெண்கள் தினைப்புனத்திற்கு சென்று தினையைக் கொய்யவரும் பறவைகளை ஓட்டியுள்ளதைப் போல ஆண்களும் கிளியோட்டியுள்ளமைக்கு சான்றுகள் காணப்படுகின்றன.

- தலைவன் தலைவியை வர்ணித்தல், தலைமகளைப் பிரிந்ததன் வருத்தத்தைத் தெரிவித்தல், நெஞ்சோடு கிளத்தல் போன்ற செய்திகளைக் கூறும் கூற்றுக்களில் பறவைகள் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

- தலைமக்கள் கூற்றுகள் விடுத்து தோழி, செவிலி, நற்றாய், கண்டோர், ஆறலை கள்வர்கள் போன்றோரின் கூற்றுகளிலும் பறவைகள் இடம் பெற்றுள்ள செய்திகளைக் காணலாம்.

- மென்மை தன்மையுடைய பெண்களுக்கு ஆண்கள் தக்க சமயத்தில் உதவி செய்ய வேண்டும் என்னும் உயரிய மானுட உண்மையை உறவை நாடும் பறவையான புறா மூலம் உணர்த்தப்பட்டுள்ளது.

- குறியிடம் அறிவித்தல், இற்செறிப்பு, உடன்போக்கு, வாயில் மறுத்தல் முதலான கூற்றுகளிலும் பறவைகளைக் கொண்டு உவமைகள் படைக்கப்பட்டுள்ளமை அறியப்பட்டது.

- தலைவனுக்காகப் பறவை இறைச்சி சமைக்கப்பட்டுள்ளதைக் காணும் போது பறவைகளை வேட்டையாடியுள்ளமை தெளிவாகிறது. மேலும் தலைவனின் பிரிவுத்துயரைத் தலைவியால் ஏற்றுக் கொள்ளமுடியாமையும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

**குறிப்புகள்**

1. மு.வரதராசன்., இலக்கிய மரபு., பக்க - 11:12
2. க.ப. அறவாணன்., அற்றை நாட் காதலும் வீரமும்., பக் – 97
3. பெ. மாதையன்., அகத்திணை – பக் -82
4. தமிழண்ணல்., சங்க மரபு., பக் -239
5. மேலது
6. நா.செல்வராசு.,பண்டைத் தமிழர் திருமண வாழ்க்கை.,பக்-96
7. மு.கருப்பையா, சங்க இலக்கியத்தில் திணை மரபும் திணை மயக்கமும்., பக் -69
8. ச.வே.சுப்பிரமணியன்.,குறிஞ்சிப்பாடல்கள்., பக்-315
9. மு.வரதராசன்., பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை., பக் – 456
10. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்., பக் -47
11. எ.பாலுச்சாமி.,மருதத்தில் மக்கள் வாழ்வியல்., பக் -3
12. ஆ. சிவலிங்கனார்., தொல்காப்பிய அகத்திணை உரைவளம்., பக் – 332
13. தி.செல்வம்., ஆய்வுக்கோவை., பக் -1850
14. மம்மது
15. நா.ஆறுமுகம்., கலித்தொகை ஓர் ஆய்வு., பக் – 30:33
16. ராஜகோபாலன்.,7வது அறிவு.,பக் -74
17. வ.சுப.மாணிக்கம்., தொல்காப்பியப் புதுமை., பக் -16
18. மேலது.
19. இராம.குருமூர்த்தி., சங்க இலக்கியச் சிந்தனைகள்.,பக் -28
20. இளம்பூரணார்., தொல்காப்பியம்..,பக் -302
21. ப.மகேஸ்வரி.,புறுநானூறும் வரலாறும்., பக் -80
22. அ.ச.ஞானசம்பந்தன் பக்க -66:67

23. ரா.சீனிவாசன்.,சங்க இலக்கியத்தில் உவமைகள் அணியகம்., பக் -239

24. தெ.கலியாணசுந்தரம்., சங்க அகப்பாடல்களில் உணர்வுப்போராட்டம்., பக் -148

25. சரளா ராசகோபாலன்.,சங்க இலக்கியத்தில் தோழி., பக் -10

26. வே.முத்துலக்குமி., பண்டையத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்., பக்க-74:75

27. ச.திருஞானசம்பந்தம்., நாற்கவிராசநம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கம் பக்-56

28. அ.ச. ஞானசம்பந்தன்., பறவைகளே., பக் -165

29. ரா.சீனிவாசன்.,சங்க இலக்கியத்தில் உவமைகள் அணியகம்., பக் -239

30. பி.எல்.சாமி.,சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்.,பக்க -142:143

31. தி.முத்து., சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்., பக் -98

32. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக்க - 32:33

33. ஆதி வள்ளியப்பன்., மனிதர்க்கு தோழனடி உயிரினங்கள் பற்றி., பக்க -24:25

34. சு.அரங்கநாதன்., சங்க கால மக்களின் நிலம் சார் வாழ்வியல் அடையாளங்கள் ஒப்பீடு பக் -59

35. பெரியசாமி தூரண்., பறவைகளைப் பார்., பக்க -5:6

36. A.C.Dutta,Text Book of Botany, p.g -144

## இயல் - மூன்று

## பறவைகளின் பழக்கவழக்கங்களும் -பண்புகளும்

சங்க இலக்கியத்தைப் புலவர்கள் பல்வேறு கோணங்களில் வருணித்து கூறியுள்ளனர். புலவர்கள் நுண்ணிய காட்சியறிவுடையவர்களாகவும், நுட்பமான புலனுணர்வு கொண்டவர்களாகவும் இருந்திருப்பதைக் காணும் போது அவர்கள் இயற்கையினிடத்து கொண்டிருந்த எல்லையற்ற காதலை உணர முடிகிறது. இவ்வாறு இயற்கையை வருணிக்கும் போது இயற்கையோடு ஒன்றிவாழும் உயிரினமானப் பறவைகள் குறித்தும் பல விளக்கங்களைக் கொடுத்துள்ளவற்றில் பறவைகளின் பழக்க வழக்கங்களையும் அவற்றின் பண்புகளையும் பற்றி விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**நிலங்களுக்கு ஏற்ப பறவைகளின் உடல் தகவமைப்பு**

“ஓர் உயிரினத் தகவமைப்பானது அதன் வாழிடச் சூழலினாலேயே தீர்மானிக்கப்படுகிறது. மலைப் பிரதேசங்களில் வாழும் ஆடுகளுக்கும் சீரான தட்ப வெப்பநிலை உள்ள பிரதேசங்களில் வாழும் ஆடுகளுக்கும் உள்ள தகவமைப்பு மாற்றங்களை உதாரணமாகக் கொள்ளலாம். மனிதர்களிடையேயும் வாழிடச் சூழலினால் பல தகவமைப்பு மாற்றங்கள் தோன்றுகின்றன. இதனடிப்படையிலேயே குறுந்தொகையின் ஐந்திணைப் பாடல்களிலும் சுட்டப்பட்டுள்ள உயிரினங்களில் பல தகவமைப்பு மாற்றங்களைக் காணமுடிகிறது. அவற்றுள் குறிப்பிடத்தகுந்தவை குருகு, கடுவன், மீன், யானை போன்றவையாகும்”[1] என்று ரம்யா குறிப்பிட்டுள்ளார்.

**பறவைகளின் பழக்கவழக்கங்கள்**

**உணவு**

மனிதன் முதலாக அனைத்து உயிரினங்களும் உயிர் வாழ முதன்மையானத் தேவை யாதெனில் அ∴து உணவு. உடல் நமது உயிரை சுமக்க உணவு அவசியத்தேவையாகும். உணவுத் தேவையை நமக்கு அறிவிப்பது பசி இதனைப் பண்பாட்டு மானுடவியல் என்ற நூலில் “பசி என்ற இரண்டெழுத்தினுள்ளே இப்பூவுலக உயிரினங்கள் யாவுமே அடங்கி உள்ளன. பசி என்பது ஓர் உயிரியல் நிகழ்ச்சி”[2] என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகிறார்.

உயிர் வாழ்வதற்கு தேவையான ஆற்றல் உணவிலிருந்தே கிடைக்கிறது. உணவு உடலோடு உள்ளத்தையும் அதனால் பண்பாடு வளரவும் துணைபுரிகிறது. இதற்கு “வாய் வழியாக உட்கொள்ளப்பட்டு, உயிர் வாழ்வதற்கும், உடல் நலத்திற்கும் தீங்கு விளைவிக்காத இன்றியமையாத பொருளாக அமைவதே உணவென்று தெரியலாம்”[3] என்று சே. நமச்சிவாயம் தனது தமிழர் உணவு புத்தகத்தில் கூறியுள்ளார். மேலும் மனித வாழ்க்கையில் முக்கிய பங்குவகிக்கும் உணவிற்கு நம் முன்னோர் பல பெயரிட்டு அழைத்து வந்துள்ளதை,

**“உணாவே வல்சி யுண்டி யோதன**
**மசனம் பதமே யிரையா கார**
**முறையே யூட்ட முணவெனலாகும்” (பிங்.1153)**

என்று பிங்கல நிகண்டில் உணவின் பெயர்களாக உணா, வல்சி, உண்டி, ஓதனம், அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம் போன்றவற்றை குறிப்பிடப்பட்டுள்ளது.

**பறவைகளின் உணவு பழக்கம்**

உலகெங்கும் சுதந்திரமாக பறந்து திரியும் பறவைகளுக்கு எல்லைகள் என்பது எங்கும் இல்லை. பறவைகள் தான் வாழும் பகுதியில் கிடைக்கின்ற எல்லா வகையான உணவுகளையும் உண்ணுகின்றன. அவை சிறுபூச்சி, புழு, மாமிசம், மீன், நத்தை போன்ற அசைவ உணவுகளையும், விதைகள், இலைகள், பழங்கள் போன்ற சைவ உணவுகளையும் உண்ணுகின்றன. பறவைகளின் அலகுகள் உணவுகளை உண்ணுவதற்கு ஏற்ற வகையில் அமைந்திருக்கும். பெரிய பறவைகளை விட குஞ்சுகளே அதிகமான உணவை உட்கொள்கின்றன. குஞ்சுகளுக்கு தாய்ப் பறவைகள் மீன் போன்ற உணவைத் தம் அலகிலும் சில பறவைகள் இரையை விழுங்கி விட்டு பின் குஞ்சுகளுக்குக் கக்கிக் கொடுக்கிறது.

நம்மைச் சுற்றி உள்ள சூழல் அமைப்பில் விலங்குகளை விடப் பறவைகள் பல்வேறு வேற்றுமைப் பண்புகளைப் பெற்று காணப்படுகின்றன. இவற்றில் மனிதர்களிடம் காணப்படும் உணவு வகை மாற்றம் போன்று பறவைகளிடமும் அவற்றின் அலகு அமைப்பிற்கேற்ப உணவு பழக்க வழக்கத்தில் மாற்றங்கள் காணப்படுகின்றன. ஆனால் ஆரம்ப காலத்தில் பறவைகள் அனைத்தும் ஊனுண்ணிகளாகத் தான் இருந்திருக்க வேண்டுமென்ற கருத்து பறவையியல் வல்லுனர்களிடம் காணப்படுகிறது. இதனையே என்.ஸ்ரீநிவாசன் அவர்களும் “பழங்கள்

கொட்டைகள் தின்னும் பறவைகள் பின்னாளில் தான் தோன்றியிருக்க வேண்டும் என்றும், இன்றும் இப்பறவைகள் முட்டையிலிருந்து வெளிவரும் குஞ்சுகளுக்கு முதலில் ஊட்டும் உணவு புழு, பூச்சிகளே குஞ்சுகள் வளர்ந்ததும் தாவரவுணவை மேற்கொள்ளுகின்றன"[4] என்று குறிப்பிட்டுள்ளார். பறவைகள் உணவு உட்கொள்வதில் வேறுபடுவதோடு, உணவு தேடும் முறையிலும் பிரிவுகளைப் பெற்று காணப்படுகின்றன. அவை,




என்று பிரித்து அவற்றின் உணவு முறை குறித்து தெளிவாக அறிய முடியும். இத்தகைய உணவைப் பறவைகள் உட்கொள்வதன் பயனாக அவற்றிற்கு ஏற்படும் நன்மைகளாகப் "பறவைகள் உண்ணும் உணவு உண்மையில் சத்துமிகுந்தது. விதைகள், பழங்கள், புழுக்கள், பூச்சிகள், எலி இனத்துப் பிராணிகள், மீன்கள் முதலியவற்றைப் பறவைகள் உண்கின்றன. குறைந்த சத்துடைய இலைகளையோ புற்களையோ பறவைகள் உண்பதில்லை. உண்ணும் உணவு மிக விரைவாகச் செரிமானம் ஆகிறது. முழுமையாகவும் திறம்படவும் செரிமான வேலை நடைபெறுகிறது"[5] என்று கு.ராஜாராம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

**தானியம் உண்ணும் பறவைகள்**

தானியங்களையும், தினைக் கதிர்களையும் உண்ணும் பறவைகளாக கானக்கோழி, கிளி, மயில், குறும்பூழ் போன்ற பறவைகள் சங்க இலக்கியத்தில்

குறிப்பிடப்பட்டுள்ளன. கிளிகள் காட்டில் விதைக்கப்பட்ட சிறு தினையைக் குறமகள் அறியாது கவர்ந்து உண்ணுவதை,

**“சாரல் புறத்த பெருங்குரல் சிறுதினைப்**
**பேரமர் மழைக்கண் கொடிச்சி கடியவும்**
**சோலைச் சிறு கிளி உன்னு நாட” (ஐங்.282)**

என்ற பாடல் வரி மூலம் அறியலாம். குறத்தி மான் தோலில் தினையைப் பரப்பி காய வைத்ததை கானக்கோழி உண்பதாக (புறம்-320) பாடலில் கூறப்பட்டுள்ளது. மேலும் மயில் நெல்லை விரும்பி உண்ணுவதை,

**“..........................பெரும்புன வரகின்**
**கவைக் கதிர் இரும்புறங் கதூஉ வுண்ட**
**குடுமி நெற்றி நெடுமாத் தோகை” (அகநா.194)**

என்ற பாடல் மூலம் அறியலாம். மயில் நெல், தினை, வரகு தவிர பலாப்பழம் உண்டதாக சங்கப் பாடல்களில் செய்திகள் காணப்படுகிறது.

உருவத்தில் குறும்பூழ் பறவையைப் போன்றே சிவந்த காடைப் பறவைகளும் காணப்படும். இவற்றின் பண்பும் தினையைக் கவர்ந்து உண்ணுவதாக இருப்பதை,

**“பைந்தினை உணங்கல் செம்பூழ்கவரும்” (ஐங்.469)**

என்ற பாடலில் செம்பூழ் பறவை என்று குறிப்பிடப்படுவது காட்டில் வாழும் சிவந்த காடைப் பறவைகளாகும். இவை பசுமையுடைய தினையிலிருந்து உதிர்ந்தவற்றை உலரவிடப்பட்ட இடத்திலிருந்து கவர்ந்து உண்ணும் ஆற்றலைப் பெற்றது என்பதை அறியலாம். மேலும்,

**“ஏனல்அம் காவலர் ஆனாது ஆர்த்தொறும்**
**கிளி விளி பயிற்றும் வெளில் ஆடு பெருஞ் சினை**
**விழுக் கோட் பலவின் பழுப் பயம் கொண்மார்......” (அகநா.12)**

தினைப்புனம் காக்க சென்ற மகளிரின் கிளி ஓட்டும் குரலை, கிளிகள் தம் இனத்தின் குரல் என்று கருதி அங்கு தினைக் கதிர்கள் உள்ளது என்பதை உணர்ந்து கொண்டு தம் இனத்தை தினையை உண்ணுவதற்கு அழைத்து சென்றதாக இப்பாடல் வரிகள் கூறுகின்றன.

**பழங்கள் உண்ணும் பறவைகள்**

பறவை இனங்கள் அனைத்தும் பழங்கள் உண்ணுபவையாக இருந்தாலும், பச்சைப் புறா இனமாகக் கருதப்படும் 'போகில்' என்னும் பறவை பழங்களையும், சில சமயங்களில் பழத்திலுள்ள கொட்டைகளையும் உண்ணும் ஆற்றல் வாய்ந்தாது என்பதை விளக்கும் வகையில்,

> **"புதுக் கலத் தன்ன கனிய வாலம்**
> **போகில் தனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்" (ஐங்.303)**

என்ற ஐங்குநுறூற்றின் பாடல் வரி ஆலம்பழம் பழுத்து இருப்பது போகிலை வேறு இடத்திற்கு செல்லாமல் தடுப்பதாகக் கூறியிருப்பதன் மூலம் இப் பறவை ஆலம்பழம், அரசம்பழம் போன்றவற்றை உண்ணும் என்பதோடு **'புதுக் கலத்தன்ன கனிய வாலம் போகில் பறவை தனைத் தடுக்கும்'** என்று கூறப்பட்டுள்ளது. இது அரிய செய்தியாகும். "ஆலமரம் பழுத்த காலத்தில் வரும் சில வகைப் புறாக்களில் போகில் என்பது மிக அரிதான பறவையாகும். இதனால் இப்பறவையைக் கொல்லக் கூடாது என்று தற்போது தடை போடப்பட்டுள்ளது. இப் பறவை மிக விரைவாய் பறக்கும் தன்மையதாகும்"[6] என்பதையும் அறியமுடிகிறது.

**தேன் குடிக்கும் பறவைகள்**

சங்க இலக்கியம் தேன் உண்ணும் பறவை என்று குயிலைக் குறிப்பிட்டுள்ளது. மேலும் குயில் பூச்சிகளையும், புழுக்களையும் உண்பதாகவும் குறிப்புகள் உள்ளன. இருப்பினும் குயில் தேன் உண்பதை,

> **"பாசரும் பீன்ற செம்முகை முருங்கினப்**
> **போதவிழ் அலரி கொழுதித் தாதருந்து**
> **இந்தளிர்மா அத்து அலங்கன் மீமிசைச்**
> **செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்" (அகநா.229)**

என்று முருங்கை பூவைக் குடைந்து தேன் குடிப்பதாகவும், மா, இலவம், கோங்கு, குரா போன்ற மரங்களில் பூக்கும் பூக்களிலும் அமர்ந்து வேனிற் காலத்தில் குயில்கள் தேன் குடிப்பதாகக் கூறப்பட்டிருக்கும் செய்திகளைக் இப்பாடலில் காணலாம். குயிலைப் போன்று **'தேன் வழிகாட்டி'** (Honey guide) என்னும் பறவை

தேன் சேகரிப்பவர்களுக்கு வழிகாட்டியபின் தேனை எடுத்துவிட்டு, அவர்கள் சிதறிச் சென்றுள்ள தேன் கூட்டின் துண்டுகளை உண்ணும் என்பது போன்ற பல செய்திகளும் காணக்கிடைக்கின்றன.

**மாமிசம் உண்ணும் பறவைகள்**

மனிதன் அம்பு, ஈட்டி போன்ற வேட்டையாடும் கருவிகளைக் கொண்டு எறிந்து பறவைகளையும், விலங்குகளையும் வீழ்த்தி அதன் மாமிசத்தை உண்பது போன்று சில பறவைகளும் சிறு பூச்சியிலிருந்து பெரிய பறவைகள் வரை பிடித்து தின்னும் அவற்றுள் கூகை, எழால், பருந்து போன்ற பறவைகள் அடங்கும். இவற்றில் "ஆந்தைகள் மற்றும் இராப்பாடிப் பறவைகள் மட்டுமே இரவில் நடமாடுகின்றன"[7] என்று இராஜேந்திரன் அவர்கள் கூறுகிறார். மேலும் கூகை மரங்களில் பதுங்கியிருந்து பூச்சிகள், தவளை, ஓணான், சுண்டெலி போன்ற உயிரினங்களைப் பிடித்து தின்னும் என்பதை (அகநா.122)என்னும் அகநானூற்று பாடல் மூலம் அறியலாம்.

எழால் மிக்க வலிமையுடையப் பறவையாகும். இப்பறவை காடை, கௌதாரி போன்ற காட்டுக்கோழி இனங்களைத் துரத்திப் பிடிக்கும் திறனுடையது. மேலும் போர்க்களத்தில் பிணங்களை உண்ணப் போன எருவையைக் கவர எழால் கீழே இறங்கியதாக,

**"……………………….படுபிணம் உணீஇயர்**
**புன்புற எருவைப் பெடைபுணர் சேவல்**
**குடுமிஎழாலொடு கொண்டு கிழக்கிழிய…." (பதிற்றுப்.36)**

என்ற பதிற்றுப்பத்து பாடலில் போர்க்களத்தில் உள்ள பிணத்தை உண்ணும் பொருட்டு புல்லிய நிறத்தையுடைய பருந்து தன் பெடையுடன் கூடி ஊன் உண்ணும் இயல்புடையது. அஃது தன் பெடையுடன் கொண்டையையுடைய கழுகையும் உடன் அழைத்துக் கொண்டு ஊன் உண்ணும் பொருட்டு கீழ் இறங்கி பிணங்களை உண்டு மகிழ்ச்சி கூத்தாடும் என்றும்,

**"மறங்கெழுபோந்தை வெண்தோடு புனைந்து**
**நிறம் பெயர் கண்ணிப் பருந்து ஊறு அளப்பத்…" (பதிற்றுப்.51)**
**"குழுஉச்சிறை எருவை குருதியாரத்" (பதிற்றுப்.67)**
**"விசும்பாடு மரபின் பருந்தூறு அளப்ப" (பதிற்றுப்.74)**

வீரரின் இரத்தத்தால் வெண்மையான பனந்தோடு சிவந்தது அதனை **'ஊன் துண்டம்'** என்று எண்ணிப் பருந்துகள் அதைக் கவர நேரம் பார்த்து காத்திருக்கும் எனப்பட்டதன் மூலம் பறவைகள் ஊன் உண்ணுவதில் அதிக நாட்டம் கொண்டிருந்ததையும், ஊனையும் பிணத்தையும் உண்ட கூட்டமான சிறகுகளையுடைய பருந்துகள் நீர் அருந்துவதற்குப் பதிலாகப் பிணங்களின் குருதியை அருந்துவதாகவும் பதிற்றுப்பத்தில் உள்ள பாடல் வரிகள் கூறுவதைக் காணமுடிகிறது. இதே போன்று வல்லவன் ஒருவன் மான் தோலில் அணிகலன், முத்து போன்றவற்றை சேர்த்து தேவியினது தோளில் சூட்டுவதற்கு செய்த தோலைத் தமக்கு உணவாகும் ஊன் என்று எண்ணி பருந்துகள் கவர நினைக்கும் (புறம்.271) சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் கூறியுள்ளனர். மேலும் "ஊன் வானில் பறக்கும் கழுகின் பார்வையில் பட்டவுடன் பல கழுகுகள், இறந்த விலங்கிடம் பறந்து வந்து தனது கூட்டத்தோடு அவற்றைக் கிழித்துத் தின்னும். இறந்த மிருகத்தின் எலும்பைத் தவிர மற்ற அனைத்தையும் தின்று அந்த இடத்தைச் சுத்தம்மாக்கிவிடும்"[8] என்றும் மலையமான் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

கடற்காகம், கொக்கு, சிரல், நாரை, வெள்ளாங்குருகு போன்ற பறவைகள் மீன் உண்பவையாகக் கூறப்பட்டுள்ளது. இவை பெரும்பாலும் கடற்கரை, உப்பங்கழி, வயல்வெளி, குளம் போன்ற பகுதிகளில் அதிகமாகக் காணப்படும். மேலும் கடற்காகம் பஞ்சு போன்ற இறாமீனையும், சிறு மீன்களையும், பரதவர் இடும் கழிவு மீன்களையும் உண்பதாகக் கூறப்பட்டுள்ளது. கொக்கு மீனிற்காக நெடுநேரம் காத்திருப்பதாகவும், சிரல் என்னும் மீன் கொத்திப் பறவை நீரில் மீனைப் பார்த்து விட்டால் ஒரே பாய்ச்சலாகச் சென்று மீன் பிடிக்கும் என்றும் கூறப்பட்டுள்ளன. இதே போன்று குறுந்தொகை பாடலில்,

**"அடும்பவி ழணி மலர் சிதை இமீ னருந்தும்**
**தடந்தாள் நாரை இருக்கும் எக்கர்த்**
**தண்ணந் துறைவன் தொடுத்து நம் நலம்" (குறுந்.349)**

என்று நீண்ட கால்களையுடைய நாரை அயிரை, இறா, கயல், வாளை போன்ற பல மீன்களை உண்பதாகவும், வெள்ளாங்குருகு கடற்கரைக் கழியில் காணப்படும் இறால் மீனையும், நண்டையும் பிடித்து உண்ணுவதாகவும் கூறப்பட்டுள்ளன.மேலும்,

**"மாசு இல் மரந்த பலி உண் காக்கை**
**வளி பொரு நெடுஞ் சினை தளியொடு தூங்கி..**
**நல்வகை பலிக் கொடையோடு உடுக்கும் அடங்காச் சொன்றி.."**
**(நற்.281)**

**"தெள் நீர்க்கு" ஏற்ற திரள் காற் குவளைப்**
**பெருந்தகை சிதைத்தும், அமையா, பருந்து பட,**
**வேத்து அமர்க் கடந்த வென்றி நல் வேல்" (அகநா.27)**

பலிச்சோறு உண்ணும் காக்கை , சோழரது **'கழார்'** என்னும் ஊரில் மாசற்ற மரத்திலுள்ள நெடிய கிளையில் அமர்ந்து மழைத்துளியோடு அசைந்து கொண்டு இருக்கும் அங்கு புதுவருவாய் போன்ற இறைச்சியுடைய பெருஞ்சோற்றுத் திரள்களை எண்ணி அமர்ந்திருக்குமென்றும், போர்களை வென்ற போர்களத்தில் பருந்துகள் வந்து படியும் என்று கூறப்பட்டுள்ளதால் இவை குருதியுணவை உண்ணும் பறவைகள் என்பதும் அறியமுடிகிறது.

புண் சொரியும் குருதியும் தம்மைச் சூழ விழுந்து கிடந்தோரின் கண்களைப் பறித்து எடுத்துக் கொண்டு உயர்ந்து இலைகளின்றி இருக்கும் **'யா'** மரத்தின் கிளையிலிருக்கும் குஞ்சுகளுக்கு உமிழ்ந்து கொடுக்கும் கழுகுகள் பற்றி குறிப்புகள்,

**"புன் உமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்**
**கன் உமிழ் கழுகின்....................." (அகநா.31)**

என்ற பாடலில் காணப்படுகிறது. மேலும் கழுகுகள் ஊனிற்காகக் காத்திருப்பதை,

**"அம்மவாழி தோழி நம் வயின்**
**நெய்த் தோரன்ன செவிய எருவை**
**கற்புடை மருங்கில் கடுமுடை பார்க்கும்**
**காடு நனி கடிய என்ப" (ஐங்.335)**

கழுகுகள் இரத்தத்தைப் போல் சிவந்த செவியையுடையதாக இருக்கும். இவை புலி போன்ற கொடிய விலங்குகளால் வீழ்த்தப்பட்டு அவை உண்டது போக மீதமாக கற்களின் பக்கத்தில் கிடக்கும் மிக்க புலால் நாற்றத்தையுடைய ஊண் துண்டுகளுக்காகக் காத்திருக்கும் காடு அஞ்சத்தக்கதாக இருக்கும் என்று இப்பாடல் வரிகளில் சுட்டப்பட்டுள்ளது.

**பகிர்ந்து உண்ணும் பறவைகள்**

ஆறறிவு கொண்ட மனிதர்களிடம் கூட காண முடியாத பல பழக்கவழக்கங்கள் சிறு உயிரிகளான பறவைகளிடம் அரிதாகக் காணப்படுகிறது. அவற்றுள் சிறந்த பண்பாகக் கருதப்படுவது யாதெனில் தனக்கு கிடைத்த உணவைத் தான் மட்டும் தனித்து உண்ணாது, அவ்வுணவைத் தன் இனத்திற்கும் பங்கிட்டு உண்ணும் பறவைகள் ஒற்றுமைக்கு சிறந்த உதாரணமாக இருக்கின்றன. சங்க இலக்கியத்தில் பகிர்ந்துண்ணும் பறவைகளாக காக்கை, மலையுறைக் குருவியும் கூறப்பட்டுள்ளது. காக்கை பலிச்சோற்றிற்காக ஊரின் எல்லையில் காத்து கொண்டிருப்பதை,

**“நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து**
**உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை”   (நற்.343)**

என்ற நற்றிணைப் பாடல் சிறு தெய்வ வழிபாட்டின் போது படைக்கப்படும் பலிச் சோற்றைக் காக்கைகள் கூட்டமாகச் சேர்ந்திருந்து உண்பதைக் கூறுகிறது. குன்றுகளிலும், மலைகளிலும் காணப்படும் சிறு குருவிகளான மலையுறைக் குருவிகள் எப்போதும் கூட்டாகவே காணப்படும். இவை தினை, புல்லரிசி, தானியம் போன்றவற்றை விரும்பி உண்ணும் என்பதை,

**“அருவி யார்ப்பமுத் தணிந்தன வரை**
**குருவி யார்ப்பக் குரல் குவிந்தன தினை” (பரிபா.18)**

என்ற பாடல் வரியின் மூலம் அறிய முடிகிறது. மேலும் இதைப் போலவே,

**“எய்யா வரிவில் அன்ன பைந்தார்ச்**
**செவ்வாய்ச் சிறு சிதைய வாங்கி**
**பொறைமெலிந் திட்ட புன்புறப் பெருங்குரல்**
**வளைசிறை வாரணம் கிளையொடு கவர.” (அகநா.192)**

என்னும் அகநானூற்றுப் பாடல் வானில் தோன்றுகின்ற எய்தப்படாத அழகிய வில்லைப் போன்ற ஆரத்தைக் கழுத்தில் கொண்டிருக்கும் சிவந்த வாயையுடைய சிறிய கிளியானது, தினைக் கதிர்கள் சிதையுமாறு கொய்யும், அவ்வாறு கொய்த தினைக் கதிரைத் தூக்கிச் செல்ல இயலாது விட்டு சென்றதைப் புல்லிய புறத்தினை உடைய கதிர்களை வளைந்த சிறகுகளைக் கொண்டிருக்கும் கானங்கோழி தன் இனத்துடன் கவர்ந்து உண்ணும் என்று கூறியுள்ளதைப் போன்று,

**“செவ்வரி நாரையோடு எவ் வாயும் கவர.” (நெடுநல்.17)**

என்ற நெடுந்தொகைப் பாடலில் கூதிர்ப்பருவத்தில் பசிய காலையும் மெல்லிய சிறகையுமுடைய கொக்குகள் வெண்மணல் பரப்பில் சிவந்த வரியையுடைய நாரைகளோடு கூடி கயல் மீன்களை உண்பதாகக் கூறப்பட்டுள்ளது.

குருதி தூவிய நிறைந்த கள்ளுடன் கூடிய எறும்பு மொய்க்காத வியப்புத் தரும் பலியை கரிய கண்களை உடைய காக்கையுடன் பருந்துகளும் ஒன்றாக இருந்து உண்ணும் என்று கூறியிருப்பதால் மனிதர்களிடம் காணப்படுவது போன்று பறவைகளிடம் எந்த விதமான இனப்பிரிவுகளும் இன்றி உணவைப் பாகுபாடில்லாமல் உண்பதையும் இவை தவிர வேறு சிலப் பறவைகளும் கூடியுண்ணும் பறவைகளாக இருப்பதைப் பதிற்றுப்பத்து பாடலில்,

**“நெய்த்தோர் தூ உய நிறைமகிழ் இரும்பலி**
**கடுங்கண் காக்கையொடு பருந்திருந்து ஆர..” (பதிற்றுப்.30)**

என்று விளக்கப்பட்டுன. மேலும்,

**“படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி**
**எருவைச் சேவல் ஈண்டுகிளை பயிரும்” (அகநா.161)**
**“ஆறுசெல் வம்பலர் உயிர்செலப் பெயர்ப்பின்**
**பாறுகிளை பயிர்ந்து வடுமுடை கவரும்” (அகநா.175)**

என்று ஆறலை கள்வர்கள் வழிப்போவோரை அம்பு எய்து கொன்றதினால் கிடைக்கும் முடைநாற்றம் அடிக்கும் புலாலை உணவாக உண்ணும் வாழ்க்கையை உடைய சிவந்த காதுகளை கொண்ட ஆண் பருந்து தனது நெருங்கிய சுற்றத்தை அழைக்கும் என்பதிலிருந்து காகத்தைப்போன்று எருவையும் தன் சுற்றத்தினரோடு இணைந்து கூடியுண்ணும் பண்புடையதாக இருப்பதும் அகநனூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இப்பறவைகள் குறித்து புறநானூற்று பாடல்களில்,

**“கவிசெந் தாழிக் குவிபுறத்து இருந்த**
**செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா**
**வாய்வன் காக்கையும் கூகையும் கூடிப்**
**பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்” (புறம்.238)**

என்று இறந்தவர்களை இட்டு புதைக்கும் தாழியின் வாய் அருகில் கழுகும், பொகுவல் என்ற பறவையும் அஞ்சாமல் இருப்பதாகவும், காக்கையும், கோட்டானும் பேய்க் கூட்டத்துடன் உண்ணும் விருப்பத்துடன் சுற்றித்திரிவதாகவும், இவை சிறு சிறு எலும்புகள் கிடக்கும் களர் நிலத்தில் பகற்பொழுதில ஒன்றாகக் கூடி கூவுவதாகவும்(புறம்.362), இருள்வாசி என்னும் பூவுக்கு கானக்காக்கையில் சிறகை உவமையாகவும்(புறம்.342) இருக்கும் செய்திகள் பறவைகளின் கூடியுண்ணும் பழக்கத்தோடு இருந்தகும், இறந்தவர்களைத் தாழியில் இட்டுப் புதைக்கும் வழக்கம் இருந்துள்ளமைக்கும் சான்றுகள் காணப்படுகிறது. மேலும் இத்தகைய பறவைகளின் பகிர்ந்துண்ணுதலை வே.முத்துலக்குமி “பாரோர் போற்றும் சிறந்த அறங்களுள் ஒன்று பகுத்துண்ணுதல். அறநூலார் தொகுத்துரைத்த அறங்களுள் தலைமை சான்றதும் அதுவே. கிடைத்தற்கரிய பொருளாயினும் பிறர்க்களிக்காது தனித்துண்ணுதல் தகுதியுடைய செயலாகாது”[9]என்று குறிப்பிடுகிறார்.

**மழைத் துளியை உண்ணும் பறவை**

வானம் வாழ்த்தி என்னும் புள்ளியையும், வரியும் உடைய வானம்பாடிப் பறவை மழைத் துளியை உண்ணும் இயல்புடையதாக இருப்பதைப் போற்றும் விதமாக அகநானூற்றுப் பாடலில்,

> **“................................பொறி வரி**
> **வானம் வாழ்த்தி பாடவும், அருளாது**
> **உறை துறந்து எழிலி நீங்கலின்.........” (அகநா.67)**

என்று மழைத்துளி வேண்டிப் பாட்டுபாடியும் மேகம் இரக்கமில்லாது மழை பெய்யாது வானில் இருந்து அகன்று சென்றதாகக் கூறப்பட்டுள்ளது. இத்துடன்,

> **“வானம் பாடி வறங் களைந்து ஆனாது**
> **அழி துளி தலைஇய புறவில், காண்வர” (ஐங்.418)**

என்று மழைத்துளியை உணவாக உண்ணும் பண்புடைய வானம்பாடிப் பறவை. மழைத்துளியை வேண்டி பாடல்பாடும் என்ற குறிப்பை ஐங்குநுறூற்றில் உள்ள இப்பாடல் மூலம் அறியலாம். இவ்வாறு சங்க இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கும் செய்திகள் அனைத்தும் ஏற்புடையவை. ஆனால் ஒரு பறவை மழை நீரை உணவாக உண்ணும் தன்மையுடையதா? என்பது ஆய்விற்குரியதாகவும் உள்ளது.

**கற்களை உண்ணும் பறவைகள்**

தானியம், விதைகள், பழங்கள், செடிகள் போன்றவற்றை உண்ணும். சில புறாக்கள் புழுக்கள், பூச்சிகள், நத்தைகள் போன்ற மாமிசங்களையும் உண்ணுகிறது. இவ்வாறு உண்ணுபவை ஜீரணமாக வேண்டும் என்பதற்காக விதைகள், தானியம் போன்றவற்றை உண்ணும் போதே சிறுசிறு கற்களையும் உண்ணுகிறது. இவை வயிற்று (Gizzard) பகுதியில் சென்று உணவை அரைத்து ஜீரணம் செய்கிறது. புறாக்கள் கற்களை உண்ணுவதை,

**"தூது உண் அம் புறவு" (கலித்.56)**

**"தூது உண் அம் புறவொடு துச்சிற்சேக்கும்" (பட்டினப்.58)**

என்ற பாடல்களில் கூறப்பட்டுள்ளதன் மூலம் சங்கப் பாடல்களிலேயே புறாக்கள் தூது உண்ணுவதற்கான சான்றுகள் காணப்படுகிறது. பறவைகளிலேயே தண்ணீரை அலகால் உறிஞ்சி குடிக்கும் பழக்கமுடையது புறா என்பதையும் அறியலாம். மேலும் வேறு சில பறவைகளும் உணவு செரிமானத்திற்காக உணவோடு சேர்த்து கற்களையும் உண்ணும் பழக்கத்தைக் கொண்டிருப்பதாக பறவை நூலார் கூறுவர்.

**அனைத்துண்ணிகள்**

உலகின் பல திசையெங்கும் பறந்து திரியும் பறவைகள் தங்களுடைய தேவைக்கு ஏற்றாற்போலவும், இடத்திற்கு ஏற்றாற்போலவும் கிடைக்கும் உணவை உட்கொண்டு வாழும். பறவைகளின் உணவுமுறைக்கு எவ்வித வரையறையும் இல்லை. ஆனால் ஒவ்வொரு இனமும் தங்களது இனத்திற்கு ஏற்றாற் போல உணவை வேறுபாட்டுடன் உண்ணுகின்றன. இம்முறையை விளக்கும் வகையில் சங்க இலக்கியப்பாடல்களில்,

**"பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை" (நற்.258)**

பொன் வளையல் அணிந்த பெண்கள் வீட்டின் பக்கம் போட்ட கொக்கின் நகம் போன்ற வெள்ளை நிறமான சோற்றைப் பசிய கண்களை உடைய காக்கை உண்ணும். பின் மாலையில் கடைத் தெருவில் குவிந்திருக்கும் இறாமீனைக் கவர்ந்து தின்னும் என்று நற்றிணைப்பாடலிலும், உணவினைத் தேடித்திரியும் பறவைகளுக்கு உணவிடுவது உணவு கொடுப்பவர் உயிர் கொடுப்பவருக்கு ஒப்பாவர் என்பதை,

**"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**
**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**
**உணவு எனப்படுவது நிலத்தோடு நீரே" (புறம்.18)**

என்ற புறநானூற்று பாடல் வரிகள் நமக்குத் தெளிவுபடுத்துகின்றன. மேலும்,

**"சிறு வெண் காக்கை நாள் இரை பெறூஉம்**
**பசும் பூண் வழுதி மருங்கை அன்ன……….." (நற்.358)**

பெரிய சிவந்த இறாமீனின் பஞ்சு போன்ற தலையை உடைய முடங்களைக் கொண்ட சிறிய வெண் காக்கை நாட் காலையில் இரையாகப் பெறும் என்பதை நற்றிணைப் பாடல் வரிகள் விளக்குவதைப் போன்று,

**"பைங்கால் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை**
**மென்சேற்று அடைகரை மேய்ந்துஉண் டதற்பின்**
**ஆரல் ஈன்ற ஐயவி முட்டை**
**கூர்நல் இறவின் பிள்ளையொடு பெறூஉம்" (புறம்.342)**

என்று பசிய காலையுடைய கொக்கு அகன்ற வாயையுடைய தனது குஞ்சிற்கு கரையில் மேயும் மீனையும், ஆரல் மீனின் கடுகு போன்ற முட்டையையும், இறால் மீனின் குஞ்சினையும் உண்ணக் கொடுக்கும் என்றும் அத்தகைய கொக்கின் நகம் போன்ற நெல் அரிசியையும் மானின் வருத்த இறைச்சியை உறவினர்க்கு கொடுப்பர்(புறம்.398) என்பதைக் கூற கொக்கின் நகத்தை உவமைக்காகப் பயன்படுத்தியிருப்பதையும் பறவைகளை நுணுகி ஆராய்ந்துள்ள தன்மையும் இப்பாடல் வரிகள் மூலம் வெளிப்படுகிறது.

நாரைகள் தங்களுக்கு தேவையான உணவை எவ்வாறு பெறுகின்றன என்பதைப் புறநானூற்றில்,

**"மென்பாலான் உடன்அணைஇ**
**வஞ்சிக் கோட்டு உறங்கும்நாரை**
**அறைக்கரும்பின் பூஅருந்தும்.."** (புறம்.384)
**"புனல் புதவின் மிழலையொடு கழனிக்**
**கயலார் நாரை……………………….." (புறம்.24)**

வயலில் காணப்படும் கயல் மீனை மேய்ந்து உண்ணும் நாரை என்றும், மென்மையான நிலமாகக் கருதப்படும் மருத நில வயல்களில் நாரையினங்கள்

ஒன்றாக மேய்ந்து விட்டு வஞ்சிமரத்தின் கிளையிலே தங்கி அங்கேயே தூங்கும் என்றும், இத்தகைய நாரைகள் முற்றிய கரும்பின் பூவை உண்ணும் என்றும் இப்பாடல் கூறிப்பிடுகிறது. மேலும்,

**"கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்**
**இரை தேர் நாரை எய்தி விடுக்கும்." (நற்.35)**

என்று இப்பாடலில் வண்டும், நண்டும் நாவற் பழத்தைக் கண்டு எழுப்பும் ஆரவாரத்தைக் கேட்ட நாரை தனக்கு தேவையான இரையைத் தேடுவதை விட்டு விட்டு கனி கிடைக்கும் இடத்தை அடைந்து அவற்றின் பூசலைத் தீர்த்தது எனக் கூறியுள்ளதையும்,

**"……………………கயதோறு**
**இற ஆர் இனக் குருகு ஒலிப்ப…" (நற்.27)**

என்று பொய்கைகள் தோறும் இறா மீனைத் தின்னும் குருகுக் கூட்டம் எப்போதும் ஆரவாரத்துடன் இருப்பதாகவும் நற்றிணைப்பாடல் வரிகளில் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாறு பறக்காமலேயே உணவுகள் கிடைக்கும் சூழல் பறவைகளுக்கு இருப்பதால் "இறகுதிர் காலத்தின் போது பறப்பதற்குப் பயன்படுகிற இறகுகள் பல உதிர்ந்து போய்விடுமென்றாலும், பறக்கிற காரியத்துக்குப் பழுது ஒன்றும் ஏற்படாது. வாத்துக்கள் போன்ற நீர்ப்பறவைகள் இறகுதிரப் பெற்றால் பறக்க முடியாது போவதுண்டு. ஆனால் அவை பறந்து தான் உணவு தேட வேண்டும் என்பதில்லை. அதனால், தற்காலிகமாகப் பறக்க முடியாது போயினும் கெடுதல் எதுவும் விளைவதில்லை"[10] என்று பறவைகள் பற்றிய அறிவியலில் கு.ராஜாராம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

**மனிதர்களைப் போன்று பறவைகளிடம் உள்ள சிறப்புப் பண்புகள்**

**பறவைகளின் காதல்**

தமிழர்களின் காதல் மற்றும் வீர வாழ்க்கை முறையைப் பற்றி மட்டும் ஆராயாமல் புலவர்கள் உயிரினங்களோடும் ஒன்றி, ஒவ்வொரு இனத்திடமும் இயற்கையாகவே காணப்படும் இணை வாழ்க்கை முறை அனைத்து உயிரினங்களுக்கும் பொதுவானது என்று குறிப்பிடும் வகையில் பாடல்களைக் கொடுத்து சென்றுள்ளனர். இணை வாழ்க்கை முறையில் தோன்றும் காதல் என்பதற்கு "இல்லறம் இனிதாற்றுதற்கு வினையறம் மேற்கொள்ளல் ஆடவர் அறமாகும். கடமையறத்தினும் காதலறமே சிறந்தது"[11] என்ற கருத்தை

வே.முத்துலக்குமி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இதில் அ..றிணை உயர்திணை என்ற பாகுபாடு இல்லை என்பதை கீழ்காணும் பாடல்களில் பறவைகளின் காதல் உணர்வுகளை புலவர்கள் வெளிப்படுத்தியிருப்பதைக் காணமுடியும்.

**"நீர் உறை மகன்றிற் புணர்ச்சி போலப்**
**பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு" (குறுந்.57)**

என்ற பாடலில் நீரின் அருகில் வாழும் மகன்றில் பறவைகளின் சேர்க்கைப் போல, நானும் பிரிதற்கு அருமையான காமத்தோடு தலைவரைப் பிரிந்து இருப்பதை விட உயிரை விடுதல் சிறப்பானது என்று தலைவி கூறுவதன் மூலம் தலைவி தலைவன் மீது கொண்டிருக்கும் காதல் உள்ளம் வெளிப்படுகிறது. மேலும்,

**"அலர் ஞெமல் மகன்றில் நன்னர்ப் புணர்ச்சி**
**புலரா மகிழ் மறப்பு அறியாது நல்கும்" (பரிபா.8)**

மகன்றில் என்னும் ஒரு வகைப் பறவை ஒரு போதும் சிறு பிரிவைக் கூட பொறுத்துக் கொள்ளாத இயல்புடையது. அது போல காதலுடன் இன்ப புணர்ச்சியையும், கற்புப் புணர்ச்சியையும் மறவாமல் இருப்பது காதலர்களுக்கு சிறப்பு உடையதாகும் என கூறியிருப்பதன் மூலம் மகன்றில் பறவை சிறந்த காதலுக்கு உதாரணமாகப் பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம். இப்பறவை பற்றி தமிழண்ணல் "அன்றில் பறவைகள் பனைமரங்களின் மடல்களின் ஊடே கூடுகட்டிக் கொண்டு, கூதிர்கால நள்ளிரவு நேரம் போன்றவற்றில், ஒன்றுடன் ஒன்று கூடி மகிழ்ந்து இசைக்கருவி போல இனிதாக மிகத் தாழ்ந்த குரலில் முரலுமாம். இம்முரல் ஒலி கூடியிருக்கும் காதலர்களின் இன்பத்தை மிகுவிக்கும், பிரிந்திருக்கும் காதலர்களின் காம இன்ப உணர்வைத் தூண்டிவிட்டு அவர்களை இரவெல்லாம் வருந்தச் செய்யும்"[12] என்கிறார். மேலும் நற்றிணைப் பாடல் ஒன்று,

**"ஒன்று இல் காலை அன்றில் போலப்...." (நற்.124)**

அன்றில் பறவைகளில் ஒன்று இல்லாத போது மற்றது இறந்து போகும் என்று அன்றில் பறவைகளின் அன்பு உள்ளத்தைப் பற்றி குறிப்பிட்டுள்ளது.

அன்னப்பறவைகளும் காதல் பாறவைகளாகவே இருந்துள்ளது என்பதை ஐங்குறுநூற்று பாடலில்,

**"அன்னை வாழி வேண்டன்னை – அவர் நாட்டுத்**
**துதிக்கால் அன்னம் துணை செத்துமிதிக்கும்" (ஐங்.106)**

என்று தோற்பை போன்ற கால்களையுடைய அன்னப் பறவை அன்னத்தைப் போன்ற தோற்றமுடைய சங்கினைத் தன் பெடை அன்னம் என எண்ணித் தன் காலை வைத்து மிதிக்கும் என்பதில் இருந்து அன்னத்தின் காமமிகுதியைக் கூறுவதைக் காணமுடிகிறது. இதேப் போன்று,

**“புன் புறப் பெடையொடு பயிரி இன் புறவு”**
**இமைக் கண் ஏது ஆகின்றோ…………..” (குறுந்.285)**

இனிய ஆண்புறா புல்லிய புறத்தையுடைய பெடையை பல முறை அழைத்து இமைக்கும் பொழுதில் எத்தகைய இன்பம் உடையதாக இருப்பதாகவும், வீட்டிறப்பில் வாழும் சிவந்த கால்களை உடைய ஆண் புறாவானது தான் விரும்பிய பெண் புறாவைப் புணர்ச்சிக்கு அழைப்பதை என்று குறுந்தொகைப் பாடலில் கூறப்பட்டுள்ளது. மேலும் புறாக்கள் வால் சிறகை விரித்து நடனமாடுவதை,

**“அமர் நல் இல் அக இறை உறையும்**
**வண்ணப் புறவின் செங்காற் சேவல்**
**வீழ் துணைப் பயிரும் கையறு முரல் குரல”   (நற்.71)**

என்று புறாக்கள் மயில் போன்று வால் சிறகுகளை விரித்து நடனமாடுவது இயல்பு. மேலும் ஆண் புறாக்கள் தனது இனப்பெருக்கக் காலத்தில் தொண்டை தரையில் தொடும்படி தலையை மேலும், கீழும் அசைத்துக் கொண்டு பெண் புறாக்களுக்கு வெயிலால் உண்டாகும் வருத்தம் தீர்க்கக் தம் சிறகை விரித்து ஆண் புறாக்கள் நிழல் உண்டாக்கும் என்பதாக நற்றிணைப் பாடல் விளக்குகிறது. இதே போன்று கலித்தொகைப் பாடல் ஒன்றில்,

**“துன்புறூஉம் தகையே காடு என்றார், அக் காட்டுள்**
**அன்பு கொள் மடப் பெடை அசைஇய வருத்தத்தை**
**மென் சிறகால் ஆற்றும், புறவு எனவும் உரைத்தனரே”   (கலித்.11)**

காட்டின் வெப்பத்தைத் தாங்கிக் கொள்ளமுடியாமல் இருக்கும் பெண் புறாவிற்கு, ஆண் புறா தனது சிறகுகளை விரித்து நிழல் கொடுக்கும் என்ற குறிப்பைக் காணலாம். ஆனால் மனிதனைப் போன்று வியர்வைச் சுரப்பி இல்லை என்றாலும் வெப்ப காலங்களுக்கு ஏற்ப புறாக்கள் உடலைக் குளிர்ச்சியாக வைத்துக் கொண்டு எந்த விதமான வெப்ப சூழ்நிலையிலும் தன் உடலின் வெப்பத்தை மாற்றி அமைத்துக் கொள்கிறது. அதே சமயம் அதிக வெப்பம் மிகுந்த

பகுதிலேயே இருக்க நேருமானால் அதன் உள் உறுப்புகள் செயல் இழக்கத் தொடங்கி கழிவு உறுப்பு மூலம் நச்சுக் கழிவுகளை வெளியேற்றுகிறது என்பதையும் அறிய முடிகிறது.

அச்சம் தரும் வழியல் வெண்ணிறத் தலையை உடைய பருந்து ஓமை மரத்தில் அமா்ந்து கொண்டு இரக்கம் உண்டாகும் வகையில் தன் பேடையை விரும்பி அழைக்கும் என்றும், பொன்னைப் போன்று மலா்ந்து வேங்கை மரத்தின் அசையும் கிளை அழகு பெறுமாறு நீலமணி போன்ற நிறமுடைய மயில் தன் பெடையை அழைக்கும். என்பது போன்ற செய்திகளைக் கூறியிருப்பதால் புலவா்கள் கருத்து வழியாக பறவைகளின் காதல் உள்ளத்தை,

**“கருங்கால் ஓமை ஏறி, வெண் தலைப்**
**பருந்து பெடை பயிரும்..................” (அகநா.117)**
**“மலா்ந்த வேங்கை அலங்குசினை பொலிய**
**மணிநிற மஞ்சை அகவும்” (அகநா.272)**

என்ற பாடல் வரிகள் மூலமாக அறியமுடிகிறது. மேலும் குயிலின்,

**“அவரோ வாரார்-தான் வந்தன்றே**
**குயிற் பெடையின் குரல் அகவ**
**அயிா்க் கேழ் துண் அறல் நுடங்கும் பொழுதே” (ஐங்.341)**

அயிரின் நிறம் உடைய நுண்ணிய மணல் காற்றால் அசைந்து குவியும் பெரும்பொழுதான இளவேனில் வந்ததனால், பெட்டைக் குயிற் தன் இனிய குரல் எடுத்துப் பாடுவது தன் ஆண் துணையைப் புணா்ச்சியின் காரணமாக அழைப்பதற்கே என்றும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறே,

**“பெரும் புலா் விடியல் விரிந்து வெயில் எறிப்ப**
**கருந் தாள் மிடற்ற செம் பூழ்ச் சேவல்**
**சிறு புன் பெடையொடு குடையும்...” (அகநா.63)**

என்று யானைக் காலால் உதைத்து புழுதியாக்கிய நிலத்தில் உள்ள புழுதியில் கழுத்தில் கரிய கோட்டை உடைய சிவந்த குறும்பூழ் சேவல் தன் பெடையுடன் சோ்ந்து குளிக்கும் என்று தலைவன் கடந்து சென்ற பாலை நிலத்தைத்தில் இருக்கும் பறவைகளின் அன்பினை இப்பாடல் சிறப்பித்து கூறப்பட்டுள்ளது. மேலும்,

**“..................................வைகறை இயம்ப**
**யானையங்குருகின் சேவலொடு காமர்.” (மதுரைக்.674)**

யானையங்குருகு என்று அழைக்கப்படும் சக்கரவாளப் பறவை தனது பெடையை விடியற் பொழுதில் அழைப்பதை மதுரைக்காஞ்சி அடிகளால் அறியலாம். இவ்வாறு காதல் மிகுதியால் நாரை தனது இணையை அழைப்பதை,

**“வியல் இரும் பரப்பின் இரை எழுந்து அருந்துபு**
**புலவு நாறு சிறுகுடி மன்றத்து ஓங்கிய**
**ஆடு அரைப் பெண்ணைத் தோடு மடல் ஏறி**
**கொடு வாய்ப் பேடைக் குடம்பைச் சேரிய**
**உயிர் செலக் ககடைஇப் புணர் துணைப்**
**பயிர்தல் ஆனா, பைதல்அம் குருகே.” (நற்.338)**

என்ற நற்றிணைப் பாடல் நாரை அழகிய நெய்தல் நிலப்பரப்பில் இரையைத் தின்று விட்டு புலால் நாறும் சிறு குடி மன்றத்தில் உள்ள பனையின் மடலில் ஏறி அமர்ந்து கொண்டு வளைந்த வாயையுடைய தன் புணர் துணையாகிய பேடை குடம்பைச் சேர தன் துணையை அழைப்பதை நிறுத்தாமல் கூவிக் கொண்டிருக்கும் என்பதைக் குறிப்பிடுகிறது. இவ்வாறு பறவைகள் தனது துணையை அழைப்பதை “இளவேனிற் காலத்தில் புத்துயிர் பிறக்கின்றது. முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் காலமும் அதுவே, பொதுவாக ஆண் பறவைகள் தான் பெண் பறவைகளை நேசித்து இணை கூட முயலும், இதற்காகத் திருமணக்கோலம் பூண்டு அவை பல வண்ணங்களையுடைய இறகுகளோடு விளங்குகின்றன”[13] என்று பெரியசாமி தூரண் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

**பறவைகளின் அச்சம்**

அச்ச உணர்வு அனைத்து உயிர்களிடத்தும் வெளிப்படும். அதைப் போலவே உயிரினங்களில் ஒன்றான பறவைகளின் அச்ச உணர்வுகளும் இலக்கியங்களில் தேவையான இடத்தில் கையாளப்பட்டுள்ளதை,

**“..................................உமணர்**
**மணல் மடுத்து உரறும் ஓசை கழனிக்**
**கருங் கால் வெண் குருகு வெரூஉம்.” (நற்.4)**

என்ற பாடலில் உப்பு வணிகர்கள் கல் உப்பின் விலையினைக் கூறிக் கொண்டு ஆநிரையை விலக்க ஒலி எழுப்பி வழி விடுமாறு கூவுவர். அவ்வழியில் செல்லும் வண்டிகள் மணல் பரப்பில் எழுப்பும் ஓசைக்கு வயல்வெளியில் இருக்கும் கரிய கால் வெள்ளை நாரைகள் அச்சம் கொள்ளும். இங்கு குருகுகள் அஞ்சும் ஒலியை தூற்றும் ஊராகக் கருதி தலைமக்களின் களவொழுக்கம் கற்பொழுக்கமாக மாற்றப்படுவதாகப் புலவர்கள் குறிப்பிட்டுள்ள குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. இதேப் போன்று,

**"புலம்பொடு வந்த பொழுது கொள் வாடை**
**இலங்கு பூங் கரும்பின் ஏர் கழை இருந்த**
**வெண் குருகு நரல….."(அகநா.13)**
**"மடி வாய்த் தண்ணுமைத் தழங்கு குரல் கேட்ட**
**எருவைச் சேவல் கிளைவயிற் பெயரும்" (நற்.298)**
**"…………பரதவர் கோட்டு மீன் எறிய**
**நெடுங்கரை இருந்த குறுங் கால் அன்னத்து**
**வெண் தோடு இரியும் வீ ததை கானல்" (குறுந்.304)**

என்ற பாடல் வரிகளில் நெற்கதிர் கதிர்கள் நிரம்பிய வயலின் வரப்பில் உள்ள பூக்கள் தோகை போன்று விளங்கும் வளர்ந்த கரும்பின் மீது அமர்ந்திருக்கும் வெண் நாரை குளிர்காலத்தில் வீசும் வாடைக் காற்றுக்கு அஞ்சி ஒலி எழுப்பும் என்றும், வழிப்பறி தொழிலையுடைய மறவர் வாயினால் எழுப்பும் ஓசைக்கு அச்சம் கொண்டு பருந்தின் சேவல் தன் இனத்திடம் போய்ச் சேருவதாகவும், பரதவர் சுறாமீனை நோக்கி எறி உளி வீசியதைக் கண்டு நீண்ட கரையில் இருந்த குறுகிய கால்களை உடைய அன்னப் பறவைகளின் வெண்ணிறக் கூட்டம் அஞ்சி மலர்கள் நெருங்கிய சேலைக்குள் ஓடும் என்றும் கூறப்பட்டுள்ளன. புறநானூற்றுப் பாடலில்,

**"ஊர்முதுவேலி பார்நடை வெருகின்**
**இருட்பகை வெரீஇய நாடு இளம்பேடை**
**ஊயிர்நடுக் குற்றுப் புலாவிட் டரற்றச்**
**சிறையும் செற்றையும் புடையு நள் எழுந்த**
**பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்**
**கவிர்ப்பூ நெற்றிச் சேவலின் தணியும்" (புறம்.326)**

இல்லங்களில் வாழ்கின்ற பெட்டைக் கோழியானது காட்டுப் பூனைக்கு அஞ்சும். இதனால் உயிர்ப்பும் நடுக்கமும் கொண்டு பாதுகாப்பான இடத்தில் கூடும் பொருட்டு

தனது குஞ்சினங்களைக் கூவி அழைக்கும். அப்போது முருங்கப்பூப் போன்ற கொண்டையை உடைய சேவலைக் கண்டால் அச்சத்தை நீக்கும் என்கிறார் தங்கால் பொற்கொல்லனார். மேலும்,

**“முதல்வ நின் யானை முழக்கம் கேட்ட**
**குரல் கேட்ட கோழி குன்று அதிரக் கூவ**
**முத நனி வாரணம் மாறுமாறு அதிர்ப்ப” - செவ்வேள் (பரிபா.8)**
**“கோழி வயப் பெடை இரிய கேழலொடு” (திருமுரு.311)**
**“தட மருப்பு எருமைப் பிணர்ச் சுவல் இரும் போத்து**
**மட நடை நாரைப் பல் இனம் இரிய**
**நெடு நீர்த் தண் கயம் துடுமெனப் பாய்ந்து.” (நற்.330)**

யானையின் முழக்கம் கேட்டு நின் கோழியும், சேவலும் மலை அதிரும்படி கூவுகிறது. அக்கோழியினது குரலைக் கேட்குந்தோறும் மதம் பிடிக்கும் தன்மையுடைய யானையும் முழங்கும் என்று கூறியுள்ளதையும், யானைக் கொம்புகளைக் கொண்டு தென்னைக் குலையும், மிளகுக் கொடியும் சாய்வதற்கு அஞ்சி கோழிகள் ஓடியதும், நீர் நிரம்பிய குளத்தில் கரிய எருமைக்கடா துடும் எனப் பாய்ந்த ஓசைக்கு மட நடையை உடைய நாரையும் அதன் கூட்டமும் அஞ்சி பறந்து ஓடும் என்பது போன்ற குறிப்புகளை இப்பாடல்கள் வழி அறியமுடிகிறது. இதே போன்று,

**“மட நடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்” (திருமுரு.310)**

என்ற பாடலில் மடப்பம் உடைய நடை பொருந்திய மயில் யானையால் கொடிகள் சாய்வதனைக் கண்டு அஞ்சு ஒடுவதையும்,

**“வள் இதழ் நெய்தல் வருத்த மூக்கு இறுபு**
**அள்ளல் இருஞ் சேற்று ஆழப் பட்டென**
**கிளைக் குருகு இரியும் துறைவன்…….” (நற்.372)**

எனப் பனம் பழம் மூக்கிற்று இருஞ்சேற்றில் விழுந்த ஓசைக்கு அஞ்சி குருகுக் கூட்டம் பறந்தோடும். அது போல அலர் தூற்றும் பெண்டிர் வாய் தலைமக்கள் மணம் செய்தால் ஒடுங்கும் என்பதையும் இப்பாடலில் உள்ளுறையாக்கியுள்ளதை காணும் போது இப்பறவை இனங்கள் சிறு ஓசைகளுக்கு கூட அஞ்சும் என அறியப்படுகிறது.

**பறவைகளின் ஒழுக்கம்**

மனிதன் தான் சிறந்த வாழ்க்கை முறையினை உடையவனாக இருக்க உயர்ந்ததொரு கொள்கையான ஒழுக்கத்தனை மேற்கொண்டு வாழ்கிறான். ஆனால் அ∴றிணை உயிரினங்களுக்கு எந்த கட்டுப்பாடும் வரையறையும் இல்லாமல் வாழும் என்ற கருத்தை நம்மில் இருந்து நீக்க,

> **"உள் இறைக் குரீஇக் கார் அணற் சேவல்**
> **பிலி புலத் துணையோடு உறை புலத்து அல்கி**
> **குடம்பை கடிதலின்................"** (நற்.181)

என்ற பாடலில் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்ற கருத்தை பறவை இனமும் கடைப்பிடித்திருக்கிறது. என்பதை முழுமையாக நமக்கு உணர்த்துகிறது. இவ்வாறு பறவை இனம் காத்த ஒழுக்கத்தை மனித இனமும் காக்கத் தவறக் கூடாது என்று புலவர்கள் கூறியுள்ளனர்.

**பறவைகளிடம் வருத்தம்**

பிரிவு ஆற்றாமையால் அனைத்து உயிர்களிடமும் வருத்தம் தோன்றுவது இயல்பாகும். அந்த வகையில் பறவைகளும் பிரிவினால் ஏற்படும் வருத்தத்தை வெளிப்படுத்துவதை கீழ்க்காணும் பாடல்களால் அறியலாம்.

> **"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
> **காணிய சென்ற மடநடை நாரை**
> **காலை இருந்து மாலைச் சேக்கும்" (ஐங்.157)**
> **"கையறுபு இரற்றுகானலாம் புலம்பந்.." (ஐங்.152)**

வெள்ளாங்குருகின் பிள்ளை இறந்ததற்காகச் சென்ற நாரை காலை முதல் மாலை வரை அங்கேயே தங்கியதாகவும், செயலற்று ஒலித்தலைச் செய்யும் என்றும்,

> **"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
> **காணிய சென்ற மடநடை நாரை**
> **பசிதின அல்கும் பனி நீர்ச் சேர்ப்ப" (ஐங்.159)**
> **"நொந்ததன் தலையும்நோய் மிகும்" (ஐங்.160)**

என்ற பாடல் வரிகளில் இறப்பிற்குச் சென்ற நாரை பசி வருத்தத்தில் வருந்தியிருந்ததாகவும், இறந்தது தன் குஞ்சு அல்ல என்பதைக் கண்ட பின்பு

மேலும் அதிகமாக வருந்தியதாகவும் குறிப்புகளைக் காணும் போது மனிதர்களைப் போன்று நாரையின் வருத்தம் வெளிப்படுவதையும் காணலாம். மேலும்,

**“வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
**காணிய சென்ற மடநடை நாரை**
**பதைப்ப ததைத்த நெய்தல்....” (ஐங்.155)**

வெள்ளாங்குருகின் குஞ்சினைத் தனதாக எண்ணிக் காண்பதற்குச் சென்ற நாரை இறகு அடித்து அசைப்பதாகக் கூறப்பட்டிருக்கும் காட்சி மனிதர்களின் இறப்பு சடங்கின் போது பெண்கள் மார்பில் அடித்துக் கொண்டு அழும் காட்சியை ஒப்புமையாகக் கொள்ளுவதை ஐங்குறுநூற்றுப் பாடலினால் அறியலாம். மேலும்,

**“பதைப்ப ஒழிந்த செம்மறுத்தூவி**
**தெண்கழிப் பரக்குந் துறைவன்” (ஐங்.156)**

நாரை தனது இறகுகளைக் கோதியதால் உதிர்ந்த செவ்விய வரிகளையுடைய இறகுகள் தெளிவான கழியில் போய் பரவியதாகக் குறிப்பு இடம்பெற்றுள்ள இவ்வரிகள் செவ்வரி நாரையைச் சுட்டுவதாகக் கொள்ளமுடிகிறது. ‘தாயன்பு என்பது குழந்தையிடம் காட்டும் நேரிடையான உணர்ச்சியின் வெளிப்பாடு மட்டுமல்ல மாறாத உறவில் விளைவது இரக்கம் என்பதே அதன் பிறப்பாகும்’ என்ற ஹெலனாவின் கூற்று ஒப்புநோக்கத்தக்கது. தாய் அன்புக்கு ஈடான உன்னத உணர்வு வேறில்லை. அன்பின் வழியது உயிர்நிலை என்பது மறுக்கமுடியாத உண்மை.

**கடற்காக்கை பண்புகள்**

சிறுவெண்காக்கை என்பது மற்ற காக்கைகளைப் போல கரிய நிறமுடைதாக இருந்தாலும், அதன் கழுத்துப்பகுதிக்கு கீழ்ச் சிறிதாக வெண்மைநிறம் கொண்டிருக்கும் இதனை,

**“பெருக்கடற்கரையது சிறு வெண் காக்கை**
**கருங்கோட்டுப் புன்னைத் தங்குந்துறைவற்குப்” (ஐங்.161)**

பெரிய கடற்கரையில் வாழும் சிறு வெண் காக்கை நீந்தும் அளவு பெருகிய நீரையுடைய பெரிய கரையில் இரையான சிறு மீன்களை நாடியுண்டு மலர்கள் மணம் கமழும் சோலையில் தங்கும்(ஐங்.162) என்றும், (ஐங்.163) சிறு வெண் காக்கை கரிய நீர்க்கழியில் நீர் துவலையாகத் தெரிக்கும் ஒலி கேட்டுக்

கண்ணுறங்கும். (ஐங்.164) அயிரை மீன்களை உண்ணும். (ஐங்.165) கழியில் வாழ்கின்ற சிறு மீன்களை நிறைய உண்ணும். (ஐங்.166) வரி பொருந்திய வெண்மையான பலகறைகளை வலை என்று எண்ணி அச்சம் கொள்ளும். (ஐங்.167) உப்பங்கழியிடத்தில் வாழும் இனிமாகிய கெடிற்று இன மீன்களை உண்ணும் என்றும், (ஐங்.170) கரிய உப்பங் கழியில் மலர்ந்து நெய்தலைச் சிதைக்கும் என்பதை இப்பாடல்களில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

**பருந்தின் பண்புகள்**

பார்த்தால் அச்சத்தை உண்டு செய்யும் வகையில் இருக்கும் பறவைகளுள் பருந்தும் ஒன்றாகும். இதன் பண்புகளாக,

**"எ.்.குஉறு விழுப்புண் கூர்ந்தோர் எய்திய**
**வளைவாய்ப் பருந்தின், வள் உகிர்ச் சேவல்**
**கிளைதரு தென்விளி கெழுமுடைப் பயீரும்" (அகநா.363)**

கொல்லுதலைச் செய்யும் வேல் கொண்டு மார்பிலே எறிந்தமையால் விழுப்புண் பட்டு இறந்து வீழ்ந்த அவர்தம் ஊனினை உண்ணுதற்கு வளைந்த வாயினையும், கூர்மையான நகத்தினையும் உடைய பருந்தின் சேவல் தன் சுற்றத்தைத் தெளிந்த குரல் கொடுத்துக் கூப்பிடும் என்பதோடு, இறந்தவரை புதைத்திருக்கும் கற்குவியலில் பருந்து அமர்ந்திருப்பதாகவும் (புறம்.3), பருந்து ஊனைத் தின்னுவதாகவும்(புறம்.62), பசுமையான ஊன் வானத்தில் கூட்டமாகப் பறக்கும் பருந்துகளைத் தடுப்பதாகவும்(புறம்.64), குளிர்காலத்தில் காணப்படும் பருந்தின் கருமையான சிறகு பற்றியும்(புறம்.150), நல்ல போர் பருந்தின் பசியைத் தீர்த்ததாகவும்(புறம்.179), பருந்துகளின் ஆரவாரம் குறித்தும்(புறம்.269), நொச்சி மாலையை ஊன் என்று எண்ணிப் பருந்து தூக்கிச் சென்றதாகவும் (புறம்.271), ஊனைத் தின்றதானால் செவிகளில் குருதி படிந்து சிவந்த செவியோடு இருக்கும் எருவைகளைக் கூட்டமாக கண்டால் கண்டோருக்கு அச்சத்தை உண்டு பண்ணும் (புறம்.373) என்ற இப்பாடல் வரிகள் பருந்தின் பண்புளை நம் கண்முன் கொண்டு வருவதாக அமைந்துள்ளன.

**பருந்தின் அறியாமை**

மக்களிடம் காணப்படும் அறியாமைப் பண்பு பருந்திடமும் காணப்படுவதை அகநானூற்றுப் பாடல் ஒன்றில்,

**"திணிந்தோன் மன்ற திணைவெங் காளை**
**கடும்பகட்டு ஒருத்த நடுங்கக் குத்தி,**
**போழ்புண் படுத்த பொரிஅரை ஓமைப்**
**பெரும்பொளிச் சேயரை நோக்கி, ஊன்செத்து,**
**கருங்கால் யாத்துப் பருந்துவந்து இருக்கும்" (அகநா.397)**

ஆண்யானை மரம் அசையும்படிக் குத்திப் பிளத்தலால் புண் உண்டாக்கிய ஓமை மரத்தின் பட்டையுரிந்த சிவந்த அடிமரத்தினை நோக்கி, அதனை ஊன் எனக் கருதி யாமரத்திலுள்ள பருந்து வந்து தங்கும் என்று புலவர்கள் கூறியிருக்கின்றனர்.

**தற்காப்பு முறை**

உயிரினங்களில் மனிதன் மனமே சிந்திக்கத் தெரிந்தவன். ஆகையினால் தனக்கு வரும் இன்னல்களிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ள தற்காப்பு நடத்தையைக் கையாளுவதைப் போன்று, குறும்பூழ் பறவையும் தனக்கு வரும் இக்கட்டான சூழ்நிலையில் இருந்து பாதுகாத்து கொள்வதை,

**"நிழல் அறு நனந்தலை, எழால் ஏறு குறித்த**
**முளி அரில் புலம்பப் போகி, முனாஅது**
**முரம்பு அடைந்திருந்த மூரி மன்றத்து,**
**அதர் பார்த்து அல்கும் ஆ கெழு சிறுகுடி**
**உறையுநர் போகிய ஓங்கு நிலை வியல் மனை**
**இறை நிழல் ஒரு சிறைப் புலம்பு அயா உயிர்க்கும்..." (அகநா.103)**

என்ற வரிகள் குறும்பூழ் பறவை, பெரிய தலையையும், நுணுகிய சிவந்த நாவையும், அள்ளித் தெளித்தது போன்று நுட்பமான பல புள்ளிகளையும் அழகாகக் கொண்டு கண்டோரால் விரும்பப்படும் தன்மையுடையதாக இருக்கும். இ∴து புல்லூறு என்னும் பிற பறவைகளை வேட்டையாடி உண்ணும் பண்புடைய கொடியப் பறவையிடமிருந்து தப்பிக்க எண்ணும். ஆதாலால் தான் வசித்து வந்த காய்ந்த புதரை தனியே விட்டு விட்டு, பக்கத்து ஊரில் வாழ்ந்தவர் விட்டுப் போன உயர்ந்த பெரிய மனையின் ஒரு பக்கத்தில் நிழலில் தங்கிப் பெருமூச்சு விட்டபடியிருக்கும் என்று கூறுகின்றன. இதே போன்று "ஒரு சிட்டுக் குருவியின் கூடு தனியாக இருந்தால் அதனைப் பாம்புகள் முதலில் வேட்டையாடும். முட்டைகள் இருக்கும் கூட்டினை ஒரு பாம்பு தாக்கினால், சுற்றியிருக்கும் மரங்களிலுள்ள

பறவைகள் எல்லாம் கூடி வெறித்தனமாக அபாய ஒலி எழுப்பும். அந்தப் பகுதியை விட்டே அப்பாம்பினை விரட்ட அணுமுறை வைத்துக் கொண்டு தொல்லை கொடுக்கும். அப்படி அவை செய்யவில்லை என்றால், ஒரு கூட்டைப் பிடித்த பாம்பு அப்பகுதியிலேயே தங்கிப் பிற கூடுகளையும் பிடிக்கப் போகும், பறவைக் கூட்டம் பெரியதாக இருந்தால், அதனைப் பருந்து தாக்கும் வாய்ப்பு குறைவு என்று அறிவியல் ஆய்வுகள் மூலம் அறியலாம். பனி உறையும் பருவநிலையில் ரென்கள் எனப்படும். சிறு பறவைகள் ஒன்றாகக் கூடிவாழும்.ஆனால்,வெம்மையான இரவுகளில் அவை தனித்தே பறக்கும்"[14] என்று பிற பறவைகளின் தற்காப்பு நடவடிக்கை கூறப்பட்டுள்ளது.

**இரையைப்பிடிக்கும் பண்பு**

தனக்கு தேவையான உணவை ஒவ்வொரு உயிரினமும் வெவ்வேறு வகையில் வேட்டையாடிக் கொள்கிறது என்பதை,

> **"நீள்இரும் பொய்கை இரைவேட்டு எழுந்த**
> **வாளை வெண்போத்து உணீஇய நாரைதன்**
> **அடிஅறி வுறுதல் அஞ்சி, பைப்பயக்**
> **கடிஇலம் புகூஉம் கள்வன் போல......." (அகநா.276)**

நீண்ட பெரிய நீர்நிலையில் வெண்ணிற வாளைப் போத்தினை இரையாக விரும்பிப் புறப்பட்ட நாரை தான் நடக்கும் ஓசையை அம்மீன் அறிந்து கொள்ளும் என அஞ்சித் தளர்ந்த நடையுடன் மெல்ல மெல்ல நடந்து செல்லும் என்பதன் மூலம் வேட்டைக்கு செல்லும் மனிதர்களின் செயல் பறவைகளிடமும் இருப்பதை இப்பாடலில் காணமுடிகிறது.

**பொருளீட்டல்**

சங்க காலத்தில் பொருளீட்டல் என்பது தலைமகனின் இல்லறக்கடமைகளில் தலையாய கடமையாகும். பொருள்வயிற் பிரிந்து செல்லுதல் என்பது பருவத்திற்கு ஏற்றாற் போன்று நடைபெறும். இப்பொருளீட்டும் முறை பறவைகளிடமும் இருந்துள்ளதை,

> **"................................இரை வேட்டு**
> **கடுஞ் சூல் வயவொடு கானல் எய்தாது,**
> **கழனி ஒழித்த கொடு வாய்ப் பேடைக்கு,**
> **முட முதிர் நாரை கடல் மீன் ஒய்யும்." (நற்.263)**

என்ற பாடலில் பெண் நாரை ஒன்று முதற்கருப்பத் துன்பத்தோடும், வளைந்த வாயையுடையதாய் கடற்கரைக்குச் செல்லாமல் மருத நிலத்து வயலிலேயே தங்கியிருக்கும். இதற்கு உடல் வளைந்த முடமுதிர் ஆண் நாரை ஒன்று இரை கொடுக்க விரும்பி வேட்டைக்கு சென்று மீன் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தது. அது போல தலைவியை வரைந்து தன்னிலம் கொண்டு வந்த தலைவன் அவளுக்கு தேவையான பொருள் திரட்டிக் கொடுப்பான் என்ற உள்ளுறை பொருள் பொதிந்துள்ளதின் மூலமாக அறியலாம். இதே போன்று,

**"கருங்கால் ஓடைக் கான்பு, இன் பெருஞ்சினைக்**
**கடியுடை நனந்தலை, ஈன்று இளைப்பட்ட,**
**கொடுவாய்ப் பேடைக்கு அல்குரை தரீஇய**
**மான்று வேட்டு எழுந்த செஞ் செவி எருவை**
**வான் தோய் சிமைய விறல்வரைக் கவா அன்,**
**துளங்கு நடை மரையா வலமம் படத் தொலைச்சி**
**ஒண் செவ் குருதி உவற்றி உண்டு அருந்துபு,**
**புலவிப் புலி துறந்த கலவுக் கழி கடு முடை,**
**கொள்ளை மாந்தரின் - ஆனது கவரும்" (அகம்.3)**

என்று ஓமை மரத்தின் இனிய பெருங்கிளையின் அகன்ற இடத்தில் ஈன்று காவற்பட்டு இருக்கும் வளைந்த வாயினையுடைய எருவைப் பேடைக்கு காவலிருக்கும் சிவந்த செவியை உடைய எருவைச் சேவல் தன் பேடைக்கு தேவையான இரையைக் கொண்டு வரும் பொருட்டு படையைப் பிரிந்து இரைதேடி எழுந்து சென்று புலியால் தாக்கபட்டு இறந்து கிடக்கும் மரையா என்னும் ஒருவகை மானின் குருதியை குடித்து, விட்டுச் சென்ற முடைநாறும் புலால் உணவை கொள்ளையிடும் கள்வரைப் போன்று விடாது கவர்ந்து கொண்டு தனது இருப்பிடம் செல்லும் என்பதன் மூலம் எருவையின் பொருளீட்டும் திறம் வெளிப்படுகிறது. மேலும் இங்கு எருவை என்பது தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் ஒருவகை பருந்தினத்தின் பண்பாக அகநானூற்றில்,

**"முடை நசை இருக்கைப் பெடை முகம் நோக்கி**
**ஊன் பதித்தன்ன வெருவரு செஞ் செவி,**
**எருவைச் சேவல் கரிபு சிறை தீய" (அகநா.51)**

என்ற பாடலில் யாமரத்தின் கிளையின் அமர்ந்து கொண்டு ஊனாகிய இரையை விரும்பி இருக்கும் பெடையின் முகத்தை நோக்கிய அச்சத்தைத் தரும் சிவந்த காதுகளை உடைய ஆண் பருந்து தன் சிறகுகள் கரிந்து தீய்ந்து போகுமாறு மூங்கில்கள் நிறைந்த கானகத்தில் இரை தேடி வீற்றிருக்கும் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் ஐங்குறுநூற்றில்,

**"உலறுதலைப் பருந்தின் உளிவாய்ப் பேடை**
**அலறுதலை ஓமை அங்கவட்டு ஏறிப்**
**புலம்பு கொள விளிக்கும் நிலம் காய் கானத்து" (ஐங்.321)**

என்று உலர்ந்த தலையையுடைய பருந்தின் உளிபோல் கூர்மையான வாயையுடைய பெண்பருந்து இலை இல்லாமல் உலர்ந்து விரிந்து தோன்றும் ஓமை என்ற மரத்தின் அழகிய கவைக்கிளையில் இருந்து கொண்டு இரைதேடி வேறு இடத்திற்கு சென்றிருக்கும் தன் சேவலை துன்பம் அடையும் வகையில் அழைத்து இசைக்கும் என்பதன் மூலம் தலைவனைப் போல பறவைகளிலும் ஆண் பறவை பொருளீட்ட பிற பகுதிகளுக்கு சென்றிருப்பதாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது.

இவ்வாறு பறவைகள் மனிதன் வாழ்வதற்கு தேவையான பல உதவிகளை மறைமுகமாக செய்வதை "வரகுக் கோழிகள், வல்லூறுகள், வால் காக்கைகள், கழுகுகள், ஆந்தைகள் ஆகியவற்றின் நன்மைகளோடு வாத்துக்கள், நாரைகள், மீன்கொத்திகள், கொக்குகள், நீர்க் காக்கைகள், நீர்க்கோழிகள் மற்றும் உள்ளான் போன்ற பறவையினங்கள் தேவையற்ற மிதவை உயிரிகளை உணவாக்கி அழித்து அளவற்ற நன்மைகளைச் செய்கின்றன"[15] என்று ச.முகமது அலி தனது வட்டமிடும் கழுகு என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

**"கிளி மரீ இய வியன் புனத்து**
**மரன்அணி பெருங்குரல் அனையன்"(புறம்.138)**

கிளி தங்கியிருந்து நீங்கிய மரப்பொந்தில் வைத்த தானியம் போல என்று கூறப்பட்டுள்ள இப்பாடல் வரியின் மூலம் கிளிகள் தனக்கு தேவையான உணவைச் சேமித்து வைக்கும் பண்புடையதாக இருப்பதை இப்பாடல் மூலமாக அறியமுடிகிறது.

**கூடு அமைத்தல்**

உயிரினங்களின் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதது வாழிடமாகும். இவ்வாழிடத்தைப் பறவைகள் தங்களுக்கு ஏற்றாற் போன்று கூடுகளை அமைத்து

கொண்டு ஆபத்துக்களிலிருந்து தங்களைக்காத்துக் கொள்கின்றன. அவ்வகையில் சிட்டுக்குருவி என்று தற்போது வழங்கப்படும் பறவை "தமிழில் ஊர்க்குருவி, வீட்டுக்குருவி, அடைக்கலங்குருவி என்பது போன்ற வேறு பெயர்கள் உண்டு. House Sparrow என்று ஆங்கிலத்தில் Passer domestics என்ற அறிவியல் பெயராலும் இது அழைக்கப்படுகிறது. இந்தப் பெயர்களில் இருந்தே இவை ஊர்களை அண்டி வாழப் பழகிக் கொண்டவை என்பதை உணரலாம். மனிதர்களிடம் அடைக்கலம் தேடி வந்ததால், சிட்டுக்குருவிகளுக்கு தென் மாவட்டங்களில் அடைக்கலங்குருவி என்ற பெயர் வழங்கப்படுகிறது"[16]. இதன் கூடு அமைக்கும் முறையை,

> **"உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்**
> **தேம் பொதிக் கொண்ட தீம் கழைக் கரும்பின்**
> **நுாறா வெண் பூக் கொழுதும்…………..." (குறுந்.85)**

மனையுறைக் குருவிகள் துள்ளித் துள்ளி நடப்பது அதன் இயல்பு அதனை, உள்ளூரில் வாழும் துள்ளல் நடையை உடைய ஆண் குருவி கருவுற்று கருப்பம் முதிர்ந்து இருக்கும் பெண் குருவிக்கு கரு உயிர்த்தலுக்குரிய இடத்தை (கூடு) அமைப்பதற்காக, கரும்பின் மணம் வீசாத வெள்ளிய பூவைக் கோதி எடுத்து கொண்டு வரும் என்று கூறியிருப்பதைக் காணும் போது இக்குருவிகள் கூடு கட்டுவதற்கு கரும்பின் பூவையும் பயன்படுத்துகிறது என்பதோடு, அன்றில் பறவைகள்,

> **"முழவு முதல் அரைய தடவு நிலைப் பெண்ணைக்**
> **அன்றிற் காமர் கடுஞ்சூல்**
> **வயவுப் பெடை அகவும் பானாட் கங்குல்"- குறிஞ்சி (கலித்.301)**

பனைமரத்தின் ஓலையில் சிறிய சுள்ளிகளால் கட்டிய கூட்டில் கரிய காலினை உடைய அன்றில் பறவை. முதற்சூலினால் ஆன நோயை உடைய பெண் பறவை தன் விருப்பமுடைய துணையை நடு இரவில் தேடி(நாடி) அழைக்கும் என்று கலித்தொகைப் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

**புள்ளினங்களிடம் உள்ள நுண்ணி சிறப்புகள்**

நம்மில் தற்போது தோன்றி வளர்ந்து வரும் பறவை உற்றுநோக்கல் முறை சங்க காலப் புலவர்களிடம் இருந்ததை நம்மிடம் காணக்கூடிய நுண்ணிய செயல்களைக் கூட பறவைகளிடமும் இருந்திருப்பதாக தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். அத்துடன்,

- ✓ மரம் ஏறும் பறவைகள் **கிளி, குயில், மரங்கொத்தி**
- ✓ நடக்கும் பறவைகள் **வானம்பாடி, காடை, கவுதாரி**
- ✓ நீரில் நடக்கும் பறவைகள் **கொக்கு, நாரை, கருநாரை**
- ✓ நீந்தும் பறவைகள் **வாத்து, அன்னம்**

என்ற செய்திகள் கள ஆய்வின் போது தகவலாளரிடமிருந்து பெறப்பட்ட செய்தியாகும்.

**புறாவின் சிறப்பு**

ஒற்றுமையோடு கூட்டமாக வசித்திடும் புறா மித வெப்பம் மற்றும் குளிர்ந்த காலங்களில் இனப்பெருக்கம் மேற்கொள்கிறது. மார்ச்-ஜீலை, ஆகஸ்ட்-அக்டோபர், அக்டோபர்-நவம்பர் போன்ற மாதங்களில் இனப்பெருக்க முறைக் காணப்படுகிறது. ஒரு இணை ஜோடி ஒரு வருடத்திற்கு 1 முதல் 9 முறை குஞ்சுப் பொறிக்கிறது. இத்தகைய இனப்பெருக்க முறை பகலின் நீளத்தையும், வெப்பத்தின் அளவையும் கொண்டு நிர்ணயிக்கப்படுவதோடு புறாவின் வயது, அனுபவம், பெண் புறாவின் உடல் நிலை, கூட்டின் அமைப்பு போன்ற சூழல்கள் சரியான முறையில் இருந்தால் மட்டுமே ஏற்படுகிறது. இவை 1 முதல் 2 முட்டைகளை இடுகிறது. 17 முதல் 19 நாட்கள் வரை ஆண், பெண் இரண்டும் இரவு-பகல் என்று நேரத்தைப் பகிர்ந்து கொண்டு முட்டையின் மேல் அமர்ந்து அடைகாக்கிறது. பின்பு

> **“பைம் புறப் புறவின் செங்காற் சேவல்....**
> **முளரி அம் குடம்பை ஈறு இளைப்பட்ட**
> **உயவு நடைப் பேடை உணீ இய**
> **முனை கவர் முது பாழ் உகு நெற் பெறூஉம்.. ”** **(நற்.384)**

என்று ஈன்று இளைப்பட்டிருக்கும் பெண் புறாவிற்கு ஆண் புறா முதிர்ந்த பாழ் நிலத்தில் சிதறிக் கிடக்கும் நெல்லைக் கொணர்ந்து கொடுக்கும் என நற்றினைப் பாடல் குறிப்பிட்டுள்ளது. ஆனால் இச் சமயத்தில் புறாக்களின் தொண்டைக் குழியில் (crop) சுரக்கும் **‘ஜீரணமாக்கும் என்ஸைம்’** புறாவின் பால் என்று கூறப்படுகிறது. குஞ்சுகள் 7 லிருந்து 27 நாட்களில் கூட்டை விட்டு வெளியே வரும். குஞ்சுகள் பொறித்த 3 வாரம் வரை பெண் புறா குஞ்சுகளுக்கு பால் கொடுப்பதால் விரைவில் ஜீரணமாகாத எந்த தானியங்களையும் உண்பதில்லை என்ற செய்திகளும் காணப்படுகிறது.

**பேசும் திறன்**

பறவைகளில் மனிதனைப் போன்று பேசும் திறன் வாய்ந்தது கிளியாகும். கிளி எவ்வாறு பேசுகிறது என்பதை, "கிளியின் நாக்கு மனிதனின் நாக்கு போலவே தடித்து இருக்கும். இந்த நாக்கு தான் கிளிகளுக்கு பேசும் சக்தியைக் கொடுக்கிறது. மனிதன் பேசும் மொழிக்கும் கிளி பேசும் மொழிக்கும் இடையே உள்ள ஒற்றுமை தாங்கள் எழுப்பும் சத்தத்தைப் போலவே மனிதர்களின் பேச்சும் இருப்பதால் அப்படியே நாம் சொல்வதை அவை திருப்பிச் சொல்லிவிடுகின்றன"[17] என்று கிள்ளை மொழிக்கு விஜயவர்மன் அவர்கள் விளக்கம் கொடுத்துள்ளார். இதற்கு சான்றாக பரிபாடலில் உள்ள பாடல் வரி ஒன்று,

**"இருவர் வான் கிளி ஏற்பில் மழலை" (பரிபா.9)**

என்று வள்ளி, தேவசேனை ஆகிய இருவரின் உயர்ந்த கிளிகளும் தமக்குள் பகைத்துக் கொண்டு ஒன்றை ஒன்று மழலைச் சொல்லால் வையத் தொடங்கின என்ற குறிப்பைப் பார்க்கும் போது கிளிகள் பேசும் தன்மை பெற்று இருந்து வந்துள்ளதை அறியமுடிகிறது. மேலும்,

**"கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்**
**அளியும் அன்பும் சாயலும் இயல்பும்**
**முன்நாள் போலாள்........................" (அகநா.49)**

தலைவி கள்ளத்தனம் இல்லாத இளம் வயதில் கிளிக்கு மழலைப் பேசக் கற்றுக் கொடுத்தல், பந்தாடுதல், கழங்காடுதல் போன்றவற்றைச் செய்த தலைவி இன்று மாறுபட்டாள் என்று கூறுவதன் மூலம் கிளிகள் மனிதர்களின் மொழியைக் கற்றுக் கொண்டு திரும்ப பேச வல்லதாக இருப்பதாகவும் இப்பாடல் கூறுகிறது. இதே போன்று,

**"விளிகுவைகொல்லோ நீயே கிளிஎனச்**
**சிறிய மிழற்றும் செவ்வாய்..............." (அகநா.126)**
**"கிளி புரை கிளவியாய்" (கலித்.13)**
**"கிளி புரை கிளவியாய்" (கலித்.20)**

என்று தலைவி பேசும் சொற்கள் சிவந்த வாயினையுடையக் கிளிகள் சொல்லும் சில மென் சொற்களைப் போல் இருக்கும் என்று தலைவியின் குரல் வருணிக்கப்பட்டுள்ளதாக கூறப்பட்ட இக்குறிப்பின் வழியாக கிளிகள் மனிதர்களின்

மொழியைப் பயின்று பேசினாலும் சில சொற்களை மட்டும் பேசும் என்ற செய்தி வெளிப்படுகிறது. மேலும் கிளி போன்று பேசும் சொல்லை உடையவளாய் தலைவி என்றும், கிளியின் சொல் போன்று இனிய சொல்லை உடையவள் என்றும் இப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. மேலும்,

**"சொல்லத் தளரும் கிளியும் அன்று" (கலித்.55)**

சொல் சொல்லத் தளரும் ஆனாலும் கிளியும் அல்ல என்று தலைவியின் உறுப்புக்களைப் பொய்யாகத் தலைவன் பாராட்டியுள்ளான் என்பதன் மூலமாக கிளி நாம் சொல்வதைத் திருப்பிச் சொல்லும் தன்மை உடையதாக இருப்பதையும் கிளிக்கு எவ்வாறு பேசும் தன்மை வந்துள்ளது என்பது ஆராய்ச்சிக்குரியதாக உள்ளது.

**நடனமாடும் மயில்**

நடனம் என்பது தாளத்துக்கும் இசைக்கும் ஏற்றாற் போல உடலை அசைத்து நிகழ்த்தப்படும் ஒரு கலை வடிவமாகவும், மனிதா் தங்களது எண்ணங்களை மற்றவா்களுடன் பரிமாறிக் கொள்வதற்கான ஒரு தொடா்புமுறையாகவும் நடத்தைக் கருதுவதுண்டு. அத்தகைய நடன முறை,

**"தொகுமுகை விரிந்த முடக்காற் பிடவின்**
**வைஉா் வால்எயிற்று, ஒள்நுதல், மகளிா்**
**கைமாண் தோணி கடுப்ப, பையென,**
**மயிலினம் பயிலும் மரும்பயில் கானம்" (அகநா.344)**

கூரிய அழகிய வலிய பற்களையும் ஒளி பொருந்திய நெற்றியினையும் உடைய பெண்கள் தோளசைத்து ஆடும் 'தோளி' என்னும் கூத்தைப் போன்று, அம்மரங்களில் மயில் கூட்டம் அசைந்தாடித் திரியும் என்றும் அகநானூற்றுப் பாடலில் கூறப்பட்டுள்ளது போன்று,

**"பாடு இமிழ் அருவிப் பாறை மருங்கின்**
**ஆடுமயில் முன்னது ஆக, கோடியா்**
**விழவு கொள் மூதூா் பின்றை" (அகநா.352)**
**"மென் சீா் மயில் இயலவா்"**
**"சிகை மயிலாய்த் தோகை விரித்து ஆடுநரும்" (பரிபா.9)**

இப்பாடல்களில் கூத்தர் விழாவெடுக்கும் முதிய ஊரில் ஆடுகின்ற விறலியின் பின்னால் முடிவினைத் தழுவி நிற்கும் முடிவோன் போல, பாடிவரும் அருவியையுடைய பாறையிடத்தே ஆடி வரும் மயில் எனவும், வள்ளியின் மயில் போன்ற தோழியர் மென்மையான இயல்பை உடையவர்கள் என்றும், தேவ சேனையின் தோழியர் உச்சிச் சூட்டை உடைய மயில்களாய் மாறி ஆடினர் என்றும் கூறப்பட்டுள்ளன. மேலும்,

**"நீலத்து அன்ன நிறம் கிளர் எருத்தின்**
**காமர் பீலி ஆய்மயில் தோகை**
**இன்தீம் குரல துவன்றி, மென்சீர்**
**ஆடுதகை எழில்நலம் கடுப்பக் கூடி" (அகநா.358)**

**"தினைமேய் யானை இனன் இறந்துஓட,**
**கல்உயர் கழுதில் சேணோன் எறிந்த**
**வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென,**
**மறப்புலி உரற, வாரணம் கதற,**
**நனவுறு கட்சியின் நல்மயில் ஆல" (அகநா.392)**

நீலமணி போன்ற அழகிய நிறம் விளங்கும் கழுத்தினையும், பீலியாகிய சிறந்த தோகையினையும் உடைய மயில்கள் இனிய குரலை உடையவனாய் மெல்லிய தாளத்திற்கு ஏற்ப ஆடும் தோழியரோடு கூடி ஆடுதற்கு மயில்கள் கூடி நின்று ஆடுதல் என்றும், நள்ளிரவின்கண் திணைப்பயிரை மேய்கின்ற யானைக் கூட்டம் அஞ்சி நிலைகெட்டு ஓடும்படி மலையிடத்தே உயர்ந்த பரணிலிருந்து குறவன் கவண் கல்லை வீசியெறிந்தான் அக்கல்லின் கடிய ஓசையைக் கேட்டு மறப்புலி முழங்கியது, யானை கதறியது, அதனை இடியோசை எனக் கருதி மயில் ஆடியதாவும் கூறப்பட்டுள்ளதைக் காணும் போது மனிதர்களைப் போலவே பறவைகளிடமும் இசைக்கும் தாளத்திற்கும் நடனமாடும் பண்பைக் கொண்டுள்ளது என்பதையும் இப்பாடல் வரிகளால் அறியலாம்.

இவ்வாறு மயில் நடனமாடுவதை "ஆண் மயில் பல துணைகளை நாடும் பழக்கமுடையது. இனப் பெருக்கக் காலத்தில் ஆண் மயில் தோகை விரித்தாடும். ஆப்போது அதன் செம்பழுப்பு இறக்கைகள் உடலின் பக்க வாட்டில் தொங்கக் காணலாம். பெண் மயிலைப் பார்த்தபடி பக்க வாட்டிலும் முன்பும் பின்னும் அடியெடுத்து வைத்து நகரும். தோகையைச் சிலிர்க்கும் போது 'ஜ ஜ ஜ' என்ற சப்தம் வரும். பெண் ஆணின் ஆட்டத்திலோ அழகிலோ ஈடுபாடு கொள்வதாகக் காட்டிக்

கொள்ளாது. சில சமயங்களில் பெண்ணும் ஆணைப் போல ஆட முற்படும். ஒரு ஆண் மயில் அது ஆடும் சுற்று வட்டாரத்தில் இன்னொரு ஆண் புக அனுமதிக்காது”[18] என்று க.ரத்னம் தனது தென்னிந்தியப் பறவைகள் என்ற புத்தகத்தில் விளக்கியுள்ளார்.

**பிரிவைத் தாங்கிக் கொள்ளாமை**

உலக வழக்கில் பிரிவு என்பது மிகுந்த துன்பம் தரும் செயலாகும். இஃது ஒத்த அன்புடையவர்களிடத்து காணப்படும் ஒரு நிகழ்வாகும். பிரிவு உயிர்களை ஊன் உறக்கமின்றி ஒரு செயலற்ற நிலைக்கு ஆட்படுத்திவிடும் என்னும் நிலை பறவைகளிடத்தும் உண்டு என்பதை,

**“................................... செந் தார்க்**
**கிள்ளையும் தீம் பால் உண்ணா............” (அகநா.369)**

தலைவியை தலைவன் உடன்போக்கில் அழைத்து சென்ற பின்பு, சிவந்த கோடுகளையுடைய கிளிகளைக் கையில் ஏந்தி தலைவி அவற்றைப் பாராட்டுவதைப் போன்று பாராட்டினாலும், அக்கிளிகளும் இனிய பாலினை உண்ண மறுத்ததாக கூறும் இப்பாடல் வரிகளின் மூலம் நம்மைப் போலவே கிளிகள் தன்னை வளர்த்தவர் பிரிந்து சென்றால் உணவை வெறுத்து உண்ணாமல் இருப்பதை அறியமுடிகிறது. மேலும்,

**“விரிந்து ஆனா மலராயின், விளித்து ஆலும் குயிலாயின்**
**பிரிந்து உள்ளார் அவராயின்.......................” (கலித்.28)**
**“என ஆங்கு**
**புரிந்து நீ எள்ளும் குயிலையும்.......................” (கலித்.33)**

என்று இப்பாடல்களில் குயில்கள் தம் பேடையை அழைக்கும் இளவேனிற் காலத்தில் தலைவர் நம்மை நினைக்கவில்லை என்று தலைவி வருந்துவதாகவும், தலைவனைப் பிரிந்து வாடும் தலைவிக்கு வருத்தம் உண்டாகும் படி குயில்கள் கூவும் இவ்வளவு ஆன பின்னும் தலைவர் வரவு குறித்து தூது அனுப்பாமல் உள்ளார் என்று தலைவி புலம்பியுள்ளதையும், இவ்வாறு குயில்கள் கூவுவது தமது இணையின் பிரிவைதாங்கி கொள்ள இயலாமை என்பதையும் அறிந்து கொள்ளமுடிகிறது. இதே போன்று,

**“நீருறை கோழி நீலச்சேவல்**
**கூருகிர்ப்பேடை வயா அம் ஊர” (ஐங்.51)**

நீரில் வாழும் நீலநிறத்தையுடைய சேவற் கோழியைக் கூர்மையான நகங்களை உடைய அதன் பெட்டை எண்ணி வேட்கை மிகுந்து இருக்கும் அது போல தலைவி தலைவனின் மார்பை நினைத்து வேட்கை கொண்டிருப்பதாகக் இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

**உயிரைப் போக்கி உண்ணமை**

மனிதர்கள் விலங்குகள் முதலியவற்றின் உயிரையும், விலங்கு போன்றவை பிறவற்றின் உயிரையும் போக்கி உண்ணும் தன்மையைக் கொண்டதாகவே படைக்கப்பட்டுள்ளது. ஆனால் சில பறவையினம்,

**"கரை கவர் கொடுங்கழி, கண் கவர் புள்ளினம்**
**இரை உயிர் செகுத்து உண்ணாத் துறைவனை யாம் பாரும்"**
**(கலித்.131)**

கழியிடத்தில் பார்த்தவர்கள் கண்ணை வாங்கிக் கொள்ளும் அழகை உடைய பறவைக் கூட்டம் அலை அடிப்பதால் இறந்து போன புலால் நாற்றத்தையுடைய மீனை உண்ணுமே தவிர மனிதர்களையும் பிற விலங்குகளையும் போன்று ஒன்றின் உயிரைப் போக்கி உண்ணாது என்று கூறப்பட்டுள்ளது.

**கொட்டாவி விடுதல்**

தன்னியல்பாக வாயைப் பெரிதாகத் திறந்து மூச்சுக்காற்றை வாய் வழியாகவும், மூக்கு வழியாகவும் உள்ளே இழுப்பதும், அதே நேரத்தில் செவிப்பறை விரிவடைவதும், நுரையீரலில் இருந்து வரும் காற்றை பெருமூச்சாக வெளிவிடும் செயல் கொட்டாவியாகும். இப்பண்பு,

**"சிறு வெண் காக்கை ஆவித்தன்ன**
**வேளிய விரியும் துறைவ............" (நற்.345)**

என்ற பாடலில் ஆம்பல் மலரின் அரும்பு சிறிய வெண்னிய நீர்க்காக்கை **கொட்டாளி (கொட்டாவி)** விட்டதாக குறிப்பு இடம்பெற்றுள்ளது.

**பறவைகளின் உறக்கம்**

இறைவனது படைப்பில் சிறந்ததாகக் கருதப்படும் உயிரினங்களால் உணவு இல்லாமல் சில நாட்கள் உயிர் வாழும். ஆனால் உறக்கம் இல்லாமல் வாழ்வது மிக மிக கடினமாகும். மனிதன் தன் அன்றாட செயல்களைச் செய்து முடிக்க

முழுமையான 8 மணி நேர உறக்கம் என்பது இன்றியமையாத இ∴து பறவைகளிடமும் இருப்பதை,

**"சிதர் நனை முனை இய சிதர் கால் வாரணம்" (நற்.297)**
**"பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை**
**தேம்கொள் மருதின் பூஞ்சினை முனையின்**
**காமரு காஞ்சித் துஞ்சும்............" (புறம்.351)**

மலைத்துளியால் நனைந்த மலரை வெறுத்து மெல்லிய கால்களையுடைய கோழி முதிர்ந்த மிளகுக்கொடி ஒன்றோடு ஒன்று பின்னி இருப்பதில் துயிலும் என்றும், தெளிந்த நீர் நிலையில் மீனை மேயும் செவ்வரிநாரைகள் தேன் பொருந்திய மருத மரத்தின் பூக்கள் நிரம்பிய கிளைகளில் தங்குவதை வெறுக்குமாயின், அங்கிருந்து சென்று அழகிய காஞ்சி மரத்தில் உறங்குவதாகவும் புலவர்கள் கூறியிருப்பதை இப்பாடல்களில் காணமுடிகிறது. மேலும்,

**"..................வாங்கு கதிர்ச்**
**செந்நெல் அம் செறுவின் அன்னம் துஞ்சும்" (நற்.73)**

இப்பாடலில் செந்நெற் கதிர்களையுடைய வயலில் அன்னம் உறங்கும். என்று கூறியிருப்பது தலைவிக்கு தலைவன் மார்பில் தூங்கும் வாய்ப்பு இல்லையே என்பதை உணர்த்தவே இவ்வாறு கூறப்பட்டுள்ளது என்பதை அறியலாம். இவ்வாறு நாரையின் உறக்கத்தை,

**"ஈன்ற மரத்தின் இளந் தளிர் வருட**
**வார் குருகு உறங்கும் நீர் சூழ் வள வயல்." (அகநா.306)**

என்று மீனை உண்ட நாரை ஈங்கையின் பஞ்சு போன்ற புதிய பூவும், மாமரத்தின் இளந்தளிரும் தடவுவதால் இனிதாக துயில் கொள்ளும் என்று அகநானூற்றுப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

**கனவு காணுதல்**

ஆள்மனதில் பதிந்து கிடக்கும் எண்ணங்களும், நிறைவேறாத ஆசைகளும் கனவாக வரும். இத்தகைய கனவு கடற்காக்கைக்கு வந்திருப்பதை,

**"கைதைஅம் படுசினை எவ்வமொடு**
**கடற்சிறு காக்கை காமர் பெடையொடு**

**கோட்டுமீன் வழங்கும் வேட்டம்மடி பரப்பின்**

**வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து.” (அகநா.170)**

தாழை மரத்தின் தாழ்ந்த கிளையில் தன் பெடையுடன் வருத்தமுடன் அமர்ந்திருக்கும் சிறிய கடற்காக்கை பரதவர் மீன் வேட்டையாடலைச் செய்யாது சோம்பியிருக்கும் காரணத்தால் சுறாமீன் திரியும் கடற்பரப்பில் இறாமீனைப் பிடித்துத் தின்பதாய்க் கனவு காணும் என்று அகநானூற்று பாடல் குறிப்பிடுகிறது.

**குளிரை வெறுத்தல்**

சிறு வெண் காக்கையினது செவ்விய வாயை உடைய பெரிய தொகுதிகளின் புறத்தை நீர்த்துளிகள் நனைக்க அக்குளிரை வெறுத்து மலர்களை உடைய சோலையைச் சென்றடையும் என்பதை,

**“சிறு வெண் காக்கைச் செவ் வாய்ப் பெருந்தோடு**

**இரு நீர்ச் சேர்ப்ப நீப்பின்.........................” (குறுந்.349)**

என்ற குறிப்பை இப்பாடல் வரியின் மூலம் அறியமுடிகிறது. மேலும் குறுந்தொகைப் பாடலில்,

**“சிறு வெண் காக்கைச் செவ் வாய்ப் பெருந்தோடு**

**இரு நீர்ச் சேர்ப்ப நீப்பின்.........................” (குறுந்.334)**

சிறு வெண் காக்கையினது செவ்விய வாயை உடைய பெரிய தொகுதிகளின் புறத்தை நீர்த்துளிகள் நனைக்க அக்குளிரை வெறுத்து மலர்களை உடைய சோலையைச் சென்றடையும் என்ற குறிப்பைக் காணமுடிகிறது.

**பறவையின் வெட்கம்**

பறவைகளின் காவலான ஆஅய் எயினன் ஞிமிலியுடன் ஏற்பட்ட போரில் மாண்டான் அப்போது அவன் மீது வெயில் படாதபடி பறவைகள் அனைத்தும் வானில் கூடி அவனுக்கு நிழலை உண்டாக்கினர். அச்சமயம் பகற் பொழுதில் கண் தெரியாத கூகை அவனுக்கு நிழல் கொடுக்க வர இயலாதது குறித்து நாணியதாக,

**“கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்**

**நெடுந்தேர் ஞிமிலியொடு பொருது, களம்பட்டென**

**காணிய செல்லாக் கூகை நாணிக்**

**கடும்பகல் வழங்கா தாஅங்கு” (அகநா.148)**

என்று இப்பாடலில் புலவர்கள் கூகையின் எண்ணத்தை கற்பனையோடு உரைத்துள்ளனர்.

**பண்டமாற்று முறை செயல்கள்**

பறவைகள் ஒரே நிலத்தில் வாழ்பவையாக இருப்பினும் உணவிற்காக இடம் விட்டு இடம் மாறி செல்வதை முல்லை நிலக் காட்டுக் கோழிகள் மருத நிலத்திற்கு சென்று நெற்கதிரைக் கொத்தித் தின்னும், மருத நிலத்து மனைக் கோழிகள் குறிஞ்சி நிலத் தினையை உண்ணும், நெய்தல் கழியில் இருக்கும் நாரைகள் குறிஞ்சி மலைக்குச் சென்று தங்கி இளைப்பாறும் போன்ற செய்திகள்,

> **“ஆர உண்டு பேர் அஞர் போக்கிச்**
> **செருக்கொடு நின்ற காலை மற்று அவன்” (பொருநர்.88-89)**

இங்கு காக்கை, மயில்கள், நாரைகள், பேராந்தை, காட்டுக் கோழி, மனைக் கோழி போன்ற பறவைகள் குறித்த செய்திகள் சோழ நாட்டின் வளத்துடன் சேர்த்து உரைக்கப்பட்டுள்ளது.

**கூடிவாழும் தன்மை**

கடலின் கரையிலிருந்து வானிலே விரைந்தெழுந்து வரிசையாகப் பறக்கும் வெண்குருகுகள் வானத்தில் வேகமாக வீசியெறியப்பட்ட வெண்ணிறக் கூதளி என்னும் மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை போல் தோற்றம் ஒத்திருந்ததாகவும், இவ்வாறு சிறகுகளை வளைத்து வரிசையாகப் பறந்து வந்து ஆரவாரத்துடன் பரவலாக வந்து அமருவதை,

> **“விசும்பு விசைத்துஎறிந்த கூதளங் கோதையின்**
> **பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ**
> **ஆர்கலி வளவயின் போதொடு பரப்ப.........” (அகநா.273)**

என்ற பாடலின் மூலம் குருகுகளின் கூடிவாழும் தன்மையைப் புலவர்கள் வெளிப்படுத்தியுள்ளனர்.

**சங்க இலக்கியத்தில் வலசைப் பற்றிய செய்தி**

சங்க கால மக்களின் வாழ்க்கைக் குறித்து ஒப்புமைக் கூற வேண்டுமாயின் அக்காலகட்டத்தில் வாழ்ந்த அ∴றிணை உயிரினங்களே முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளது. தலைவன் தலைவியின் களவு காலத்தில் அவர்களின் உணர்வுகளுக்கு பறவைகளையும், விலங்குகளையும் உவமைப் படுத்திள்ளனர். இவ்வுமைகள் வாயிலாக விலங்குகளும், பறவைகளும் மானுடச் சமூகத்தில்

அதிகமாக வாழ்ந்துள்ளதையும், அவற்றைப் புலவர்கள் உவமைக்காகப் பயன்படுத்தும் போது தன்னருகில் தனக்கு அதிகமாக பழக்கத்தில் உள்ளவற்றையே அதிகமாக கையாண்டுள்ளனர். அவற்றோடு பருவகாலங்களில் புலம்பெயர்ந்து வரும் புள்ளினம் பற்றிய செய்திகளையும் கூறியுள்ளனர். ஆனால் “பறவைகள் இடம் பெயர்வதன் நோக்கம் குளிரிலிருந்து தப்பிப்பதற்காக மட்டுமன்று. அநேக பறவைகள் தாம் வாழுமிடத்தில் உணவு வசதி குறையுமானால் இடம் பெயர்ந்து விடுகின்றன. குளிர்ப் பிரதேசப் பறவைகள் மட்டும் வலசை போகின்றன என்று சொல்லமுடியாது”[19].

**தலைமைப்பண்பு**

வலசை பறவைகளை சங்க இலக்கியங்களில் ‘வம்புப்புள்’ என்று குறிப்பிடுகின்றன. (வம்பு என்றால் நிலையின்மையைக் குறிக்கும், புள் பறவையைக் குறிக்கும்) சங்க இலக்கியத்தில்(குறும் -236),

**“புன்னைஅம் கானல் புறந்தை முன்துறை**
**வம்ப நாரைஇனன் ஒலித்தன்ன.......” (அகநா.100)**

என்ற பாடலில் வலசைப் பறவைகள் பற்றிய குறிப்புள்ளது. வலசை செல்லும் பறவைகள் “நமக்குப் பழக்கமான ‘V’ வடிவத்தில் வாத்துக்கள் பறக்கும். ஒரு தனி வாத்து தலைமை தாங்கி முன்னே பறக்கும். ஒவ்வொரு பறவையும் தனக்கு முன்னால் பறக்கும் பறவையின் இறக்கைகளிலிருந்து வெளியாகும் காற்றினைப் பயன்படுத்தித் தன் இயக்கங்களைக் கட்டுப்படுத்தும். இவ்வாறு அந்த அணிவகுப்பு முழுமையும் காற்றோட்டம் பரவலாக்கப்படுகிறது. இதனால் பறவைகள் பறக்கச் செலவிடும் சக்தி மிச்சமாகிறது. ‘V’ – அமைப்பின் முனையில் பறப்பதற்குப் பறவைகள் முறை வைத்துக் கொண்டு மாறி மாறித் தலைமை ஏற்கின்றன. இதனால் ஒவ்வொரு பறவையும் தலைவனாகவும் வழிகாட்டிச் செல்கிறது, தொண்டனாகவும் தொடர்கிறது”. இவ்வாறு பறக்கும் போது செலவிடும் சக்தி “தனித்தனியாகப் பறக்கும் பறவைகள் செலவழிக்கும் அதே அளவு சக்தியைப் பயன்படுத்தி அணிவகுப்பில் செல்லும் பறவைகள் 71 விழுக்காடு அதிக தூரம் பறக்கின்றன என்று கணக்கிடப்பட்டுள்ளது”[20]. இதே தத்துவத்தைத் தான் அணி வகுத்துப் பறக்கும் போர் விமானங்களும் பயன்படுத்துகின்றன.

தேவமகளிர் வாழுகின்றன இமயமலையின் உச்சிகரங்களில் அவர்கள் விளையாடுவதற்கு, அன்னப் பறவைகளின் குஞ்சுகளை வளர்க்கிறார்கள். வளராத

அன்னப் பறவைகளுக்கு ஊட்டுவதற்காகத் தாய் அன்னங்கள் கடல்பகுதிகளில் இருந்து இரை எடுத்துக் கொண்டு தினமும் இமயமலை நோக்கிச் செல்வதை,

**“.......விலங்கு மென் தூவிச் செங்கால் அன்னம்**
**வளராப் பார்ப்பிற்கு அல்கு இரை ஒய்யும்.......” (நற்.356)**

என்று சிவந்த கால்களையும் இரண்டு மெல்லிய இறகுகளை உடைய அன்னப்பறவை இரை தேடி இமய மலையின் வானர மகளிர்க்கு விருப்பமான சிறகு வளராத தனது இளம் பறவைக்கு தான் சேமித்த இரைகளைக் கொணர்ந்து கொடுக்கும் செயலால் அன்னம் வருந்துவதாக கூறியிருக்கும் பரணரின் இப்பாடல் பறவைகளின் பாசத்தை விளக்குவதோடு அன்னப் பறவைகளின் குஞ்சுகள் இமயமலையில் இருப்பதாக கூறப்பட்டிருப்பதனைப் பார்க்கும் போது, இவற்றின் இருப்பிடம் இமயமலைப் பகுதியோ? என்ற ஐயத்தை உண்டு பண்ணுவதால், இவையும் வலசைப் பறவைகளாக இருக்கலாம் என்று ஊகிக்கக் கூடியதாக உள்ளது. மேலும்,

**“..................................உயர்சிமைப்**
**பொதும்பில், புன்னைச் சினைசேர்பு இருந்த**
**வம்ப நாரை இரிய..............................” (அகநா.190)**

உயர்ந்த உச்சியை உடைய கடற்கரைச் சோலையில் இருக்கும் அன்னை மரத்தின் கிளையில் தங்கியிருந்த புதிய நாரை பறந்தோடுமாறு தலைவனின் தேர் கடலோரமாக வந்ததாக கூறியுள்ளதிலிருந்து இப்பாடலில் வலசைப் பறவை பற்றிய குறிப்பு நேரடியாகக் கூறப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

**பறவைகளின் வலசைக் காலம்**

வடக்கே பனிக்காலங்களில் தரை முழுவதையும் உறைபனி மூடிவிடுவதால் அங்குள்ள பறவைகள் உணவிற்காக வெப்ப மண்டல காடுகளை நோக்கி வலசை வருகின்றன. இதையே “குளிர் காலம் பறவைகளின் வாழ்க்கைக்கு இதமானதல்ல. ஒவ்வோர் ஆண்டும் குளிர்காலம் தொடங்கும் முன்னர் இப்பறவைகள் அங்கிருந்து புறப்பட்டு வெப்பமண்டல தட்ப வெப்பத்தையும், உணவையும் நாடி ஆப்பிரிக்க, ஆசிய நிலப்பகுதிகளுக்கு வலசை வருகின்றன (migration). இதில் ஒரு பிரிவு இந்தியாவை நோக்கிப் பறந்து வருகிறது. இவை ஆயிரக்கணக்கான கி.மீ தொலைவுக்கு எந்தத் தடங்கலும் இல்லாமல் பறந்து வருகின்றன. திசை

தெரியாமல் திக்குத் தெரியாமல் அலைந்து திரிவது எல்லாம் கிடையாது. ஏதோ தினசரி வந்து போகிற இடம் போல,அவை ஆண்டுதோறும் பறந்து வருகின்றன"[21] எனப் பறவையியல் ஆய்வில் கூறப்பட்டுள்ளது. மேலும் "ஒரு குறிப்பிட்ட பரப்பில் ஓரிடத்தில் வசிக்கும் பறவைகள், அங்கு உணவுப்பொருள் குறைந்ததும் அங்கிருந்து பெயர்ந்து உணவு நிறையக் கிடைக்கும் வேறிடத்துக்குச் சென்று சிறிது காலம் இருந்துவிட்டு, மீண்டும் சொந்தக் குடியிருப்புக்குத் திரும்புவது சாதாரணமாக உள்ள பழக்கம். இதனைப் பறவைகளின் இடப்பெயர்ச்சி அல்லது வலசைபோதல் என்று குறிப்பிடுகிறோம்"[22].

**நீர்நிலைகளின் அழையா விருந்தாளி**

வலசை வரும் பறவைகளில் பெரும்பான்மை நீர் நிலைகளை நாடியே வருகின்றன. இவ்வாறு வலசை வரும் பறவைகள் குறித்து "நன்னீர் சதுப்பு, உப்பங்கழிகள், மழைக்கால நீர் நிலைகள், நீர்த் தேக்கங்கள், குட்டைகள் போன்ற அனைத்தையும் ஒருங்கே கொண்ட ஆயிரக்கணக்கான காட்டு வாத்துக்கள், தாராக்கள், கொக்குகள், நாரைகள், ஆகியவற்றின் வாழிடமும் இதுவே. இப்பறவைகள் உலகிலுள்ள 12 வான் வழித் தடங்களில் 4இல் வலசை வருகின்றன"[23] என்று ச.முகமது அலி குறிப்பிட்டுள்ளார். இவை நீர்நிலைகளில் பல்கிப் பெருகியிருக்கும் புழு, பூச்சிகள், நீர்த்தாவரங்கள் (phytoplankton), நுண்ணுயிர்களே இவற்றின் முதன்மையான உணவாக உட்கொள்ள வருகின்றன. கழிவெளிக்கு சுமார் 47 இனங்களைச் சேர்ந்த 183 பறவைகள் வருகை புரிகின்றன. "கழிவெளி ஏரியைச் சுற்றியுள்ள அடைவுகளில் கூழைக்கடாக்களின் கூடுகளை அதிக அளவில் காணமுடியும். நீண்ட, பெரிய, தட்டையான அலகினைக் கொண்ட கூழைக்கடாக்கள் உவர் நீரில் செழித்திருக்கும் நுண்ணுயிர்களைச் சல்லடைப் போல் சலித்தெடுத்து உண்பதை சற்று பொறுமையாகக் காத்திருந்தால் இரசிக்கலாம். வண்டாணம், கொய்யடி நாரை என சங்க இலக்கியங்கள் கூழைக்கடாவைச் சுட்டுகின்றன"[24]. இவ்வாறு கூறப்பட்டுள்ள நீர்ப்பறவைகளில் சில கீழே குறிப்பிடப்பட்டுள்ளது.

**"பெருங் கடற் கரையது சிறு வெண் காக்கை**
**நீத்து நீர் இருங் கழி இரை தேர்ந்து உண்டு.." (குறுந்.313)**

பெரிய கடற்கரையில் உள்ள சிறிய வெண் காக்கை வெள்ள நீரை உடைய கரிய கழியிடத்து மீனைத் தேடி உண்ணும் பின் மணம் வீசும் மலர்கள் நிரம்பிய சோலையில் சென்று தங்குவதாக நெய்தல் திணைப்பாடல் குறிப்பிடுகிறது. மேலும்,

**"......................கயதோறு**

**இற ஆர் இனக் குருகு ஒலிப்ப..." (குறுந்.27)**

பொய்கைகள் தோறும் இறா மீனைத் தின்னும் குருகுக் கூட்டம் எப்போதும் ஆரவாரத்துடன் இருப்பதாகக் மேற்கண்ட குறுந்தொகைப் பாடலில் கூறப்பட்டிருக்கிறது. இவை தவிர நெடுந்தூர நாடுகளில் இருந்து கிளுவை, ஊசிவால் வாத்து நீலச்சிறகி, உப்புக்கொத்தி, செங்கால் நாரை எனப் பல பறவைகள் நமது தமிழ்நாட்டிற்கு வலசை வருகின்றன. வளமான அமைப்புடைய இச்செழுமையான சூழல் கொண்ட இந்த நீர்நிலைப் பகுதிகள் வலசைப் பறவைகளுக்கு மட்டுமல்லமல் மனித இருப்பிற்குமானத் தேவையை உணர்ந்து அவற்றை அழியாமல் காப்பது இன்றியமையாத கடமையாகும்.

**நாரைகள் இடம்பெயரும் தன்மை**

வலசை போகும் பறவைகளில் நாரையும் ஒன்றாகக் கருதப்படுகிறது. பனிக் காலங்களில் கூட்டங் கூட்டமாக வலசை செல்லத் தொடங்குகிறது. இவற்றில் சில ஆப்பிக்கா பகுதியை நோக்கியும் வேறு சில இந்தியாவிலேயே பிற பகுதிக்கு செல்கிறது. தமிழ்நாட்டிற்கு அரிதாகவே வருவதாக கூறப்பட்டிருப்பினும் 1987 - இல் பறவைகள் கணக்கெடுப்பில் தாராபுரத்திலும், வேலூரிலும் செங்கால் நாரைகள் வந்துள்ள பதிவுகள் காணப்படுகிறது. "பிளேமிங்கோ நீர்நாரைகள் மட்டும் சுமார் 50000 வழக்கமாக வருகின்றன. வேறுவகைப் பறவைகளும் ஏராளமாக வருகின்றன. சுமார் 200 வகைப் பறவைகள் மார்ச் மாத ஆரம்பம் வரை தங்கிவிட்டுப் போகின்றன"[25]. இந்நாரை சங்க காலத்திலேயே தமிழ் நாட்டில் இருந்துள்ளதை,

**"நாராய் நாராய் செங்கால் நாராய்**
**பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன**
**பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்**
**நீயும் நின் பெடையும்**
**தென்றிசைக் குமரி யாடி வடதிசைக்**
**காவிரி யாடி ஏகுவி ராயின்**
**சத்திமுற்றத்து வாவியிற் றங்கி"**

என்ற சத்தி முற்றப் புலவரின் பாடலில் இருந்து தெளிவாகிறது. பூ நாரைகளும் வலசை வரும் பறவையன்று என்றும், அவை செப்டம்பர் முதல் ஜனவரி வரை இனப்பெருக்க காலம் என்பதால் இனப்பெருக்கம் செய்யும் இடங்களில் மற்ற

காலங்களில் காணமுடிவதில்லை என்பதாலேயே இதனை வலசை வரும் பறவைகள் பட்டியலில் சேர்த்துள்ளனர். ஆனால் பூ நாரையை பற்றி சங்கப் புலவர்களும் அறிந்திருந்தனர் என்பதை,

**"செக்கர் கொள் பொழுதினான் ஒலி நீவி, இன நாரை**
**முக்கோல் கொள் அந்தணர் முது மொழி நினைவார் போல்."**

**(கலித்.126)**

நாரை பகல் நேரத்தில் உயிர்க்கு வருத்தத்தை உண்டாக்கி இரையைக் கவர்ந்து கொண்டிருக்கும். ஆனால் மாலைப் பொழுதில் மணல் மேல் ஆரவாரம் இல்லாத பெரியநாரை சிறகு சிவந்திருத்தலானும் மூக்கு தரையில் குத்தியிருப்பதாலும் அடக்கமாய் அமர்ந்திருப்பதை முக்கோல் பகைவருக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதைக் காணும் போது இந்த உரை பூநாரைக்கே பொருந்தும். மேலும் "பறவைகள் பருவமாற்றம் உணர்ந்து தம் வாழிடத்தை மாற்றியமைக்கப் புலம் பெயர்கின்றன. சிட்டுக் குருவி அளவுள்ள புள்ளினத்திலிருந்து வல்லூறு, நாரை போன்ற பல இனப் பறவைகள் இவ்வாறு கண்டம் விட்டு கண்டம் வலசை போகின்றன."[26] என்று தற்காலத்திய பறவையியல் ஆர்வலர்கள் கூறுவதற்கு முன்பாகவே சங்கப்பாக்களில் பறவைகள் வந்து செல்லும் இயல்பை குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கதாக உள்ளது. மேலும் "கிறித்தவ வேத நூலான பைபிளில் வானில் பறக்கும் நாரைக்கு உரிய காலம் இதுவென்று தெரியும். புறாவும் தூக்கணங்குருவியும் அவை வரும் சமயத்தை அறிந்து அவற்றை எதிர்பார்க்கும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது"[27]. இதைப் போல,

**"இறவு அருந்திய இன நாரை**
**பூம் புன்னைச் சினைச் சேப்பின்**
**ஓங்கு திரை ஒலி வெரீஇத்**
**தீம் பெண்ணை மடல் சேப்பவும்" (பொரும்பாண்.204:207)**

இப்பாடல் வரிகளில் நாரைகள் மருத நிலத்தில் நெல் அறுப்பவரின் பாட்டுக்கு அஞ்சி அங்கிருந்து அகன்று முல்லைக் காட்டிற்கு செல்லும் அங்கும் வெறுத்தால் சுறா மீன் திரியும் கடலுக்கு சென்று இறாவைத்தின்று புன்னை மரத்தில் தங்கும் பின் அங்கு எழும் அலைகளின் ஆரவாரத்திற்கு அஞ்சி பனை மடலிலே தங்கும். உப்பங்கழியில் திரியும் நாரைகள் மலைப் பகுதியில் இருக்கும் எனத் திணைக்குள்ளே இடம்பெயர்வதும்,

**"மனைஉறை புறவின் செங்காற் சேவல்**
**துணையொடு குறும்பறை பயிற்றி, மேல்செல**
**விளையாடு ஆயத்து இளையோர்க் காண்தொறும்..." (அகநா.254)**

என்று வீட்டில் தங்கி வளரும் சிவந்த கால்களையுடைய ஆண் புறாக்கள் இளமகளிர் விளையாடுவதைக் கண்டு அங்குமிங்குமாய் குறுகக் குறுகப் பறந்து பின் வானத்தின் அருகில் பறந்து சென்றதாகவும் கூறப்பட்டுள்ளது.

**பறவைகள் வலசை போகும் தன்மை மற்றும் தூரம்**

"பறவைகள் பறக்கக்கூடிய வேகமும் வியப்பளிப்பதாய் உள்ளது. சின்னஞ்சிறிய ஊங்காரக் குருவி சாதாரணமாக மணிக்கு 75 முதல் 90 கிலோ மீட்டர் வேகத்தில் பறக்கக் கூடியது. காக்கை 40 கிலோ மீட்டர் முதல் 100 கிலோ மீட்டர் வரை வேகம் கொண்டு பறக்க வல்லது. தூக்கணாங் குருவி மணிக்கு 30 கி.மீ முதல் 75 கி.மீ வேகம் வரை பறக்கும். பீசண்ட் என்ற மயில் போன்ற ஒரு பறவையின் சராசரி வேகம் மணிக்கு 100 கிலோ மீட்டர் ஆகும். மணிக்கு 100 கிலோ மீட்டர் வேகம் என்பது பறவையைப் பொறுத்தவரை மிக அதிகமான வேகம் என்று சொல்ல வேண்டும் இராஜாளி வகைப் பறவையொன்று மணிக்கு 300 கிலோ மீட்டர் வேகம் வரை பறக்கக்கூடியது என்று சொல்லப்படுகிறது. இதுதான் இதுவரை தெரிய வந்துள்ள வேகங்களில் மிக அதிகமான வேகம். காற்றின் தன்மை, பறக்கும் கோணம் ஆகியவற்றைப் பொறுத்து வேகம் மாறுபடும்"[28]. மேலும்,

**"நாராய் நாராய் ! செங்கால்நாராய்**
**பழம்படு பனையின்.................."**

இந்தப் பாடலிலிருந்து நாரை என்னும் பறவை பற்றி நாம் தெரிந்து கொள்ளும் விவரம் அது ஓரிடத்திலிருந்து வெகுதொலைவிலுள்ள வேறு இடத்துக்குப் பெயர்ந்து செல்லக்கூடியது என்பதாகும். அந்த வேறு இடத்தில் சிறிது காலம் தாங்கிவிட்டு மீண்டும் தன்னுடைய இருப்பிடத்துக்குத் திரும்பிவரும் ஆற்றல் உடையது என்பதும் விளங்குகிறது. அவ்வகையில்,

**"கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை**
**நுண்அயிர் பரந்த தண்அய மருங்கின்**
**நிரைபறை அன்னத்து அன்ன,.." (அகநா.234)**

என்று பெருமழை பெய்ததால் உண்டான நுண்ணிய மணல் பரந்திருக்கும் நீர்நிலையின் அருகில் இருந்து வரிசையாகப் பறக்கும் அன்னப்பறவைகளைத் தலைமகனின் தேரில் பூட்டிய வெண்ணிறக் குதிரைகள் விரைந்து செல்லும் இயல்பினை உடையதாக இருக்கிறது என்று உவமையாகக் கூறியுள்ளதோடு அன்னம் வேகமாகப் பறக்கும் ஆற்றல் உடையது என்பது குறித்தும் புலவர்கள் கண்கொண்டு கண்ட காட்சிகள் மூலமாக பறவைகளின் பறக்கும் வேகத்தை அளவிட்டு கூறியதைத் தற்காலத்தில் "வலசை போகும் பறவைகள் எவ்வளவு உயரத்தில் பறக்கின்றன என்று ஒரு கேள்வி கேட்கத் தோன்றும், அதனையும் ஆராய்ந்திருக்கிறார்கள் பறவையியலார் சாதாரணமாகப் பெரும்பாலன பறவைகள் தரையிலிருந்து சுமார் 1 கிலோ மீட்டர் உயரத்துக்குள் பறந்து செல்கின்றன. தரை வாழ் பறவைகள் சில ஒன்றரை கிலோ மீட்டர் உயரத்திற்கு மேல் பறக்கின்றன. அவை 4 கிலோ மீட்டர் உயரம் கூடப் பறப்பதுண்டு. சில பறவைகள் 7கிலோ மீட்டர் உயரத்தில் பறந்து செல்வதை ராடார் கருவிகள் காட்டியுள்ளன"[29] என்று கருவிகளைப் பயன்படுத்தி அளவிடுவதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது. இதனை நற்றிணைப் பாடல் ஒன்று,

**"நிறை பறைக் குருகினம் விசும்பு உகந்து ஒழுக" (நற்.369)**

என்ற பாடல் ஞாயிறு மறையும் நேரத்தில் நிறைந்த சிறகுகளையுடைய நாரைக் கூட்டம் விசும்பிலே நெருங்கிப் பறந்து செல்வதாகக் கூறப்பட்டுள்ளதன் மூலம் இப்பறவையும் உயரமாகப் பறக்கும் என்பதை அறியமுடிகிறது.

**பறவைகளின் பண்புத்தொகுப்பு**

பறவையின் கால் எலும்பு உருக்கி வார்க்கப்பட்டது போல ஒரே எலும்பாக இருப்பதால் தரையை உதைத்து மேலே எழும்புவது சுலபமாக உள்ளது. பறக்கும் வேகம் என்பது பறவைக்கு பறவை வித்தியாசமாக உள்ளது. பிணந்தின்னிக் கழுகு திறமையுடன் பறக்கும் ஆற்றல் கொண்டது. இ∴து இறக்கையை ஆட்டாமலும் அசைக்காமலும் பல மணிநேரம் வானில் பறக்கும் திறம் கொண்டது என்பதை,

**"கடுவள் எடுத்த கால்கழி தேக்கிலை**
**நெடுவிளிப் பகுந்தின் வெறிஎழுந் தாங்கு,**
**விசும்புகண் புதையப் பாஅய்" (அகநா.299)**

நீண்ட கூப்பீடைச் செய்யும் பருந்துகள் ஒரு சேர மேலெழுந்து வானத்து வட்டமிட்டாற் போன்று பறக்கும் என்று கூறியிருப்பதன் மூலம் அறியலாம். மேலும்,

**“குருதி ஆடிய புலவுநாறு இருஞ்சிறை**
**எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொகுதி,**
**பச்சூன் கொள்ளை சாற்றி, பறைநிவந்து**
**செக்கர் வானின் விசும்புஅணி கொள்ளும்” (அகநா.381)**

குருதிபடிந்த புலால் நாறும் சிறகுகளையுடைய ஆண் பருந்தினது கூட்டம் கொள்ளை கொண்டு உண்ட வழிப்போக்கருடைய பசிய ஊனின் மிகுதியைப் பறந்தெழுந்து வானிலே வட்டமிடுவதால் வானம் செவ்வானம் போல் அழகுறக் காட்சி தந்தது என்றும் பருந்து பறக்கும் தன்மை கூறப்பட்டுள்ளது. இதை போன்று பரிபாடலில்,

**“ஒள் ஒளி மணிப் பொறி ஆல் மஞ்ஞை நோக்கித்......**
**வெண்சுடர் வேல்வேள் விரைமயில் மேல் ஞாயிறு நின்..” (பரிபா.18)**

என்று கணவன் ஒருவன் மணி போன்ற புள்ளி பொருந்திய ஆடும் மயிலினைப் பார்த்து அதன் அழகையும், களிப்பையும் பார்த்தான் அதனால் கொடிச்சி தன்னை இகழ்ந்ததாக எண்ணினான், அதற்கு அவன் இம் மயில் நின் சாயலைக் கவர்ந்து கொள்ள எண்ணி இயலாது போனதால் இம்மயில் வருந்துகிறது என்றும், இதே போன்று மயிலினை விரைவாகச் செல்லும் என்றும் மயிலின் மேல் வரும் ஞாயிறு என்றும் கூறியுள்ளனர்.

“வலசை போவதற்கு முன் சில பறவைகள் கூட்டமாக ஒத்திகைப் பார்ப்பதுண்டு. ஓட்டப் பந்தய வீரன் ஓடுவதற்கு முன் கை கால் அசைத்து, சில அடி தூரம் ஓடி தன்னைத் தயார் செய்வது போல பறவைகளும் பல நூற்றுக் கணக்கான கிலோ மீட்டர் தூரத்தைக் கடக்க ஒத்திகைச் செய்வதில் ஆச்சரியமில்லை”[30] என்று கே.கோராஜன் கூறுகிறார். இவ்வாறு உணவிற்காகவும், பருவமாற்றத்திற்காகவும் தம் இருப்பிடத்திலிருந்து பிற பகுதிகளுக்கு தங்களது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகச் செல்வது வலசை என்பதால், ஐந்திணைகளுக்குள் புலம் பெயர்வதே வலசையாக ஏற்றுக் கொள்ள தக்கதாக உள்ளதோடு பறவைகளின் பறக்கும் ஆற்றல் பற்றி விளக்குவதாக,

**“பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்**
**சிறுபுன் பெடையொடு சேண்புலம் போகி**
**அரிமணல் இயவில் பரல்தேர்ந்து உண்டு**
**வரிமரல் வாடிய வான்நீங்கு நனந்தலைக்**

**குறும்பொறை மருங்கின் கோட்சுரம் நீந்தி**
**நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்**
**செல்உயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்**
**பல்காய் அம்சினை அகவும்......... " (அகநா.271)**

என்ற பாடலில் பாலை நெறியில் காணப்படும் பொறிவரிப் புறாவானது தன் பெடையுடன் தொலைவான இடத்திற்குப் பறந்து சென்று அங்கு காற்றால் அரிப்புண்ட மணலில் கிடக்கும் பரற்கற்களை உண்டு விட்டு, அங்கிருந்து நெடுந்தொலைவு வந்து நீர்வேட்கை மிக்க வருபவர்களின் உயிரைக் காக்கும் அதிகமான காய்களை உடைய அழகிய நெல்லி மரத்தின் கிளையில் அமர்ந்து கூவும் என்று இப்பாடல் கூறுவதன் மூலம் புறாக்கள் நெடுந்தொலைவு பறக்கும் ஆற்றல் உடையது என்பதைக் குறிப்பிடுகிறது.

நீர்ப்பரப்பில் மேய்ந்து கொண்டிருக்கும் வெண்குருகு பறத்தலில் அதிக விருப்பமுடையது. ஆயினும் மிகுதியாக புலால் உண்ணுவதைக் கண்ட தலைவி நாரையிடம் தனக்கு தலைவனைப் பிரிந்திருக்கும் மாலைக் காலம் வருத்தம் தருவதாக உள்ளது. ஆதலால் தான் வருந்துவதை தலைவனிடம் சென்று கூறுமாறு தலைவி நாரையை தூதுக்கு வேண்டுவதன் மூலம் நாரையின் பறக்கும் தன்மையினை வைத்து தூதுப் பறவையாக எண்ணப்பட்டுள்ளதை,

**"வளை நீர் மேய்ந்து, கிளை முதல் செலீஇ**
**வாப் பறை விரும்பினை ஆயினும்..........**
**கருங்கால் வெண் குருகு......துறை கிழவோற்கே." (நற்.54)**

என்ற நற்றிணைப் பாடல் வழியாக அறியலாம். மேலும்,

**"உரை சால் வண் புகழ்ப் பாரி பறம்பின்**
**நிரை பறைக் குரீஇயினம் காலைப் போகி**
**முடங்கு புறச் செந்நெல் தரீஇயர், ஓராங்கு**
**இரை தேர் கொட்பின ஆகி, பொழுது படக்**
**படர் கொள் மாலைப் படர்தத்தாங்கு**
**வருவர் என்று உணர்ந்த, மடம் கெழு நெஞ்சம்" (அகநா.303)**

என்று பாரியின் பறம்பு மலையில் வாழும் வரிசையாகப் பறக்கும் இயல்புடைய மலைக் குருவிகள் காலை நேரத்தில் பறக்கத் தொடங்கி மாலை பொழுதில் தங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பும் என்பதை "உலகத்திலுள்ள பறவை

வகைகளில் மூன்றிலொரு பங்குக்கு மேல் வலசை போகும் வழக்கம் கொண்டிருக்கின்றன. அவை எல்லாமே நெடுந்தூரம் வலசை போகின்றன என்று சொல்லமுடியாது. சில சிறிதுதூரம் வலசை பெயர்கின்றன. மேலே குறியது போல் மலைவாழ் பறவைகள் சில, மலையின் உச்சிப் பகுதியிலிருந்து அடிவாரப் பகுதிக்கு இடம் பெயர்வதோடு சரி, உணவு தேடி இடம் மாறிச் சென்று சில நாட்களில் இருப்பிடம் திரும்பி விடுபவை உண்டு. வெகு தொலைவு சென்று மாதக்கணக்கில் தங்கிவிட்டுப் பருவம் மாறியதும் தம் சொந்த இடம் திரும்புபவை மிகவும் திறமையானவை என்பதில் ஐயமில்லை. இவ்விதம் வலசை போகும் பறவைகளின் எண்ணிக்கை ஏராளம்”[31] என்றும்,

**“மின்னுச் செய் கருவிய பெயர் மழை தூங்க**
**விசும்பு ஆடு அன்னம் பறை நிவந்தாங்கு” (குறுந்.205)**

மேகம் மழை பெய்யத் தொடங்கும் வேளையில் அன்னப் பறவைகள் இறகு அசைந்து பறத்தலில் உயர்ந்து சென்றது என்றும் இப்பாடலில் கூறப்பட்டுள்ளதோடு,

**“மெல் நடைப் பேடை துணைதர தற் சேர்ந்த**
**அன்ன வான் சேவல் புணர்ச்சிபோல், ஒண்ணுதல்” (கலித்.147)**

மடம் பொருந்திய மெல்லிய நடையை உடைய அன்னப் பறவை விரைந்து செல்லும் போது அதைத் தொடர்ந்து அன்னச் சேவலின் கூட்டம் செல்லும் என்று கூறப்பட்டிருக்கும், இப்பாடல்களின் வழியாக பறவைகளின் பறக்கும் திறம் குறித்து தெரிந்து கொள்ளமுடிகிறது. மேலும் தற்போது பறவைகள் இடம்பெயர்வதை அறிய “செயற்கைக் கோள் தடமறிதல் மூலம் வலசைப் பறவைகள் இங்கே இளைப்பாறி மேலும் தெற்கே வலசை செல்வதை ஆய்வுத் தரவுகளின் வழியே அறியமுடிகிறது”[32]. இஃது தவிர “இடம் பெயர்ந்து செல்லக்கூடிய பறவைகள் சிலவற்றைப் பிடித்து அவற்றின் கால்களில் அடையாள வளையங்களைக் கட்டி விடுவார்கள், உலகில் ஆங்காங்குள்ள பறவை ஆராய்ச்சியாளர்கள் அப்பறவைகளைப் பிடிக்க நேர்ந்தால், வளையங்களிலிருந்து விவரங்கள் அறிந்து கொள்வார்கள். பறவைகள் தங்குமிடத்தில் வளையமுள்ள பறவைகளைப் பிடித்து அவை எங்கிருந்து வந்தவை, எந்த வழி வந்தவை என்று அறிந்து கொள்கிறார்கள்”[33].

நெடுந்தூர நாடுகளில் இருந்து கிளுவை, ஊசிவால் வாத்து நீலச்சிறகி, உப்புக்கொத்தி, செங்கால் நாரை எனப் பல பறவைகள் நமது தமிழ்நாட்டிற்கு

வலசை வரும். இயற்கையோடு இயைந்து வாழும் பறவைகளுக்கு இயற்கையாக வரும் பல்வேறு இன்னல்கள் எதிர்கொண்டு அவை வாழும் தீரம் மிக்க வாழ்வு போன்று நாம் கற்றுக் கொள்ள வேண்டிய நல்ல விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன.

**வலசைப் பறவைகளின் வருகை குறைவு**

உயிர்க் கொல்லிகளின்றி உயிர்ச்சூழலில் வேளாண்மைக்கு பெரும் பங்காற்றுகின்ற பறவைகள். தற்போது இயற்கையை அழித்து மனிதன் தன் தேவையை பூர்த்தி செய்து கொள்ள விளைவதன் காரணமாக அழிந்து கொண்டு வருகின்றன. இதனை ப.அருண்குமார் அவர்கள் "உப்பங்கழிகளே இன்று இந்தியாவின் மூன்றாவது பெரிய உப்பளமாக உருவெடுத்துள்ளது. இந்த சூழல் மாற்றம் இங்கு இரைதேடி வரும் வலசைப் பறவைகளின் வருகையைப் பெருமளவில் பாதித்துள்ளது. இருபது ஆண்டுகளுக்கு முன்னர் ஏறக்குறைய எண்பதாயிரத்திற்கும் மேற்பட்ட பறவைகள் வருகை புரிந்ததாக பெர்னோ மற்றும் சாந்தாராம் ஆகியோரின் ஆய்வுகள் கூறுகின்றன. ஆனால் இன்று உப்பளங்கள் இறால் பண்ணைகளின் அசுர வளர்ச்சியின் காரணமாக இரைத்தேடி வலசை வரும் பறவைகளின் எண்ணிக்கை சில ஆயிரங்களாகக் குறைந்துள்ளது"[34] என்று கூறியுள்ளார்.

**பறவைகளின் ஒலியும் இசையும் ஒப்புமை**

பறவைகளின் ஒலியைக் கேட்டு இன்புறுவதோடு சங்க புலவர்கள் அதனை இசைக்கருவிகளின் ஓசையோடு ஒப்பிட்டுள்ளதை,

**"வெண்டலைக் குருகின் மென் பறை விளிக்குரல்**
**நீள் வயல் நண்ணி இமிழும் ஊர" (ஐங்.86)**
**"நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்" (பட்டினப்.22-25 )**
**"விளரி நரம்பின் நயவரு சீறியாழ்**
**மலிபூம் பொங்கர் மகிழ்குரற் குயிலொடு**
**புணர்துயில் எடுப்பும் புனல்தெளி காலை..." (அகநா.279)**

என்று வெண்மையான தலையையுடைய குருகு இனத்தின் குஞ்சுகள் அழைக்கும் குரல் நீண்ட வயல்களை அடைந்து ஒலிக்கும் என்றும், தினைப்புனத்தில் கிளிகளை விரட்ட ஒரு கருவி இசைக்கிறாள். அந்த இசைக் கருவியில் இசையில் இசைந்த இனிய தாளம் எனவும், விளரி என்னும் நரம்பினால் தொடுக்கப் பட்ட சிறிய யாழ் இசையுடன் குயிலின் ஓசையும் சேர்ந்து காலைப் பொழுதில் துயிலும் மக்களின் துயிலை எழுப்பும் என்றும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். மேலும்

**“மாவும் வண் தளிர் ஈன்றன, குயிலும்**
**இன் தீம் பல் குரல் கொம்பர் நுவலும்” (அகநா.355)**
**“மணி மருள் நல் நீர்ச் சினை மட மயில் அகவ” (பரிபா.15)**

தளிர்களை ஈன்ற மாமரத்தின் கொம்பிலிருந்து பல முறைக் கூவும் குயில்களுடன் சேர்ந்து வண்டினங்களும் யாழின் இசையைப் போன்ற இனிய இசையை எழுப்புமெனவும், மரக்கிளையில் உள்ள நீலமணியைப் போன்ற தோகையை உடைய மயில்கள் தாள ஒலியும் முழவு ஒலியும் போன்று ஒலி எழுப்பும் என்ற செய்தியைப் போன்று,

**“................................பருந்து இருந்து**
**உயா விளி பயிற்றும், யா உயர், நனந்தலை**
**உருள் துடி மகுளியின் பொருள் தெரிந்து இசைக்கும்**
**கடுங் குரற் குடிஞைய நெடும் பெருங் குன்றம்” (அகநா.19)**

என்று உயர்ந்த யா மரத்தில் தங்கி இருக்கும் பருந்து தனக்குத் தேவையான இரை கிடைக்கப் பெறாமையால் இழுகு பறையின் ஓசையைப் போன்று கடுமையானத் துன்பக் குரலை எழுப்பும் . இவ்வொலி அவ் வழியில் செல்வோர்க்கு துன்பத்தை உண்டாக்கும் என்று கூறியுள்ளதைக் காணலாம். இதே போன்று,

**“கொடு நுண் ஓதி மகளிர் ஓக்கிய**
**தொடி மாண் உலக்கைத் தூண்டு உரல் பாணி**
**நெடு மால் வரைய குடிஞையோடு இரட்டும்” (அகநா.9)**

என்று அழகிய கூந்தலை உடைய மகளிர் உலக்கையால் மலை நெல்லைக் குத்தும் ஒலி பெரிய மலைப் பக்கத்தில் இருந்து ஒலி எழுப்பும் ஆந்தையின் ஒலியுடன் சேர்ந்து மாறி மாறி ஒலிக்கும் மாலை வேளை வந்ததை இப்பாடல் உணர்த்துவதைப் போன்று, அகநானூற்றில்

**“உருத்து எழு குரல குடிஞைச் சேவல்**
**புல் சாய் விடரகம் புலம்ப, வரைய**
**கல் எறி இசையின் இரட்டும் ஆங்கண்” (அகநா.89)**

என்ற பாடலில் வெயிலின் கடுமையினால் பசும் புற்கள் அழிந்தவுடன் தம் வாழும் பொந்துகளைத் தனியாக விட்டு விட்டு மலையின் பக்கமாகப் பறந்து சென்ற சினம் கொண்ட குரலை உடைய பேராந்தையின் சேவல் எழுப்பும் ஒலியானது,

மலையிலிருந்து கற்கள் சரியும் போது ஏற்படும் ஓசையைப் போன்று மாறி மாறி குழறும் இடம் என்று பாலை நிலம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. மேலும்,

**“.................... வன்கண் கடுந்துடி**
**புலி துஞ்சு நெடுவரைக் குடிஞையோடு இரட்டும்..” (புறம்.170)**
**“அகல் இரு வானத்து இமிழ்ந்து இனிது இசைப்ப**
**குருகு நரல மனை மரத்தான்.” (மதுரைக்.268)**
**“பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ” (திருமுரு.310)**

என்று துடி என்னும் கருவி புலி இருக்கும் மலையிலிருந்து அங்கு வாழும் போராந்தையுடன் சேர்ந்து ஒலிக்கும் என்று ஆந்தையின் குரல் இசைக்கருவியோடு ஒப்பிடப்பட்டுள்ளதையும், பாணரின் மனையிடத்து மரங்களில் உள்ள குருகு என்னும் பறவைகள் கூப்பிடும் ஓசை திருப்பரங்குன்ற விழாவின் ஆரவாரத்துடன் மருத நில ஆரவாரமும் கலந்ததெனவும், திருச்செந்தூர் முருகனின் ஆணைப்படி துந்துபி, வயிரமிக்கு கொம்பு, சங்கு, முரசு போன்ற ஓசைகளுக்கு பல பீலியை உடைய மயில் வெற்றிக் கொடியிலிருந்து அகவுவதாகவும் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

தலைவனின் தேர் வருகையை எதிர்பார்த்திருந்த தலைவிக்கு அழகிய சிறகை உடைய குருகுப் பறவைகள் ஒலிப்பது தேரின் மணியே என்று எண்ணிப் பின் அந்த ஒலியைச் சோலையில் உள்ள பறவைகளின் ஒலி என்று எண்ணிவதாகவும், பாணன் கூறும் மொழி நமக்கு இடி இடிப்பது போல் இருக்கும் எனத் தோழி வாயில் மறுத்தது, புன்னை மரத்தின் கிளையில் அமர்ந்து புதிய வெண்குருகு கத்துவது பரிசில் பெற்ற அழகு செய்து அமைத்த நெடிய தேரின் ஒலி போல ஒலிப்பதாகவும்,

**“அணிச் சிறை இனக் குருகு ஒலிக்குங்கால் நின் திண் தேர்” (கலித்.126)**
**“.........விருந்தின் வெண் குருகு ஆர்ப்பின், ஆஅய்**
**பண் அமை நெடுந் தேர்ப் பாணியின், ஒலிக்கும்..” (நற்.167)**

என்ற பாடல்களில் கூறப்பட்டுள்ளது போன்று,

**“உண் கிளி கடியும் கொடிச்சி கைக் குளிரே**
**சிலம்பின் சிலம்பும் சோலை.................” (குறுந்.360)**
**“ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிட,**
**புலம்தொறும் குருகினம் நரல, கல்லென...” (அகநா.217)**

தினைப் புனத்தில் உள்ள கதிர்களை உண்ணுகின்ற கிளிகளை ஓட்டும் குறமகளின் கையிலுள்ள குளிர் என்னும் கருவி சிலம்பின் ஒலியைப் போல அக்கருவி ஒலி எழுப்பும் என்று கூறியிருப்பதையும், புலங்கள் தோறும் பறவைக் கூட்டம் கல்லென்று ஒலி செய்யும் பனிக்காலம் என்றும் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். மேலும்,

**"கவை முறி இழந்த செந்நிலை யாஅத்து**
**ஒன்று ஓங்கு உயர் சினை இருந்த, வன் பறை**
**வீளைப் பருந்தின் கோள் வில் சேவல்**
**வளை வாய்ப் பேடை வருதிறம் பயிரும்**
**இனி தேர் தீம் குரல் இசைக்கும் இத்தம்" (அகநா.33)**

என்ற பாடலில் எளிதில் இரையைப் பெறும் வல்லமையும் வலிமையான இறக்கைகளையுடைய பேடையை தன்பால் வருமாறு அழைக்கும் ஒலி, இளி என்னும் இசை போன்ற இனிய குரல் போன்றும் ஒலித்துக் கொண்டிருக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும்,

**"……………………கடவுள் முன்னர், சீறியாழ்**
**நரம்பு இசைத்தன்ன இன் குரற் குருகின்" (நற்.189)**
**"பைங்கொடிப் பாகற் செங்கனி நசைஇ,**
**கான மஞ்சைச் கமஞ்சூல் மாப்பெடை**
**அயிர்யாற்று அடைகளை வயிரின் நரலும்" (அகநா.177)**

என்ற பாடல்களில் அறக்கடவுளின் கோபம் அடங்க பாணர் எழுப்பும் சிறிய யாழின் ஓசையைப் போன்ற இனிய குரலையுடைய குருகுகள் கங்கை ஆற்றுப் பகுதிகளில் அதிகம் காணப்படுவதாகவும், பச்சை நிறப் பாகற் கொடியின் செந்நிறப் பழத்தினை விரும்பிச் சூல் கொண்ட கானமயிலின் கரிய பெடையானது அயரியாற்றின் கரையின்கண் நின்று கொண்டு ஊது கொம்பைப் போல் ஒலிக்கும் தன்மையதாக இருப்பதைப் போன்று,

**"புன்புறப்பேடை சேவல் இன்புற**
**மன்னர் இயவரின் இரங்கும் கானம்" (ஐங்.425)**

பொலிவற்ற புறச் சிறகையுடைய பெண்புறா தனது அன்புடைய சேவல் மகிழ்ச்சி அடைவதற்காக, மன்னர்களது இயவர் எனப்படும் வாச்சியக்காரர்கள் வாசிக்கும் இசையொலி போன்று இனிமையான ஒலியெழுப்பும் என்று இப்பாடலில் குறிப்பிட்டுள்ளனர்.

இவ்வாறு அ.்.றிணைகளைக் கொண்டும், கற்பனை கொண்டும் சங்கப்புலவர்கள் நாவில் உதித்தச் சங்கப்பாடல்கள் “மன்னனும் மக்களும் வாழ்வின் உண்மை நிலை உணர்ந்து செம்மை வாழ்வு வாழ்ந்த காலத்தில் படைக்கப்பட்டவை அவை. நேர்மையும் உளத் திண்மையும், வளமையும், வாய்மையும், தெளிவும், துணிவும், அன்பும், அருளும் நிறைந்த பாடல்கள் அவை. மனவளம், சிந்தனைவளம், செறிந்த பாடல்கள் அவை. அதற்கு உரிய பாடல்களில் வாழ்வியல் சிந்தனைகள் பொதிந்துள்ளமை”[35] என்கிறார் இரா.ருக்மணி.

**தற்போதையப் பறவைகளுக்கும் சங்க இலக்கியப் பறவைகளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைப் குறிக்கும் வகையில் பத்திரிக்கையில் வெளியானச் செய்திகளின் தொகுப்பாக கீழேக் கொடுக்கப்பட்டுள்ளது.**

- ✓ சங்க இலக்கியத்தில் மயில் மற்றும் கான மஞ்ஞையாக குறிப்பிடப்பட்டுள்ள மயிலின் ஒரு வகையாக வெள்ளை மயில் என்ற ஒரு இனம் குறிப்பிடப்படுகிறது. ஆனால் இ.்.து இந்திய வகை மயில்களில் உயிரியல் ரீதியாக நிறக்குறைபாடு ஏற்பட்டு பிறப்பவையே வெள்ளை மயில் என்று தினமலர் 2015-இல் பத்திரிக்கைச் செய்தியும், 13.5.2014ல் தினத்தந்தியில் சேலம் குரும்பப்பட்டி வன உயிரியல் பூங்காவில் தோகை விரித்து நடனமாடிய வெள்ளை மயிலின் புகைப்படமும் வெளியாகியுள்ளது.
- ✓ சங்க காலத்தில் பறவைகளின் சரணாலயமாக இருந்த ஏரிகள் இப்போது சுற்றுலாத்தலமாக மாற்றப்பட்டுள்ளது. அதில் சிலிகா என்ற ஏரிக்கு வலசை வந்த பறவைகளாக பூநாரைகள் மற்றும் வாத்துக்களின் புகைப்படத்தை சேகர் தாத்தாத்ரி என்ற காட்டுயிர் ஒளிப்படக் கலைஞர் ஜீன் 17,2014 வெளியிட்டுள்ளார்.
- ✓ அழிவின் விளிம்பில் 15 இந்தியப் பறவைகள் என்ற செய்தி டிசம்பர் 3, 2013-இல் வெளியாகியுள்ளது. அதில் இலக்கியங்களில் காணப்பட்ட பறவைகளான காடை, ஆள்காட்டி, வரகுக்கோழி, கான மயில், பிணந்தின்னிக் கழுகு போன்றவை குறிப்பிடத்தக்கது.
- ✓ நீர்நிலைகளில் தண்ணீர் இருந்தால் மட்டுமே பறவைகள் வரும் என்பதை சங்கப்பாடல்களில் காணப்பட்ட செய்திகளை உண்மையாக்கும் வகையில் கோவை சுண்டக்காமுத்தூர் குளத்தில் தண்ணீர் நிரம்பியுள்ளதால் புள்ளி

மூக்கு வாத்துக்கள் மகிழ்ச்சியில் சுற்றித்திரிவதாகவும், இதனால் பறவைகளின் எண்ணிக்கை அதிகரித்துள்ளதாகவும் 2.12.2013 தினமலரில் செய்தி வெளியாகியுள்ளது.

- ✓ தென் கொரியாவில் தொழிற்சாலைகளால் சுற்றுசூழலில் ஏற்படும் மாசுக்களால் பறவைகளுக்குப் பாதிப்பு இல்லாமல் இருக்க காடுகளுடன் இணைந்த ஒரு செயற்கை பூங்காவுக்கானப் பணிகள் நடந்து வருவதாக 4.4.2014 தினத்தந்தி தங்கமலரில் செய்தி வெளியானது.

- ✓ சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள செவ்வரிநாரைகளோடு இணைந்து இரை உண்ணுவதாக இடம்பெற்றுள்ள பூ நாரைகள் தலைகீழாகத் தலையை மாற்றி மாற்றி அசைத்து இரையை அலகுக்குள் இழுத்துக்கொள்ளும் என்பதால் தி இந்து பத்திரிக்கையில் தலைகீழாக உண்ணும் பறவை என்ற குறுஞ்செய்தி வந்துள்ளது.

- ✓ கடும் குளிர் நிலவும் காலத்தில் பறவைகள் பறவைகள் இரை தேடிப் பூமிப்பந்தின் தெற்குப் பகுதிகளை நோக்கி வரும் விருந்தாளிப் பறவைகளை நல்ல முறையில் உபசரிப்பது நமது பண்பாடு என்று ப.ஜெகநாதன் ஜீலை 22.2014 பத்திரிக்கையில் கட்டுரை வெளியிட்டுள்ளார்.

- ✓ கொண்டு கரிச்சான், கருப்பு வெள்ளை புதர் சிட்டு, கருஞ்சிட்டு போன்ற பறவைகள் Old world flycatchers என்ற வகைக்குள் வரையறுக்கப்பட்டுள்ளதாகவும், பழைய புத்தகங்களில் தேடினால் இவை வேறு வகைப்பாட்டில் அடக்கப்பட்டிருக்கும் என்று கொழந்த அவர்கள் 1.6.2014 தினகரன் வசந்தம் இதழில் கட்டுரை எழுதியுள்ளார்.

- ✓ சங்க மகளிர் இல்லங்களில் வளர்த்தாகக் கூறப்படும் கிளிகள் மனிதர்களின் குரல்களைக் கேட்டு அவர்களைப் போலவே ஒலி எழுப்பும் ஆற்றல் பெற்றவை என்றும், சில வார்த்தைகளைச் சொல்லிக் கொடுத்தால் அதைத் திருப்பிச் சொல்லும் என்றும் இவை உலகில் 372 வகைகள் இருப்பதாக மே 14,2014 அன்று வெளியான ஷங்கர் அவர்களின் கட்டுரையில் காணலாம்.

- ✓ சங்க இலக்கியத்தில் காணப்பட்ட இருவாச்சி என்னும் பறவை கற்பனைப் பறவையாக இருக்கும் என்ற எண்ணத்தைத் தகர்க்கும் வகையில் 29.4.2014 தி இந்துவில் பிருந்தா அவர்கள் சாம்பல் இருவாச்சி பறவையோடு, கறுப்பு ஆரஞ்சு ஈப்பிடிப்பான், தவளை வாயன், மஞ்சள் தொண்டை சின்னான் போன்ற தற்போது காணப்படும் பறவைகளைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.
- ✓ 18.3.2014 இந்து பத்திரிக்கையில் அழகிய பெரியவன் என்ற எழுத்தாளர் விதவிதமான பறவைகளாக தேன்சிட்டு, சிட்டுக்குருவி,கருங்குருவி, வாலாட்டிக்குருவி, இரட்டைவால்குருவி, மைனா, காகங்கள், வெண்கழுத்து மீன்கொத்தி, மணிப்புறா, செம்போத்து போன்றவை வீட்டின் அருகில் கண்டதாகவும், இவற்றை தவளைகளும் மீன்கொத்திகளும், துணிச்சல் பறவைகளாக சிட்டுக்குருவிகளையும் அவற்றின் செயலோடு எழுதியிருப்பது பறவை ஆர்வத்தைக் கண்டு மெய்சிலிர்க்கச் செய்யும் வகையில் இருந்தது.

**தொகுப்புரை**

❖ தலைமக்களின் உணர்வுகளைப் புலப்படுத்த சங்கப் புலவர்கள் அஃறிணை உயிரினங்களில் விலங்குகளைவிடப் பறவைகளை அதிகமாகப் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

❖ சங்கப்புலவர்கள் அகமாந்தர்களின் வாழ்க்கையை மட்டுமின்றி பறவைகளின் சிறு சிறு செயல்களைக் கூட உற்றுநோக்கி ஆய்ந்துள்ளது வியப்பிற்குரியதாக உள்ளது.

❖ வாழிடச் சூழலினால் மனிதர்களுக்கு ஏற்படும் தகவமைப்பு மாற்றங்களைப் போன்று உயிரினங்களிடையேயும் தகவமைப்பு மாற்றங்கள் ஏற்படும் என்பது அறியப்பட்டது.

❖ மனித வாழ்வில் இன்றியமையாத தேவையாக விளங்கும் உணவிற்கு நமது முன்னோர் உணா, வல்சி, உண்டி, ஓதனம், அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம் முதலான பெயர்களைப் பயன்படுத்தி இருந்தது கண்டறியப்பட்டது.

❖ ஒரு தாய் தான் ஈன்ற மகவிற்கு கொடுக்கும் முக்கியத்துவம் போன்று தாய்ப் பறவைகளும் தனது குஞ்சுகளுக்கு தேவையான உணவைத் தம் அலகினில் சேமித்து வந்து கொடுத்தல், சில பறவைகள் இரையை விழுங்கிவிட்டு பின்பு குஞ்சுகளுக்கு கக்கிக் கொடுத்தல் ஆகிய பண்புகளையும் கொண்டுள்ளதை அறியலாம்.

❖ சங்க இலக்கியத்தில் தானியம் மற்றும் தினைக்கதிர்களை உண்ணும் பறவைகளாகக் கானக்கோழி, கிளி, மயில், குறும்பூழ் போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ குறவர் இனப் பெண் மான் தோலில் தினையைப் பரப்பி காய வைத்ததைக் கானக்கோழி உண்டதாகக் கூறப்பட்டுள்ள செய்தியின் மூலம் ஆதிகாலத்தில் குறவர்களால் மான் வேட்டையாடப்பட்டுள்ளது அறிந்து கொள்ளப்பட்டது.

❖ நமது தேசியப் பறவையான மயில் நெல், தினை, வரகு ஆகியவற்றைத் தவிர பலாப்பழமும் உண்டதாக அகநானூற்றில் கூறப்பட்டுள்ளது.

- புறா இனத்தில் போகில் என்று கருதப்படும் பச்சைப் புறா இனம் பழங்களோடு அவற்றின் கொட்டைகளையும் உண்ணும் என்ற குறிப்பைக் காணலாம்.

- தேன்வழிகாட்டி பறவை தேன் உண்ணுவதைப் போல மா, இலவம், கோங்கு, குரா போன்ற மரங்களில் பூக்கும் பூக்களில் குயில் தேன் குடிக்கும் என்னும் செய்தியும் அறிந்து கொள்ளப்பட்டது.

- மனிதன் வேட்டையாடுவது போன்று வேட்டையாடி வாழும் பறவைகளாக கூகை, எழால், பருந்து போன்ற பறவைகளைக் கூறலாம். மேலும் இவை சிறு பூச்சிகள் முதலாக பெரிய பறவைகள் வரை பிடித்து உண்ணும் என்பதை அறியலாம்.

- கடற்கரை, உப்பங்கழி, வயல்வெளி, குளம் போன்ற பகுதிகளில் காணப்படும் கடற்காகம், கொக்கு, சிரல், நாரை, வெள்ளாங்குருகு போன்றவை மீனை உணவாக உட்கொள்ளுகின்றன.

- சில பறவைகள் தனக்கு கிடைத்த உணவை தான் மட்டும் உண்ணாது தன் இனத்திற்கும் பங்கிட்டு உண்ணும் இவை பகிர்ந்துண்ணும் பறவைகளாகவும் இருப்பதோடு இஃதே அவற்றிடம் காணப்படும் மிகச் சிறந்த பண்பாகவும் இருக்கிறது.

- குன்றுகளிலும், மலைகளிலும் காணப்படும் மலையுறைக் குருவிகள் எப்போதும் தனது சுற்றத்துடனே காணப்படும். இவை தினை, புல்லரிசி, தானியம் போன்றவற்றை உணவாக உண்ணுகின்றன.

- கடற்பறவைகளுள் சில வெள்ளை நிறச்சோறு, இறாமீன், கயல்மீன், வண்டு, நண்டு போன்றவற்றை உண்ணும் அனைத்துண்ணிகளாகக் காணப்படுகிறது.

- அனைத்து உயிரினங்களுக்கும் பொதுவானதாக இருக்கும் காதலுக்கு சிறந்த உதாரணமுடையதாக அன்றில் பறவை கூறப்பட்டுள்ளது. மேலும் இப்பறவை சிறு பிரிவைக் கூட தாங்கிக் கொள்ள இயலாததாகக் கருதப்படுகிறது.

- புறா, பருந்து, மயில், காடை, யானையங்குருகு எனப்படும் சக்கரவாளப்பறவை, நாரை ஆகியவற்றின் காதல் உள்ளங்களைப் புலவர்கள் கண்டுணர்ந்து பாராட்டியுள்ளமை விளக்கப்பட்டுள்ளது.

- மனிதர்களிடம் காணப்படும் தற்காப்பு குணத்தைப் போன்று பறவைகளும் ஆபத்தை உணர்ந்து தன்னை காத்து கொள்ளும் என்பது தெரிந்து கொள்ளப்பட்டது.
- வேட்டைத் தொழில் செய்வோர் விலங்குகளை அவை அறியாது இருக்க பதுங்கி பதுங்கி சென்று வேட்டையாடுவது போன்ற உத்தி மீன் வேட்டையின் போது நாரையிடமும் காணப்படுகிறது.
- பறவைகளிடமிருந்தே மனிதன் தனக்கென கூடு அமைத்து கொள்ளும் முறையைக் கற்றுக் கொண்டதை அறியலாம்.
- கரும்பின் பூவைக் கொண்டும், சிறிய சுள்ளிகள், புற்கள் போன்றவற்றை கொண்டு பறவைகள் கூடு அமைத்துள்ளமை விளக்கப்பட்டுள்ளது.
- பெண்கள் ஆடும் தோளி கூத்தைப் போன்றும், விறலியர் நடனம் போன்றும், உச்சிச் சூட்டை உடையதாகவும், இடியோசைக்கும் மயில் நடனம் ஆடுவதாகக் குறிப்புகளைக் காணமுடிகிறது.

## குறிப்புகள்


1. அ.ரம்யா., குறுந்தொகையில் நில அமைவும் உயிர்த்தகவமைப்பும், கருத்தரங்கக் கட்டுரை., பக் -10694
2. பக்தவத்சல பாரதி., பண்பாட்டு மானுடவியல்., பக் -461
3. சே. நமச்சிவாயம்., தமிழர் உணவு., பக் -1
4. என். ஸ்ரீநிவாசன்.,சங்க இலக்கியத்தில் உவமைகள்., பக் -41
5. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -35
6. பி.எல்.சாமி.,சங்க நூல்களில் மரங்கள்., பக் -22
7. இராஜேந்திரன்., உயிரியல் தாளமுறை., பக் -17
8. மலையமான்.,உயிரியலில் ஓர் உலா., பக் -78
9. வே.முத்துலக்குமி., பண்டையத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்., பக் -28
10. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -25
11. வே.முத்துலக்குமி., பண்டையத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்., பக் -80
12. தமிழண்ணல்., உள்ளங்கள் ஒன்றிடும் அன்றில்., பக் -5
13. பெரியசாமி தூரண்.,பறவைகளைப் பார்., பக் -24
14. ஆர்.ராஜகோபாலன்.,7வது அறிவு, பக்க -118:122
15. ச.முகமது அலி., வட்டமிடும் கழுகு., பக்-26
16. ஆதி வள்ளியப்பன்.,சிட்டு குருவிகளின் வாழ்வும் வீழ்ச்சியும்., பக்-27
17. விஜயவர்மன்., விந்தையான பறவைகள்., பக் -26
18. க.ரத்னம்., தென்னிந்தியப் பறவைகள்., பக் -110
19. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக்க -73:74
20. ஆர்.ராஜகோபாலன்.,7வது அறிவு, பக் -124
21. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -70
22. மேலது

23. ச.முகமது அலி., வட்டமிடும் கழுகு., பக் -14

24. உதய சங்கர்., பூவுலகு மின்மினி , நவம்பர் இதழ் - பக் -6

25. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக்-85

26. அருண்குமார். ப.,காடு-2014 செப் -அக் இதழ் பக் -57

27. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக்க -75:76

28. மேலது பக் -66

29. மேலது பக் -89

30. ராஜன்.கே,கே., பறவைகள் - பக் - 36

31. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -77

32. அருண்குமார். ப.,காடு-2014 செப் -அக் இதழ் - பக் -59

33. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக்க -80:81

34. அருண்குமார். ப.,காடு-2014 செப் -அக் இதழ் - பக் -59

35. இரா.ருக்மணி.,சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்., பக்-2

## இயல் - நான்கு

## மனித வாழ்க்கையோடு பறவைகளுக்குள்ள தொடர்பு

சங்க காலத்தில் காணப்பட்ட கூட்டமைப்புச் சமுதாயத்தில் வாழ்ந்த மக்கள் தங்களுக்கெனச் சில பழக்க வழக்கங்களையும், ஒழுக்கநெறிகளையும் கொண்டிருந்தனர். இந்த பழக்க வழக்கங்களே அவர்களின் அடையாளத்தை அறிந்து கொள்ள உதவுகிறது. இவ்வகையில் மக்கள் தங்கள் வாழ்க்கையை இயற்கையோடு இயைந்து அங்கு வாழும் உயிரினங்களோடும் குறிப்பாக பறவைகளுடனும் தங்களது வாழ்க்கையை ஒன்றித்து நோக்கியுள்ளனர். இவ்வாறு பறவைகளின் மூலம் ஜோதிடம் பார்த்தல், சகுனம் பார்த்தல், இயற்கையை உணரும் திறம், வருமுன் காப்பு நடவடிக்கை, வாழ்க்கை ஒழுங்கமைப்பு, விதிக்கப்படும் கட்டுப்பாடுகளை மீறாமை, கூடி வாழும் தன்மை போன்ற பண்புகளை எவ்வாறு தங்களது வாழ்க்கையோடு பொருத்திப் பார்த்து வாழ்ந்துள்ளனர் என்பதை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### நம்பிக்கை

மனிதனின் மனதில் தோன்றும் அச்சத்தின் காரணமாகவே நம்பிக்கை உருவாகியிருக்கும் எனலாம். இந்நம்பிக்கை மக்களின் வாழ்க்கையோடு பின்னிப்பிணைந்திருப்பதால் எப்போது தோன்றியிருக்கும் என்பதை மட்டும் அறுதியிட்டுக் கூற முடியாது. இதற்கு ஆறு.இராமநாதன் அவர்கள் "ஒரு சமூகத்தின் சூழல்கள் சிதையும் போது, அவற்றின் எச்சங்கள் நம்பிக்கைகளாகின்றன. இதனைத் தன்னுடைய சொந்த குணத்தை ஒரு சமூகம் மாற்றும் போதும் அல்லது இழக்கும் போதும் அவற்றிற்கு ஏற்ப முன்பே அமைந்திருந்த நடைமுறைகள் நம்பிக்கைகளாக எஞ்சுகின்றன"[1] என்று குறிப்பிடுகிறார். இவ்வகையில்,

**"விறல் வெய்யோன் ஊர் மயில் வேல் நிழல் நோக்கி"**
**"மணியும் கயிறும் மயிலும் குடாரியும்" (பரிபா.8)**

வெற்றி பொருந்திய முருகப் பெருமான் ஊர்ந்து செல்வதற்குரிய மயில் உடைய முருகன் மேல் சூள் உரைத்தால் அது நம்மை வருத்தும் என்றும் முருகன் மணியும், கயிரும், மயிலும் கோடரியும், பிணிமுகம் என்ற யானை ஊர்தியும் உடையவன் என்றும் முருகன் மீது கொண்ட நம்பிக்கையை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

**மக்களிடம் காணப்படும் பறவைகள் பற்றிய நம்பிக்கைகள்**

"நம்பிக்கைகளை உள்ளத்தின் உருவாக்கம் (mental creation) என்பர். அவ்வுருவாக்கத்திற்கு அடிப்படையாக அமைவது நிலைப்பாட்டுக் கொள்கை எனலாம். எனவே தீமைகளிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு மனிதன் தனக்குத்தானே கற்றுக் கொண்டவற்றைத் தனது செயலில் செயலாற்றும் போது, வெற்றி கிடைத்தால் நன்மை என்றும், தோல்வி ஏற்பட்டால் தீமை என்றும் கருதி நிமித்தங்களையும், நிமித்தக் கூறுகளையும் நம்பிக்கைகளாக உருவாக்கிக் கொண்டான். அந்நம்பிக்கைகள் மக்களிடம் செவி வழியாகப் பரவும் போது, நன்மை நிகழ வேண்டும் என்ற எதிர்பார்ப்பினை உடைய மனித உள்ளம், சோதனைக்கு ஆட்படுத்தாமல் அதனை ஏற்றுக் கொள்கிறது. ஏற்றுக் கொள்ளப்பட்டு பொதுத்தன்மை அடைந்து சமூகத்தில் செல்வாக்குப் பெறும் போது, அவை நிலைபேறு பெற்று வருகிறது. எனவே இவற்றை உள்ளத்தின் உருவாக்கம் என உளவியலார் கூறுவது பொருத்தமானதாகத் தோன்றுகிறது"[2] என்று க.காந்தி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு மனிதர்கள் தங்கள் செயலின் வெற்றி, தோல்விக்கு இயற்கை, விலங்கு, பறவையினம் போன்ற அஃறிணை உயிர்களோடும், மனிதர்களோடும் ஒப்பிட்டுப் பார்ப்பது மனித இயல்பு. இவற்றைக் கொண்டு சகுனம் பார்ப்பது மனிதர்களிடம் காணப்படும் ஒரு சிந்தனைப் புள்ளியாகும். பறவைகளைப் பார்த்து நிமித்தம் கண்டு நல்லது, தீயது என்று ஆராய்ந்து தங்களை நல்வழிப்படுத்திக் கொண்டனர்.

**நிமித்தம் பார்த்தல்**

நிமித்தம் என்ற சொல் பற்றியும், நிமித்தங்களின் வகைகளைப் பற்றியும் தொல்காப்பியர்,

**"அச்சமும் உவகையும் எச்சம் இன்றி**
**நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்**
**காலங் கண்ணிய ஓம்படை**
**ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்**
**காலம் மூன்றொடு கண்ணிய வருமே" (தொல்.பொ.அகம்.1037)**

என்ற நூற்பாவில் நிமித்தம் என்பது அச்சத்தின் காரணமாகவே வெளிப்படுத்தப்படுகிறது. இந்நிமித்தத்தை மூன்று வகைகளாகப் பிரிப்பர். அவை,




என்பனவாகும். தமிழ் லெக்சிகன் நிமித்தம் என்ற சொல்லுக்குக் காரணம், நிமித்த காரணம், சகுனம், அடையாளம், பொருட்டு போன்ற பொருள்களைக் கூறுகிறது. சங்க இலக்கியத்தில் நிமித்தம் என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை. ஆனால் 'புள்' என்ற சொல் நிமித்தம் எனும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது. "புள் என்பதற்கு நிமித்தம் என்ற பொதுப் பொருளும் 'பறவை நிமித்தம்' என்ற சிறப்புப் பொருளும் உண்டு"[3]. மேலும் இச் சொல் சங்க இலக்கியத்தில் இல்லையென்றாலும் சிலப்பதிகாரத்தில்(16:166-178) காணப்பெறுகின்றது. "நிமித்தம் என்பது பின்னர் நிகழும் நன்மை, தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறி என்றும் நேரடியாக அன்றி வேறொரு ஊடகம் வாயிலாகத் தரும் வெளியீட்டு முறைக் குறீயிடுகள் அமைகின்றன என்று கூறுதற்கேற்ப நிமித்தக் குறியீடு என்பது பின்னர் நிகழவிருக்கும் நன்மை, தீமைகளை முன்னறிவுறுத்தும் குறியாக விளங்குகிறது"[4]. ஆனால் நல்லோர் வாய்ப்புள் என்ற சொல் முல்லைப்பாட்டு அடியில் இடம்பெற்றுள்ளதை,

**"நல்ல நன் மொழி கேட்டனம் அதனால்**
**நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்" (முல்லைப்.18)**

போரின் காரணமாகத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் போருக்குச் செல்வதற்கு முன்பு நல்லோரிடம் கேட்ட சொற்கள் நல்லன என்பதால் தலைவன் பகைவரை வென்று திறைப்பொருளோடு வருவது உறுதி என்று முதுபெண்டிர் தலைவியைத் தேற்றுவதாக அமைந்த இப்பாடலில் நல்லோர் வாய்ப்புள் என்ற சொல் பயன்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இதையே குறுந்தொகைப் பாடலில்,

**"வேதின வெரிநின் ஓதி முது போத்து,**
**ஆறுசெல் மாக்கள் புள்கொள.." (குறுந்.140)**

பொருளிடைவைத்து பாலைவழியில் பிரிந்த தலைவன் சென்ற தலைவனுக்கு இங்கு நிமித்தம் கூறுவதற்கு ஓந்தியைத்தவிர பறவைகள் ஏதுமில்லை என்று காதலரைப்பிரிந்து ஆசையால் துன்பத்தைத் தாங்கி உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் தலைவி வருந்தியதாக என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது. மேலும்,

**"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம், கைந்நூல் யாவாம்.**
**புள்ளும் ஓராம், விரிச்சியும் நில்லாம்,**
**உள்ளலும் உள்ளாம் அன்றே –தோழி!" (குறுந்.218)**

தலைவனைப் பிரிந்து வருத்தத்தில் இருக்கும் தலைவி நம்மால் தலைவனைப் பிரிந்து இருத்தல் இயலாது, ஆனால் அவர் நம்மை மறந்து தங்குவதற்கு வலிமையுடையவராக இருக்கின்றமையால், அவரது வருகைக்காக கடன் நேர்ந்து கொள்ளுதல், காப்பு நாண் அணிதல், புள் நிமித்தம் பார்த்தல், விரிச்சிகேட்டல் போன்ற கடவுள் வழிபாட்டுச் செயல்களால் பயன்யாது என்று தலைவியிடம் வினவுவதாவும், இதே போல தலைவனும்,

**"வருந்துதோள் பூசல் களையும் மருந்துஎன**
**உள்ளுதொறு படூஉம் பல்லி**
**புள்ளுத்தொழுது உறைவி செவிமுத லானே." (அகநா.351)**

பொருள் ஈட்டிக் கொண்டு மீண்டுவரும் வழியில் தோள் மெலிந்து வருந்திக்கிடக்கும் தலைவித் தன்னை நினைக்கும் போதெல்லாம் ஒலிக்கும் பல்லியின் ஒலியையும், புள் நிமித்தத்தையும் போற்றித் தொழுது வாழ்பவள் என்று கூறியுள்ளதையும், இவ்வாறு பொருள் முற்றி மீண்டுவரும் தலைவன் குறித்து இப்பாடலில்,

**"சுரந் தலைப்பட்ட நெல்லி அம் பசுங்காய்**
**மறப்புலிக் குருளை கோள்இடம் கரக்கும்**
**இறப்பு அருங் குன்றம் இறந்த யாமே**
**குறுநடைப் புள் உள்ளலமே" (குறுந்.209)**

என்று குறுநடைப் பறவைகளின் நிமித்தம் நோக்காது தலைவன் விரைந்து வந்தனன் என்ற செய்தியைக் காணுகையில் பொருள் தேடச் செல்வதானாலும்,

பொருள் முற்றிமீளும் நிலையிலும் புள் நிமித்தம் பார்க்கும் வழக்கம் இருந்திருக்கலாம் என்பதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது. இவ்வாறு அகநானூற்றுப் பாடலில்,

**"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார், புள்ஓர்த்துப்**
**புடை அமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர்." (அகநா.207)**

என்று கடல் நீர் பரவிய உப்பளத்தில் விளைந்து காய்ந்த அமிழ்தமாகிய வெண்ணிற உப்பினை உமணர்கள் வெண்ணிறக் கழுத்தினைக் கொண்ட கழுதைகளின் மீது மூட்டைகளை அடுக்கி ஏற்றிக் கொண்டு புள் நிமித்தம் பார்த்தவர்களாய் மேற்குத் திசைகளிலுள்ள இடங்களுக்குக் கொண்டு செல்வதாகக் கூறப்பட்டுள்ளதைக் காணும் போது தொழிலின் காரணமாகச் செல்பவர்களும் நிமித்தம் பார்த்துள்ளமையை அறியமுடிகிறது. மேலும்,

**"நன்னன் சேய் நன்னற் படர்ந்த கொள்கையொடு**
**உள்ளினிர் சேறிர்ஆயின் பொழுது எதிர்ந்த**
**புள்ளினிர்மன்ற எல் தாக்குறுதலின்" (மலைபடு.64-66)**

என்று பழங்கள் பழுத்துச் சொரிந்து இருக்கும் காட்டிற்குச் செல்லும் பறவைக் கூட்டத்திற்கு தன் கூட்டத்திற்குத் தேவையான இனிய உணவு கிடைக்கும். அதுபோல நன்னனிடம் இரவலுக்காகப் போகும் இரவலர் கண்டிப்பாக பரிசில் பெறுவது திண்ணம் என்ற நம்பிக்கை நிலவியுள்ளதை இப்பாடல் மூலம் அறியலாம்.

**"மாறு கொள்வது போலும் மயிற் கொடி வதுவை"**
**"மட மயில் ஒரும் மனையவரோடும்" (பரிபா.19)**

முருகன் அழகிய மயில் போன்ற வள்ளியைத் திருமணம் செய்தார் எனக் கூறியதோடு மடம் பொருந்திய மயில் போன்ற சாயலை உடைய மனைவியுடன் தன் கடமைகளைச் செய்பவன் போன்ற இறைவனின் பல புகழைப் பாடி மலையேறுதல் இன்றும் வழக்கத்தில் உள்ள ஒன்று கூறப்பட்டுள்ளது.

**காக்கை கரைதல்**

காக்கை பறவை இனங்களிலேயே அறிவுமிக்க பறவையாகக் கருதப்படுகிறது. இதன் ஒலியினைச் சகுனமாகக் கருதும் வழக்கம் சங்க காலம் தொட்டு இன்று வரை தமிழ் மக்களிடையே மறையாத பழக்கமாக நிலவுகிறது.

காக்கை கரைதல் இயல்பான நிகழ்வாக இருப்பினும் எதிர்பார்ப்பு என்னும் சூழலில் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கைக்கு நிமித்தமாக அமைகிறது. இதனை,

**“திண் தேர் நள்ளி கானத்து அண்டர்**
**பல்ஆ பயந்த நெய்யின்,தொண்டி**
**முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு**
**எழுகலத்து ஏந்தினும் சிறிது – என் தோழி**
**பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு**
**விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே..” (குறுந்.210)**

என்ற குறுந்தொகைப் பாடலில் இடையர்கள் உண்டாக்கிய நெய்யோடு, **‘தொண்டி’** வயல்களில் விளைந்த வெண்ணெல் அரிசியால் ஆக்கிய வெம்மையான சோற்றை ஏழு கலங்களில் இட்டு அவற்றை காக்கைக்கு பலிச் சோறு வைத்து அக்காக்கை கரைதலை நிமித்தம் காட்டி தலைவியை ஆற்றுவித்ததாக செய்திகள் இருப்பதைப் பார்க்கும் போது நிமித்தம் பார்க்கும் வழக்கம் இருந்துள்ளதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது. இதே போன்று விருந்தினர் வரவை எதிர்பார்த்தும் காக்கையைக் கரைய வேண்டி அதற்குப் பலியுணவு இடும் வழக்கமும் அக்காலத்திலேயே இருந்துள்ளதை,

**“மறுவில் தூவிச் சிறுகருங்காக்கை**
**அன்புடை மரபின் நின்கிளையோடாரப்**
**பச்சூன் பெய்த பைந்நிண வல்சி**
**பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ**
**வெஞ்சின விறல்வேல் காளையொடு**
**அஞ்சிலோதிணை வரக்கரைந்தீமே” (ஐங்.391)**

என்ற பாடலில் உடன்போகிய தன் மகள் திரும்பிவருவதன் பொருட்டு குற்றமும் நிறக்கலப்பும் சிறிதும் இல்லாத சிறிய இறகுகளையுடைய கரிய காகத்திடம், அதனைப் பாராட்டி, காளை போன்றவளுடன் சென்ற அழகிய கூந்தலையுடையவள் திரும்பி வந்து எனது சுற்றத்தாருடன் மகிழ்ந்திருக்கும்படி கரைந்தால் உனது கிளைக் காக்கைகளுடன் இருந்து உண்ணும் வகையில் ஊன்கலந்து சமைக்கப்பட்ட உணவை செல்வர்கள் உண்ணும் பொன்னால் செய்யப்பட்ட கலத்தில் இட்டுத்தருவேன் என்று கூறியிருப்பதன் மூலம் காக்கையின் கரைதல் ஒலியை மாறுதலுக்கான நிமித்தமாகவும், சீனக் கலாச்சாரத்தில் காக்கையை

முன்னறிதிறம் உடைய பறவையாகவும் கருதுகிறார்கள். காக்கை கரைதல் விருந்தினர் வரவை உணர்த்துவதால் மாறுதலுக்கான நிமித்தக் குறியீடாகவும் கருதலாம்.மேலும் காக்கைக்கு பலிச் சோறுயிடும் வழக்கத்தை,

**"உகு பலி அருந்திய தொகு விரற் காக்கை" (நற்.343)**

கடவுள் உறையும் ஆலமர அருகில் போடப்பட்ட பலிச் சோற்றைத் தொக்க விரல்களையுடைய காக்கைகள் தின்னும் என்று நற்றிணையில் கூறியுள்ளனர். இதனை "தமிழ்நாட்டில் இன்றும் காக்கைக்குச் சோறு வைத்து விட்ட பிறகே தாம் உண்ணும் பழக்கம் வழக்கத்தில் இருந்து வருகிறது. பிடிச்சோற்றைக் கண்ட காக்கை கரைந்து கரைந்து தன் இனத்தையெல்லாம் அழைத்து, எல்லாம் ஒன்றுகூடி அதனை உண்ணும் இயல்பினது. இக்காட்சியை நம்மைப் போலவே கண்ட வள்ளுவர் அதனை உவமையாக்கி,

**"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
**அன்னநீ ரார்க்கே உள" (குறள், 527)**

கொடுத்துள்ளார். காக்கைக்குப் பலிச் சோறிடுதல் இன்று நேற்று தமிழரிடைத் தோன்றிய பழக்கம் அன்று சங்க காலந்தொட்டு வழிவழியாக வருவது"[5] என்பதை பூ.அமிர்தலிங்கனின் கருத்து வழித் தெளிவடையமுடிகிறது. நம்பிக்கையின் காரணமாக "மகளிர் பிறைதொழுதல், காக்கைக்குச் சோறிடுதல், தீது வந்துற்றவிடத்துக் கட்டினும், கழங்கினும் குறி பார்த்தல், வெறியாட்டெடுத்தல் முதலிய பழக்கவழக்கங்களைக் கொண்டிருந்தனர்"[6]. பாரதியாரும் காக்கையின் சிறகில் இறைவனைக் காணுகின்றார் என்பதனை,

**"காக்கைச் சிறகினிலே நந்த லாலா – நின்றன்**
**கரியநிறம் தோன்று தையே நந்த லாலா"[7]**

என்று பாடுவதன் மூலம் அறிந்து கொள்வதோடு காக்கை ஒரு நன்னிமித்தப் பறவையாக இருந்துள்ளதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது.

**புள்ளொலி மற்றும் செயல்கள்**

பறவைகள் முன்னறிதிறம் வாய்ந்தவையாகக் கருதப்பெறுவதால் அவற்றின் ஒலி மற்றும் செயல்கள் நிமித்தமாகக் கருதப்படுகின்றன. இவை இயல்பான செயல்களாக இருப்பினும் குறிப்பிட்ட சூழலில் குறியீட்டுப் பொருள் தருகின்றன.

**"வினை மாண் இருங் குயில் பயிற்றலும் பயிற்றும்"** (நற்.246)

பிரிவிடை மெலிந்த தலைவிக்கு பருவம் வந்ததை மாமரத்தின் கிளையில் இருக்கும் குயில் தனது கூவும் தொழிலைத் தவறாமல் செய்வதால் வருத்தம் மிகுவது கண்ட தோழி தலைவியைத் தேற்றியதாகக் கூறப்பட்டிருக்கும் இப்பாடலில் குயிலின் பயிற்றலும்,

**"குருகும் இருவிசும்பும் இவரும்: புதலும்**
**வரிவண்டு ஊத வாய் நெகிழ்ந்தனவே**
**சுரிவளைப் பொலிதற் தோளும் செற்றும்**
**வருவர் கொல் வாழி......................." (குறுந்.260)**

என்ற பாடலில் குருகு உயரமாகப் பறப்பதும் தலைவன் வரவை உணர்த்தும் நிமித்தங்களாகின்றன. தலைவனைப் பிரிந்து வாழும் சூழலில் இப்பறவையின் செயல்கள் தலைவிக்கு தலைவனின் வரவை முன்னுணர்த்தும் வகையில் குறியீடாக அமையப்பெற்றுள்ளன.

ஒரு நாட்டுக்குப் புதிய பறவை வருவதும் பழைய பறவை அந்நாட்டை விட்டு வெளியேறுவதும் என அமையும் நிமித்தம் நாட்டிற்கு வரப்போகும் தீமையை முன்னுணர்த்தும் வகையில் குறியீடாகுவதை,

**"அம்பு துஞ்சும் கடி அரணால்**
**அறம் துஞ்சும் செங்கோ லையே**
**புதுப்புள் வரினும், பழம்புள் போகினும்**
**விதுப்புற அறியா ஏமக் காப்பினை:" (புறம்.20)**

என்ற புறநானூற்று பாடல் வரிகள் நமக்கு உறுதிசெய்கின்றன. மேலும் போருக்குப் புறப்படும் முன் வீரர்கள் புள் நிமித்தம் பார்க்கும் மரபை,

**"உட்பகை ஒருதிறம் பட்டெனப், புட்பகைக்கு**
**ஏவான் ஆகலின், சாவோம் யாம் என**
**நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்பத்**
**தணிபறை அறையும் அணிகொள் தேர்வழி" (புறம்.68)**

என்ற இவ்வரிகளில் போருக்குச் செல்ல போர்ப்பறை முழங்கும் தருணத்தில் புள் செய்யும் பகையாக காரி செம்போத்து போன்ற பறவைகள் குறுக்கிட்டோடித் தீ நிமித்தம் செய்வதைப் பகை என்று கருதியுள்ளதால், இங்கு புட்பகை என்பது

பறவைகளால் ஏற்படும் தீ நிமித்தத்தைக் குறிக்கிறது. போருக்கு முன் ஒரு பறவை இடமிருந்து வலமாகப் பறந்து செல்வது தோல்வியைக் குறிப்பதாகவும், பறவைகள் இறப்பின் நிமித்தமாகவும் அமைவதைக் குறியீட்டு அகராதி தருகின்றது. மேற்கூறிய பாடலும் இக்கருத்துக்களை உணர்த்துகின்றது.

நடு இரவில் தும்பி ஒலிப்பது இயல்பு மீறிய செயலாக அமைகிறது. எனவே பறவைகளின் இடம்பெயர்வு தீமையையும், போருக்கு முன் இடமிருந்து வலமாகப் பறக்கும் செயல் இறப்பு மற்றும் தோல்வியையும் முன்னறிவிக்கும் பொருட்டு இவை தீ நிமித்தக் குறியீடாக அமைகின்றன. இதனை "பறவைகள் குறித்துப் பழந்தமிழர் கொண்டிருந்த நம்பிக்கையினை மார்க்கோபோலோவும் தம் பயணக்குறிப்பில் சுட்டியுள்ளதை கே.ஏ.நீலகண்டசாஸ்திரி எடுத்துக்காட்டுவதும்"[8] நோக்கத்தக்கது. மேலும் தலைவியின் தாய் தலைவி உடன் போக்கு சென்று இருப்பின் "மகள் உடன்போக்கு கொள்ளும்போது நற்றாய் தன்னையும், தலைவனையும், தன் மகளையும் எண்ணிப்புலம்புவாள். குறிபார்த்தல், தெய்வம் வேண்டல் போன்றவை செய்வாள்"[9] என்று இரா.இளங்குமரனார் அவர்கள் கூறியுள்ளார்.

**உயிர் பலியிடுதல்**

உயிர் பலியிடுதல் என்பது மனிதன் தனது நேர்த்திக்கடனாகச் செய்யும் ஒரு வகை சடங்குமுறையாகும். உயிர் பலியிடுதலில் ஆடு, மாடு, எருமை, பன்றி, கோழி போன்ற விலங்கினங்கள் அடங்கும். ஆட்டுக்குட்டியை அறுத்துக் கோழிக் கொடியை உயர்த்தி இறைவன் நிற்பதாகக் கருதி ஊர்களில் விழாக்கள் நடப்பதை,

**"வாரணக் கொடியொடு வயிற் பட நிற்கு" (திருமுரு.219)**

என்ற பாடல் வரி விளக்குகிறது. இவ்வாறு "ஆதித் தமிழர்களின் பண்பாட்டில் தெய்வம் பற்றிய நம்பிக்கைகள் இருந்தன. இன்றைய பகுத்தறிவின் பார்வையில் மூடநம்பிக்கைகள் எனக் கூறத்தக்க நம்பிக்கைகள் அம்மக்களிடம் வேரூன்றியிருந்தன. எனவே சடங்குகளை வெறும் அறியாமை எனக் கொள்ள இயலாது. அது மனோதத்துவ முறையில் செய்யப்போகும் செயலுக்கு வழிகாட்டியாயிருக்கிறது"[10] என்று எ.பாலுச்சாமி அவர்கள் தனது நூலில் விளக்கம் கொடுத்துள்ளார்.

**வருந்தச்செய்யும் பறவை ஒலி**

பறவைகளின் ஒலி இன்பம் தருவதாகவும், இரசிக்கத்தக்கதாகவும் இருப்பதோடு வருந்தச் செய்யும் ஒலியாகவும் இருந்துள்ளது என்பது வியக்கத்தக்கதாக உள்ளது.

**அன்றில்**

அன்றில் பறவை தனது வருத்தத்தின் காரணமாக ஒலி எழுப்புகிறது. இவ்வொலி குறித்து அகநானூற்று பாடல் ஒன்றில்,

> **"......................................தானே**
> **பராரைப் பெண்ணைச் சேக்கும், கூர்வாய்**
> **ஒரு தனி அன்றில் உயவுக் குரல் கடைஇய" (அகநா.305)**

பனை மரத்தில் துணை இல்லாது தனித்து இருக்கும் கூர்மையான வாயையுடைய அன்றில் பறவையின் குரல் வருத்தத்தைத் தருவதாயிருக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

**ஆந்தையின் அலறல்**

இரவு நேரங்களில் விழித்திருந்து உணவு தேடும் பறவையாக இருப்பது ஆந்தையாகும். ஆந்தை எழுப்பும் ஒலி தீ நிமித்தின் காரணமாகக் கருதப்படுகிறது. இவ்வாறு ஆந்தை துன்ப ஒலி எழுப்புவதை,

> **"............ தெவிட்டும் சேண்புலக் குடிஞைப்**
> **பைதல் மென்குரல் ஐதுவந்து இசைத்தொறும்**
> **போகுநர் புலம்பும் ஆறே ஏகுதற்கு**
> **ஆரிய ஆகும்என் னாமை,............" (அகநா.283)**

என்ற அகநானூற்று பாடலில் ஊரின் புறத்து அமர்ந்து இருக்கும் பேராந்தையின் குரல் வழியில் செல்பவர்கள் கேட்டு வருத்தமடையச் செய்யுவதாக இருக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் ஆந்தை என்னும் சொல்லாட்சி இடம்பெறவில்லை. ஆனால் கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை போன்ற ஐந்து வகைப் பறவைகள் கூறப்பட்டுள்ளது. ஆந்தையின் ஒலி தீ நிமித்தமாக இடம்பெற்றுள்ளதை,

> **"கவலை வெண்நரி கூஉமுறை பயிற்றிக்**
> **கழல்கட் கூகை குழறுகுரல் பாணிக்**
> **கருங்கட் பேய் மகள்......................" (பதிற்றுப்.22: 35-38)**

உணவு கிடைக்காததால் நரி ஊளையிடுவது கேட்டு கண்கள் வெளியில் பிதுங்குவது போன்று காணப்படும் கூகை குழறும், இவ்வாறு இவை இரண்டும் சத்தமிடுவதைத் தாளம் என்று கருதி பேய் மகள் ஆடினாள் என்று கூறப்பட்டுள்ளது. பகல் நேரத்தில் கூகை குழறுதல் அழிவையும், பாழ்நிலையையும் உணர்த்தும் பொருட்டு அமைவதாக பதிற்றுப்பத்தின் பாடல் விளக்குவதோடு,

**"அன்று அவண் ஒழிந்தன்றும் இலையே: வந்து நனி**
**வருந்தினை – வாழி, என் நெஞ்வே! – பருந்து இருந்து**
**உயா விளி பயிற்றும்...," (அகநா.19)**

என்னும் இப்பாடலில் குடிஞையின் குரல் வினையின் பொருட்டுச் செல்லும் தலைவனுக்கு வரவிருக்கும் துன்பத்தை அறிந்து ஒலிக்கும் தீ நிமித்தமாகிறது. மேலும் ஆந்தை முன்னறிதிறம் வாய்ந்த பறவையாகவும், ஞானம் நிறைந்த பறவையாகவும் கூறப்பெறுகிறது. போரில் புண்பட்ட வீரன் ஒருவன் இறப்பதற்கு முன் அவன் இறப்பிற்கு அறிகுறியாகக் குராலின் குரலை அவனுடைய மனைவி தீ நிமித்தமாகக் கருதுவதும் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். மேலும் புறநானூற்று பாடல் ஒன்றில்,

**"என்னை மார்பிற் புண்ணும் வெய்ய**
**நடுநாள் வந்து தும்பியும் துவைக்கும்**
**நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா**
**துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்**
**அஞ்சுவரு குராஅல் குரலும் தூற்றும்**
**நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்" (புறம்.280)**

கூகை கூவுவதைக் கேட்டு கணவன் சாவை நொடிக்குநொடி எதிர்நோக்கும் மனைவியின் துயரத்தோடு பறவையின் தீ நிமித்தம் பார்த்தலும் வெளிப்படுகிறது. இதனால் ஆந்தையின் அலறல் ஒலி அழிவு, இறப்பு, துன்பம், பாழ்நிலை ஆகியவற்றை உணர்த்தும் குறியீடாகவும், தீ நிமித்தப்பறவையாகவும் கூறுவது ஒப்பு நோக்கத்தக்கதாக இருக்கிறது. மேலும் "பழந்தமிழரைப் போலவே பண்டைய கிரேக்கரும், உரோமானியரும் பறவைகள் பறப்பதையும், ஒலிப்பதையும் நிமித்தங்களாகக் கருதியிருந்தனர்"[11] என்று தனிநாயகஅடிகள் குறிப்பிட்டுள்ளார்.

**மயிலின் அகவல்**

தோற்றத்தில் மயில் அழகான பறவையாக இருந்தாலும் அதன் ஒலி பிற உயிர்களை அஞ்சச் செய்வதாக இருப்பதை,

**“மலைய இனம் கலங்க மலைய மயில் அகவ…” (பரிபா.6)**

மேகங்கள் நீர் நிறைந்த கடல் போன்று எங்கும் பரவி இருப்பதைக் கண்டு மயில்கள் களித்து அகவுவதைக் கேட்கும் மலையில் வாழும் மான் கூட்டம் முதலிய உயிரினங்கள் கலங்கும் என்ற பாடலில் கூறப்பட்டுள்ள செய்தி மூலமாக அறியமுடிகிறது.

**கழுகின் ஓசை**

கடவுளின் வாகனமாகக் கருதப்படும் கழுகைப் பேயின் வகை என்று ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்றில்,

**“கருங்கண் காக்கையொடு கழுகு விசும்பகவச்**
**சிறுகண் யானை ஆள் வீழ்த்துத் திரிதரும்” (ஐங்.314)**

செத்தவரின் உடல்களைத் திண்ண வெறியில் இருக்கும் பேய்களுக்கு கை வளையல்கள் கழன்று விழுவனவாயின என்றும் அவ்வாறே கரிய கண்களையுடைய காக்கையும் கழுகும் தனக்குத் தேவையான உணவைக் கண்டவுடன் வானத்தில் ஆரவாரம் இட்டுத்திரியும் என்றும் கூறுவர். மேலும் பேய் கழுகின் வாகனம் என்றும் கழுகு பேயின் வகை என்றும் நம்பிக்கை இருந்துள்ளதாகக் கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

**வெறியாட்டு**

தலைவனின் பிரிவின் காரணமாக தலைவியின் மேனியில் பசலைபடர்வதைக் கண்ட செவிலித்தாய், தலைவியின் இந்நிலைக்கு காப்பு மிகுதியும், காதல் மிகுதியும், நொதுமலர் வரைவினாலும், தமர் வரைவு மறுத்தாலும் இது தவிர அவளது காதலுக்குக் கேடு விளைவிக்கக்கூடிய இதுபோன்ற பிற செயல்களாலும் தலைவிக்கு பசலைத் தோன்றியிருக்கலாம். ஆனால் உண்மையறியாத தாய் பிறரின் அறிவுரையை வினவ அவர்கள் குறிபார்த்து தெய்வத்தினால் ஆயிற்று என்று கூறிய பின்பு “மரபு வழிபட்ட அவள் இவ்வேறுபாடு முருகனால் வந்தது என்று நம்பி முருகனுக்குப் பூசை எடுக்கத்துணிகின்றாள். இதுவே தக்க வழி என்று

அக்கம் பக்கத்து முதுபெண்டிரும் கூறுகின்றனர். வீட்டில் நல்லதோரிடத்தில் புது மணல் பரப்பிய வெறியாடற் களத்தில் பூசை தொடங்குகின்றது. முருக பூசை செய்விப்பவன் வேலன் எனப்படுவான். இவன் முருகனுக்குரிய வேலை நட்டு பூசை நடத்துபவன் போலும். தினையைக் குருதியிற் கலந்து அதனை நாற்புறமும் தூவி எறிந்து முருகனைக் கூவி அழைப்பான். வெறியாட்டு என்னும் ஆவேசக் கூத்தை ஆடுவான்”[12] என்கிறார் சுப்புரெட்டியார் அவர்கள். இவ்வாறு வெறியாட்டு களத்தில் வேலனுக்கு கழங்கு பார்த்து யார் நோய்க்கும் உண்மை இதுவென மொழியும் வாய்மரபே வெறியாட்டு நிகழ்வாகும். வெறியாட்டின் போது,

**“ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி….” (திருமுரு.247)**

வெறியாட்டு நிகழும் களத்தில் முருகப் பெருமானின் பிணிமுகம் எனப்படும் மயிலையும் வாழ்த்தி வழிபட்டனர். இவற்றைக் கொண்டு க.திலகவதி அவர்கள் “சங்ககால மகளிர் நாள், கோள், கண், புள், மரம், பல்லி, காக்கை ஆகிய அஃறிணைப் பொருட்களின் இருப்பு, இயக்கம் முதலியன கொண்டு நிமித்தம் பார்க்கும் பழக்கம் உடையவராக இருந்துள்ளனர்”[13] என்று சங்ககால மகளிர் வாழ்வியல் நூலில் குறிப்பிடுகிறார்.

**இற்செறிப்பு**

தலைவியது செய்கைகளில் மாற்றங்கள் ஏற்பட்டாலும், ஊரில் அலர் தோன்றியதாலும் தலைவி இற்செறிக்கப்படுவாள் என்பதோடு,

**“கரும்பு எனக் கவினிய பெருங் குரல் ஏனல்**
**கிளி பட விளைந்தமை……………………” (அகநா.302)**

கரும்பைப் போன்ற அடியினையுடைய தினையின் விளைந்த கதிர்களைத் தின்னும் கிளிகளை ஓட்ட அனுப்பாமல் தலைவியை இற்செறிப்பில் வைத்திருக்கும் அன்னை அறமில்லாதவள் என்று பகற்குறியில் வந்த தலைவனுக்கு கேட்குமாறு தோழி கூறியிருப்பது தினைகள் சேதமடைவது அறமாக இருந்திருக்கும் என்று எண்ணத் தோன்றுகிறது.

**இயற்கையை உணரும் திறம்**

இயற்கையைச் சார்ந்து வாழும் அஃறிணை உயிர்கள் அனைத்திற்கும் இயற்கையின் மாறுதல்களை அறியமுடியும். அதிலும் பறவை இனங்கள் மிக

விரைவாக சூழலை உணர்ந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் என்பதை விளக்குவதாகக் கீழ் காணும் பாடல்கள் அமைந்துள்ளன.

**"...........................................குயிலும்**
**தேம் பாய் மாஅத்து ஓங்கு சினை விளிக்கும்" (அகநா.341)**

தேன் பெருகும் மாமரத்தின் உயர்ந்த கிளையில் அமர்ந்திருக்கும் குயில் கூவத்தொடங்குமாயின் இளவேனில் காலம் வந்ததாகவும்,

**"நல்கூர் சீறூர் எல்லித் தங்கி**
**குடுமி நெற்றி நெடு மரச் சேவல்**
**தலைக் குரல் விடியற் போகி..." (அகநா.87)**

இரவில் மரத்தில் தங்கி அங்கு உறங்கும் சேவல் கோழியானது, விடியற்காலத்தில் எழுந்து தனது முதல் குரல் கொடுக்கும் என்று கூறப்பட்டிருப்பதன் மூலம் விடியலை அறிவிக்க சேவல் கூவுவதாக தற்போது நம்மிடையே காணப்படும் பழக்கம் ஆரம்ப காலம் தொட்டு இருந்துள்ளதை காண முடிகிறது. இதேப் போன்று கு.ராஜாராம் அவர்கள் தனது பறவைகள் பற்றிய அறிவியல் என்னும் நூலில் "பகலில் பறப்பவை சூரியனை வைத்துத் திசையறிந்து செல்வதாகவும், இரவில் பறப்பவை நட்சத்திரங்களைக் கொண்டு திசையறிந்து செல்வதாகவும், சொல்வதுண்டு"[14] என்று கூறியிருக்கிறார். சேவலின் பருவம் அறியும் திறன் குறித்து புறநானூற்றில்,

**"வட்ட வரிய செம்பொறிச் சேவல்**
**ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம்" (புறம்.28)**

வட்டமான வரியையுடைய செம்புள்ளிகள் பொருந்திய காட்டுச்சேவல், தினைப் புனத்தில் காவல் செய்வோரின் துயிலை நீக்கி விடியலை உணர்த்த கூவுவதாகவும், புலராத பொழுதில் சேவல் கூவுவதாகவும்(புறம்.383), விடியலை அறியும் பறவையாகவும்(புறம்.398) காணப்படும் குறிப்புகள் மூலம் சேவலின் பருவம் அறியும் திறனை அறியலாம்.

**பருவம் உணர்த்துதல்**

பருவம் உணர்த்துதல் என்பது ஒவ்வொரு உயிரினத்திற்கும் பொதுவான ஒரு காரணியாகும். அதில் பருவம் மாறும் காலங்களை உணரும் திறம் பறவைகளுக்கு இருந்திருப்பதை,

**“வெயில் அவிர் புரையும் வீ ததை மராஅத்துக்**
**குயில் இடு பூசல் எம்மொடு கேட்ப” (அகநா.317)**

வெயில் போன்ற ஒளிமிகுந்த மலர்கள் நிறம்பிய மாமரத்தின் கிளையில் இருந்து குயில்கள் கூவும் ஆரவார ஒலியை சேர்ந்து கேட்போம் என்று தலைவன் கூறிச் சென்ற பருவத்தை உணர்த்துவதாகவும்,

**“மன்ற மராஅத்த கூகை குழறினும்**
**நெஞ்சுஅழிந்து அரணம் சேரும்....” (அகநா.158)**
**“இருங்குயில் ஆல, பெருந்துறை கவின் பெற..” (கலித்.36)**
**“நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்**
**இறவின் அன்ன கொடு வாய்ப் பெடையொடு” (கலித்.160)**

நறுமணத்தால் மலர்கள் மலர்கின்றன. கரிய குயில்கள் கூவுகின்றன. இத்தகைய இயல்புடன் இளவேனில் பருவம் வந்தது என்றும், மன்றத்தின் மா மரத்தில் இருக்கும் கூகை அச்சம் உண்டாக்கும் வகையில் குழறும் அப்போது தலைவி பாதுகாவலான இடத்திற்கு வந்து விடுவாள் என்று தோழி செவிலிக்குக் கூறுவது போன்று தலைவனுக்கு கூறியதாகவும், நெருப்பைப் போன்ற சிவந்த தலையை உடைய ஆண் அன்றில், இறால் மீன் போன்ற வளைந்த அலகை உடைய பெண் அன்றிலுடன் தடா மரத்தின் உயர்ந்த கிளையில் உள்ள தன் கூட்டில் அமர்ந்து கொண்டு ஒலிக்கும், கூதிர் காலத்திலும் தலைவன் வரைவிற்கு வராமையை எண்ணி வருந்துவதாகவும் கூறும் இப்பாடல்வரிகள் மூலம் பறவைகள் இயல்பாக ஒலிக்கும் ஒலியை வைத்து பருவம் கண்டுள்ளது தெளிவாகிறது. மேலும்,

**“மடக் கிளி எடுத்தல்செல்லாத் தடக் குரல்**
**குலவுப் பொறை இறுத்த கோல் தலை இருவி..” (அகநா.38)**

அழகிய இறகினை உடைய இளங்கிளிகளால் கொய்து சுமந்து செல்ல இயலாத பெரிய கதிர்கள் என்று கூறப்பட்டுள்ளமையால் நெற்கதிர்கள் வளமுடன் இருந்திருப்பதை மக்கள் அறிந்திருப்பர் என்பதை இப்பாடல் நமக்கு தெளிவுபடுத்துகிறது. இதே போன்று,

**“நல் நாள் பூத்த நாகு இள வேங்கை**
**நறு வீ ஆடிய பொறி வரி மஞ்ஞை**
**நனைப் பசுங் குருந்தின் நாறு சினை இருந்து,**
**திணைப் பயிர்ந்து அகவும் துணை தரு தண்கார்” (அகநா.85)**

நல்ல வைகறைப் பொழுதில் மலா்ந்துள்ள மிக்க இளமைமையுடைய வேங்கை மரத்தின் மணங்கமழும் பூக்களைக் குடைந்து, அவற்றின் துகள்கள் படியப் பெற்ற, புள்ளிகளையும் கோடுகளையும் உடைய ஆண்மயில்கள், ஒழுகும் பசுமையான குருந்த மரத்தின் நறுமணம் வீசும் கிளையிலிருந்து தன் துணையை அழைத்துக் கூப்பிடும். அத்தகைய துணையைத் தருகின்ற குளிா்ந்த காா்ப்பருவமே நம் தலைவா் தாம் வருதும் என நம்மிடம் தெளிவித்த பருவமாகும் என்று கூறும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

**துன்பம் தருதல்**

மாவின் தளிரைத் தின்றால் குயிலின் குரல் இனிதாகும் என்பதால் சோலையில் காணப்படும் மாந்தளிரைத் தின்று விட்டு அவை கூவுவதைக் கேட்கும் துணையைப் பிரிந்திருக்கும் பெண்களுக்கு கண்ணீரை நிறுத்தாமல் வரச் செய்வதாக இருப்பதை,

**“கலிழ் தளிா் அணிந்த இருஞ் சினை மா அத்து**
**இணா் ததை புதுப் பூ நிரைத்த பொங்கா்**
**புகை புரை அம் மஞ்சு ஊர**
**நுகா் குயில் அகவும் குரல் கேட்போா்க்கே……..” (அகநா.97)**

என்ற பாடல் விளக்குகிறது. மேலும்,

**“குயில் குரல் கற்ற வேனிலும் துயில்துறந்து**
**இன்னா கழியும் கங்குல்……………….” (அகநா.237)**

என்று குயில்கள் கூவும் இளவேனிற் காலம் கூடியிருக்கும் தலைவன் தலைவிக்கு மிகுந்த இன்பம் தரும் காலமாகும். ஆனால் பிரிந்திருப்பவர்களுக்கு துன்பத்தைத் தரும் என்றும் கூறியுள்ளதைக் காணும் போது பறவைகளின் ஒலித் துன்பத்தைத் தருவதாகவும் மக்கள் நம்பியுள்ளமை வெளிப்படுவதோடு,

**“நிலம் பூத்த மரமிசை நிமிா்பு ஆலும் குயில் எள்ள” (கலித்.27)**

இளவேனில் காலத்தில் தலைவனைப் பிரிந்து இருக்கும் தலைவியைக் கண்டு மரத்திலிருக்கும் குயில்கள் அவளை இகழும்படியாய் செருக்கு கொண்டு ஆரவாரம் செய்யும் என்று பறவைகளின் இயல்பான செயல்கள் துன்பம் தருவதாக நம்பப்பட்டுள்ளதையும் காணலாம்.

**அச்சம் உண்டாக்கல்**

பறவைகளின் செயல்கள் நமக்கு அச்சத்தை உண்டு பண்ணுவதாக இருந்தாலும் சில செயல்கள் பிற உயிரினங்களுக்கு பாடமாக இருப்பதை,

> **"உயிர் திறம் பெயர, நல் அமர்க் கடந்த**
> **தறுகணாகள் குடர் தரீஇ, தெறுவர**
> **செஞ் செவி எருவை, அஞ்சுவர இருக்கும்" (அகநா.76)**

என்ற பாடலில் போரில் வென்று களத்தில் இறந்து கிடக்கும் அஞ்சாமையுடைய வீரர்களின் குடலைச் சிவந்த காதுகளையுடைய பருந்து, காண்போர் அஞ்சும் வகையில் அவர்கள் வயிற்றிலிருந்து உருவி வெளியே எடுத்துப் போடும் என்று கூறியுள்ளனர். இத்தகைய கழுகின் கம்பீரமாக "வழுக்கை மண்டைக் கழுகின் வாழ்வுக் காலம் 50 ஆண்டுகள் அது 40 வயதை அடைந்ததும், அதன் அலகும் நகங்களும் வளைய ஆரம்பிக்கின்றன. அவற்றைக் கொண்டு அது இரையைப் பிடிக்க முடியாது. அதன் உடலில் மிகையான இறகுகளைத் தன் வளைந்த நகங்களைக் கொண்டு பிய்த்துப் போட முடியாது. எனவே, அதன் எடை அதிகரிக்கிறது. பறப்பதே கூட அதற்கு மிகவும் வலியினைத் தருமளவுக்குக் கடினமாகி விடுகிறது. கம்பீரமாயிருந்த கழுகு காலப்போக்கில் ஆதரவில்லாமலும், பலவீனமாகவும் ஆகிவிடுகிறது. அதன் பிறகு தான் நம்ப முடியாத நிகழ்ச்சியொன்று நடை பெறுகிறது. அக்கழுகு தன் அலகு உடையும் வரை பாறைகளின் மீது மோதிக் கொள்ளும். பிறகு அதற்கு ஒரு புதிய கூர்மையான அலகு வளரும். அதைக் கொண்டு தன் மிகை இறகுகளைப் பிரித்து எறிந்துவிடும். தன் நகங்களைக் குறைத்துக் கூராக்கிக் கொள்ளும். பின்னர் அது விண்ணில் மீண்டும் பறந்து கம்பீரத்துடன் வாழ்வின் புதிய கட்டத்தினைத் தொடங்கும்"[15]. இப்பறவையின் இச் சிறப்பு மிக்க செயல் நம் மனதிலும் ஏற்படுமாயின் நம்மாலும் விழுந்தாலும் எழுந்து நடக்க முடியும் என்ற நம்பிக்கை எழும் என்பதில் ஐயமில்லை.

**தேன் வளம்**

பூக்கள் மலர்ந்து அதிலிருந்து உருவாகும் தேன் பல உயிர்களுக்கு உணவாகிறது. மனிதர்களுக்கு இது மருந்தாகவும் பயன்படுகிறது. இத்தகு தேன் உண்ணடாகும் காலத்தை அறிவிக்கும் வகையில் பறவைகள் இருப்பதை,

**“கோங்கும் கொய் குறை உற்றன குயிலும்**

**தேம் பாய் மாஅத்து ஓங்கு சினை விளிக்கும்” (அகநா.341)**

என்ற பாடலில் தேன் பறக்கும் மாமரத்தின் உயர்ந்த கிளையில் இருந்து குயில்கள் கூவத் தொடங்கியதாகக் கூறியுள்ளதன் மூலம் இளவேனில் பருவத்தில் தேன் வளம் மிகுந்திருந்திருக்கலாம் என்பதை தெளிவாக்குகிறது.

**மருத்துவப்பயன்**

புறாக்களின் உடல் வெப்பம் $41.2^0$C லிருந்து $42^0$C வரை காணப்படுகிறது. இது மனிதனின் வெப்ப அளவான $38^0$C டிகிரியை விட அதிகமானதாக உள்ளது. ஆதலால் குளிர்ச்சியால் மனிதர்களுக்கு ஏற்படும் வாத நோய்க்கு புறாவின் சூடான இரத்தம் மருந்தாகப் பயன்படுத்தப் படுகிறது. இ∴தோடு மருத்துவ பயன்மிக்க இறைச்சிகளில் புறாவின் மாமிசமும் ஒன்றாகக் கருதப்படுகிறது. இது தவிர “மரபு வழிப் பண்பியல் (Genetics) ஆராய்ச்சிக்கும் வைட்டமின் ‘B’ காம்பிளக்ஸ் போன்ற சத்துணவு விவரங்களை ஆராயவும் புறாக்கள் பயன்படுகின்றன”[16] என்பதை முருகுசுப்பிரமணியம், பந்தயப்புறாக்கள் என்னும் புத்தகத்தில் கூறியிருக்கிறார்.

**பொருளாதாரப்பயன்**

பண்டையத் தமிழர் உலகில் தலை நிமிர்ந்து வாழ்வது, கலை மற்றும் இலக்கியங்களால் மட்டுமல்ல. நம் தமிழர்கள் வாணிகத்தில் சிறப்புற்று திகழ்ந்து பெருவாரியான பொருள் ஈட்டியமைக்குச் சான்றாக “சங்க காலத்துத் அரசர்கள் தங்களுடைய நாடுகளில் வணிகர்க்கு ஊக்கமளித்து வாணிகத்தை வளர்த்தார்கள். அவர்கள் தங்களுடைய நாடுகளில் வாணிகக் கப்பல்கள் வந்து போகவும் ஏற்றுமதி இறக்குமதி செய்யவும் துறைமுகப் பட்டினங்களை அமைத்தார்கள். இராக்காலத்தில் கடலில் வருகிற கப்பல்கள் திசை தப்பிப் போகாமலும், துறைமுகத்தைக் காட்டவும் கலங்கரை விளக்குகளை அமைத்தார்கள். துறைமுகங்களில் உள்ள வாணிகப் பொருள்கள் களவு போகாதபடி காவல் வைத்தனர். வாணிகஞ்செய்து பெரும் பொருள் பெரும் பொருள் ஈட்டின வணிகப் பெருமக்களுக்கு ‘எட்டி’ என்னும் சிறப்புப் பெயரையும், ‘எட்டிப்பூ’ என்னும் பொற் பதக்கத்தையும் அளித்துச் சிறப்பினைச் செய்தார்கள். தரை வாணிகமும் கடல் வாணிகமும் பெருகவே, அவற்றைச் சார்ந்து பயிர்த் தொழில் வளர்ச்சியும் கைத் தொழில் வளர்ச்சியும் பெருகிப் பொருள் உற்பத்தி அதிகப்பட்டது”[17] என்று மயிலை சீனி.வேங்கடசாமி

கூறியதற்கு சான்றாக அன்னத்தின் தூவியும், மயிற்பீலியும் உயர்தர வாணிகப் பொருள்களாக இருந்திருக்கும் என்பதை, அன்னத்தின் தூவியைக் கொண்டு மெல்லணை செய்யப்பட்டுள்ளதற்கு சான்றாக நெடுநல்வாடையில் உள்ள பாடல் அடியில்,

**“துணை புணர் அன்னத் தூ நிறத் தூவி (நெடுநல்.132)**

துணையோடு புணரும் அன்னத்தின் தூவியைக் கொண்டு தலைவி உறங்குவதற்கான மெல்லனை செய்துள்ளனர் என்று கூறப்பட்டுள்ளதைக் காணும் போது “அன்னத்தின் தூவியைக் கொண்டு மெல்லணை செய்யப்பட்டுள்ளது என்றால் அக்காலத்தில் அன்னப்புள் பெருவரவிற்றாய், நம் நாட்டில் வாழ்ந்து பெருகியிருந்திருக்க வேண்டும் என்பதை நாம் ஒருவாறு ஊகிக்கலாம்”[18] என்று குறிப்பிட்டுள்ளார். மேலும்,

**“ஆய் தூவி அனம் என............”(கலித்.56)**

சூட்டு மயிரை உடைய அன்னம் போன்று நடையும், மயில் போன்று சாயலும் மடப்பமும் பொருந்திய தலைவியின் எழில் என்று கூறியுள்ளதில் இருந்து அன்னத்தின் தூவி வெப்பத்தன்மை கொண்டது என்பதையும், ஆகையினாலே அன்னத்தின் மயிரை மெல்லணை செய்ய பயன்படுத்தியிருப்பர் என்பதையும் அறிந்து கொள்ளமுடிகிறது.

**அன்னத்தின் தூவி**

**“நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்**
**அடும்புஅமர் எக்கர் அம்சிறை உளரும்” (அகநா.320)**

உப்பங்கழியில் துழாவி மீனைப் பிடித்து உண்ணும் குரிய கால்களையுடைய அன்னப்பறவை, அடுப்பங்கொடி என்னும் கொடி படர்ந்து காணப்படும் மணல் மேட்டில் அமர்ந்து தன் இழகிய சிறகினை உலர்த்தும் என்ற செய்தியைக் காணும் போது இதற்கு “அன்னப்பறவைக்கு மிக அதிகமான எண்ணிக்கையுடைய இறகுகள் உள்ளன என்று சொல்லப்படுகிறது. சீழ்க்கையடிக்கும் அன்னம் என்னும் ஒருவகை அன்னப்பறவை 25216 இறகுகள் கொண்டிருப்பதை எண்ணியுள்ளார்கள். அந்த அன்னத்தின் தலையிலும் கழுத்திலும் எண்பது சதவீத இறகுகள் காணப்பட்டன. அன்னம் நன்றாகப் பறக்கக்கூடிய பறவை இல்லை. எனவே அதன் இறகுகள் பறப்பதற்காக உதவுவனவாயிருந்தால் தலையிலும் கழுத்திலும் அவ்வளவு அடர்த்தியாக இருக்கமாட்டா. இறக்கைகளில் இறகுகள் அதிகமாயிருந்தால் பறக்க உதவக் கூடியனவாக இருக்கும்”[19] எனக் கு.ராஜாராம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இதே போன்று,

**"................................வானின்**

**வயங்கு சிறை அன்னத்து நிரை பறை கடுப்ப" (அகநா.334)**

என்று வானத்தில் பறப்பது போன்று விளங்கும் இறகையுடைய அன்னப்பறவையின் கூட்டம் பறந்து செல்வதைப் போல் தேரை விரைந்து செல்லும் படி பாகனுக்குத் தலைவன் சொன்னதாக அமைந்துள்ள இப்பாடல் மூலம் "பறவை எவ்வளவு உயரம் மேலே போனாலும் இருதயம் தாங்கவல்லது"[20] என்ற பறவையியல் ஆர்வளரின் கருத்தை ஏற்றுக்கொள்ளும் வகையில் தற்போதைய காலகட்டத்தில் பலவீனமான இருதயமுடைய மனிதன் மாடிப்படி ஏறக்கூட முடியாமல் தவிப்பது காண்கிறோம் மேலும் அன்னத்தின் இறகு குறித்து புலவர்கள் அதிகமாகப் பாடியிருப்பதைக் காணும் போது அக்கால கட்டத்தில் அன்னத்தூவி சிறப்பு பெற்று இருந்துள்ளது எனலாம். "தென் பசிபிக் கடலிலுள்ள சாந்தா குரூஸ் தீவில் தேன் சிட்டு, ஸ்காட்லட் எனும் குருவி ஆகியவற்றின் இறகுகளைக் கொண்டு இடுப்பில் அணியும் பட்டை செய்கிறார்கள். இறகு எடுப்பதற்காக எத்தனையோ தேன் சிட்டுகளைக் கொன்று விடுகிறார்கள்"[21] என்கிறார் கு.ராஜாராம் அவர்கள்.

**பருந்து உருவ கட்டிடம்**

"வடமொழியில் காணப்படும் சுல்வ சூத்திரங்களில் வேத வேள்விக்கு அமைக்கப்படும் செங்கல் கட்டிடம் பருந்துருவாகவும், கொக்குருவாகவும், தேரின் முன்பாக உருவாகவும், ஒரு வகை முக்கோண உருவாகவும், இரண்டு முக்கோணங்கள் அடிமட்டத்தில் இணைந்தது போலவும்,ஆமை போலவும் அமைக்கப்படலாம் என்று சொல்லப்பட்டுள்ளது"[22] முதலில் பருந்துரவ வேள்விச் சாலை அமைத்தவன் உயர்ந்த பலனான சொர்க்கத்திற்கு உடனே போவான் என்று சொல்லப்பட்டுள்ளதை மெய்ப்பிக்கும் வகையில்,

**"எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்**

**வேத வேள்வித் தொழில்முடித் ததூஉம்" (புறம்.224)**

என்று பருந்து விழுங்குவதாகச் செய்யப்பட்ட விடத்தில் நாட்டப்பட்ட நெடிய தூணில் சொல்லப்பட்ட வேள்வியைச் செய்துள்ளனர் என்பதை இப்பாடல் வரி கூறுகிறது. மேலும் "சோழரின் நாணயத்தில் பொறிக்கப்பட்ட பறவையின் அலகில் பாம்பு நன்றாகத் தெரிவதால், அது வேள்வியில் வரும் உயிர்ப்பலியைத் திண்பது எருவை என்பது இந்த புறநானூற்றுப் பாடலில் கூறப்பட்டுள்ளது. எருவை

உயிருடையவற்றைத் தின்னும் கருடப்பருந்தே என்பது தெளிவாகும். உ.வே.சாமிநாதய்யர் பருந்து வடிவாகச் செய்ததற்கு 'கருடசயனம்' என்று அடிக்குறிப்பில் கூறியது மிகப் பொருத்தமானதாகும்"[23].

**பொழுதுபோக்கு**

மனிதர்களோடு ஒன்றி வாழும் பறவைகளுள் ஒன்று புறா. "மக்கள் வாழும் சந்தடியான இடங்களில் கூட அச்சமின்றித் திரியும்"[24] இவ்வாறு மனிதர்கள் நம்பி நம்மை அண்டி வாழும் இம்மென்மையானச் சுதந்திரமாகச் சுற்றித் திரியும் பறவையை மனித நேயமின்றி நமது சுய இன்பமான இறைச்சிக்காகவும், வளர்ப்பதற்காகவும் வேட்டையாடும் வழக்கம் சங்கக்கால கட்டத்திலிருந்தே இருப்பதை,

> **"புன்புறப் புறவின் கணநிரையலற**
> **அலந்தலை வேலத்து உலவை அஞ்சினைச்**
> **சிலம்பி கோலிய அலங்கல் போர்வையின்... " (பதிற்றுப்.39)**

என்று பதிற்றுப்பத்தில் புள்ளிகளையுடைய கழுத்தையும், பொலிவற்ற முதுகையுமுடைய புறாக் கூட்டம் சிலந்தியின் கூட்டையும் தமக்கு விரித்த வலை என்று எண்ணி அஞ்சும் என்பதால் மென்மைத் தன்மையுடன் இருப்பதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளதன் மூலம் பறவைகளை வலை விரித்து பிடித்துள்ளதாக கூறப்பட்டுள்ளது.

> **"பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்**
> **கரந்தைஅம் செறுவின் வெண்குருகு ஒப்பும்**
> **வல்வில் எறுழ்த்தோள்.........................." (அகநா.226)**

புனல் விளையாட்டை வெறுக்கும் மகளிர் கோரைகளைப் பறித்து எடுத்து கொட்டைக் கரந்தை இருக்கும் வயலில் காணும் வெண்ணிற நாரைகளை ஒட்டி விளையாடியதாக அகநானூற்று பாடலில் விளக்கப்பட்டுள்ள செய்தி மூலமாகவும் அறியமுடிகிறது. மேலும் புறநானூற்று பாடல் ஒன்றில்,

> **"பொறிப்புறப் பூழின் போர்வல் சேவல்**
> **மேந்தோல் களைத்த தீங்கொள் வெள்ளெள்**
> **சுளகிடை உணங்கல் செவ்வி கொண்டு உடன்**
> **வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன**
> **குடந்தைஅம் செவிய கோட்டொலி யாட்டக்**
> **கலிஆர் வரகின் பிலங்குபீள் ஒளிக்கும்" (புறம்.321)**

என்று புறத்தில் புள்ளிகளையுடைய குறும்பூழ் பறவையின் சேவல் தேள் நீக்கப்பட்டு உலர வைக்கப்பட்ட வெண்மையான எள்ளினை கவர்ந்து உண்டுவிட்டு வயலில் காணப்படும் சுண்டெலியை வருத்துவதால் அஃது வரகின் தொகையில் மறைந்து கொண்டதாகவும் என்றும் புலவர்கள் கூறியுள்ளனர். பண்டைய காலங்களில் காடையை வளர்த்து அவற்றிற்கு போரிட பயிற்சியளித்து பின் அவற்றை ஒன்றொடு ஒன்று போரிட வைத்து மகிழ்வதை வழக்கமாகக் கொண்டிருந்ததாக குறிப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

**கடவுளின் வாகனம்**

மக்கள் வழிபாடு செய்யும் கடவுள்களின் வாகனங்களாகவும் பறவைகள் இருந்துள்ளன. கோவில்களிலும், கல்வெட்டுக்களிலும் பறவைகளை வாகனமாகக் கொண்டிருக்கும் கடவுள்களின் உருவத்தைக் காணமுடிகிறது. முருகனின் வாகனமாக மயில் இருந்துள்ளதை,

**"ஒரு திறம் ஆடு சீர் மஞ்ஞை அரிக் குரல் தோன்ற"**
**"மணி நிற மஞ்ஞை ஓங்கிய புட் கொடிப்**
**பிணிமுகம் ஊர்ந்த வெல் போர் இறைவ...."** (பரிபா.17)

முருகப் பெருமானின் திருப்பரங்குன்றத்தில் எழும் இசைச் சீருக்கு ஏற்ப ஆடும் மயில் குரல் எழுப்பும் என்றும் நீல மணியைப் போன்ற நிறமுடைய மயிலையும், உயர்ந்த கோழிக் கொடியையும், பிணிமுக ஊர்தியையும் உடைய இறைவன் என்றும் கூறப்பட்டுள்ள இப்பாடல் மூலம் அறியலாம்.

**கோழி**

பறவைகளின் உருவங்களை கொடியில் வரைந்து இருப்பதை பரிபாடலில்,

**"அல்லல் இல் அலைன் தன் மெய்யின் பிரித்துச்**
**செல்வ வாரணம் கொடுத்தேன்............"**
**"கொடி ஏற்று வாரணம் கொள் கவழ மிச்சில்"** (பரிபா.19)

என்ற இப்பாடலில் போரில் வெற்றி பெறுபவர் வெற்றிக்கு அறிகுறியாய் உயர்த்துவது கொடி ஆதலால் தீக்கடவுள் முருகனுக்குக் கொடி ஆவதற்கு செல்வ வாரணம் கொடுத்தான் என்ற கருத்தும், முருகனின் சேவல் எழுதப் பட்ட கொடியை நினக்கு உரிய கோயில் யானையின் மேல் ஏற்றப்படும் என்றும் கூறப்பட்டுள்ளது.

**வள்ளுவரின் மயில் பற்றிய குறிப்புகள்**

பெண்ணின் சாயலுக்கு மயிலை உவமையாக்கியிருக்கும் சங்கப்புலவர்களைப் போன்று வள்ளுவரும் மயில் பற்றியும் மயிலின் தொகைப் பற்றியும் வலியறிதல் அதிகாரத்தில் கூறியுள்ளார். "மயிலின் தொகையை மயிற்பீலி என்னல் வழக்கு. அது மிக மென்மையுடையது. எனவே கனமற்றது, பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டிலிருந்து எகிப்து முதலிய நாடுகட்குக் கடல் கடந்து ஏற்றுமதியான பொருள்களில் மயில் தோகையும் ஒன்றென்பதைப் பிறநாட்டு வல்லுநரின் வரலாற்று ஆராய்ச்சியால் ஒருவாறு நாம் அறிகிறோம். மொழியாராய்ச்சித் துறையில் புகழ் பெற்ற பல அறிஞர்கள் ஈபுரு மொழியில் காணப்படும் 'துகி' என்ற சொல் நம் நாட்டுத் தோகை என்பதன் திரிபே எனக் கூறுகின்றனர். எனவே பண்டை நாளில் தமிழ் நாட்டிலிருந்து பிற நாடுகட்கு மயில் தோகை ஏற்றுமதியாயிற்று என்ற உண்மை பல சான்றுகளால் உறுதி செய்யப்பட்டுள்ள ஒரு பழங்கருத்து"[25.] இக்கருத்துக்கு அரண்செய்யும் மற்றொரு சான்று வள்ளுவர் மயிற்பீலியை வண்டியில் ஏற்றிச் செல்லும் வழக்கத்தை,

**"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்**
**சால மிகுத்துப் பெயின்" (குறள், 475)**

என்ற குறளில் மயிற்பீலி மிக நொய்மையுடையது என்பதும், அஃது ஏற்றப்படுகின்ற சகடம் அல்லது வண்டி வன்மையுடையதென்பதும், அவ்வண்டி தாங்கும் அளவிற்கு மேல் ஏற்றினால், மிக மென்மையான பீலியானாலும் அதன் அச்சு முறிந்து போகும் என்று கூறியுள்ளார்.

**மயிற்தோகையின் பயன்**

**"நீடலர் - வாழி, தோழி! – ஆகு இயல்**
**மட மயில் ஒழித்த பீலி வார்ந்து, தம்**
**சிலை மாண் வல் வில் சுற்றி, பல மாண்**
**அம்புடைக் கையர் அரண் பல நூறி,**
**நன் கலம் தரூஉம் வயவர் பெருமகன்" (அகநா.69)**

ஆய் என்பவன் ஒளி வீசும் மணிகள் பதித்த பூணினை அணிந்தவன், அவனுடைய மறவர்கள், ஆடும் இயல்புடைய இளமை பொருந்திய மயில் கழித்த தோகையினை

உரித்துத் தமது மிக்க ஒலி ஒலிக்கும் வலிய வில்லில் சுற்றுவர், சுற்றிச் சிறப்பினைப் பெற்ற அம்புகள் பலவற்றை செய்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. மேலும்,

**"ஒல்குஇயல் மடமயில் ஒழித்த பீலி,**
**வான்போழ் வல்வில் சுற்றி, நோன்சிலை**
**அவ்வார விளிம்பிற்கு அமைந்த நொவீவு இயல்" (அகநா.281)**
**"தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்" (அகநா.249)**

பகை உணர்வுமிக்க வடுகர்கள், தளர்ந்து அசைந்து அசைந்து செல்லும் தன்மை வாய்ந்த இளமயில் கழித்த தோகையின் கண்டவாரினால் வலிமை பொருந்திய வில்லில் வைத்துச் சுற்றிக் கட்டினர், அவ்வில்லின் நாணின் விளிம்பிற்கு நன்கு பொருந்திய ஒலி எழுப்பி விரைந்து செல்லும் கொடி அம்புகளைத் தொகுத்ததையும், மயில் இறகால் தொடுக்கப் பெற்ற மாலையை அணிந்த வீரர்கள் என்றும் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

**"புரி மென் பீலிப் போழ் புனை அடையல்"**
**"விடு பொறி மஞ்ஞை பெயர்பு உடன் ஆட" (பரிபா.21)**

திருப்பறங்குன்றத்தில் ஒலிக்கும் முரசின் ஓசைக்கு மேக ஒலி உண்டானதும் ஒளிரும் புள்ளிகளை உடைய மயில்கள் மேலே எடுத்து வீசும் ஆலவட்டம் போன்று தம் இரண்டு இறகுகளையும் விரித்து ஒன்றாய் கூடி எழுந்து கூத்தாடும் மயிலின் இறகின் பயனாக பாம்பின் தோலோடு மயிற்பீலிப் பிளவுகளும் கொண்டு மென்மையாக இயற்றப்பட்ட ஆடையலாகிய செருப்பு செய்யப்படும் செய்தி காணப்படுகிறது.

**மயில் தோகையின் சிறப்பு**

**"நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்**
**கொடிநுடங்கு மறுகின் கூடற் குடாஅது**
**பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய**
**ஓடியா விழவின், நெடியோன் குன்றத்து" (அகநா.149)**

அச்செழியனது, கொடிகள் அசைந்தாடும் வீதிகளையுடைய கூடல் மாநகரின் மேற்குத் திசையில் பல புள்ளிகளையுடைய செல்லும் மயிற்கொடி விளங்கித் தோன்ற இடைவிடாது நடைபெறும் விழாக்களையுடைய முருகனது திருப்பரங்குன்றம்

அமைந்துள்ளது என்று மயிற்கொடி சிறப்பாக கூறப்பட்டுள்ளது. மேலும் அகநானூற்றுப் பாடலில்,

**"பாகல் ஆர்கைப் பறைக் கட் பீலித்**
**தோகைக் காவின் துளுநாட்டு அன்ன" (அகநா.15)**

கோசர்தம் துளுநாடு, ஆர்க்கினைத் தலையிற் கொண்ட திரண்ட பசுமையான காய்முற்றின் பாகற் பழத்தைத் தின்னும் பறை போன்ற வட்டமான கண்களைக் கொண்ட தோகையினையுடைய மயில்கள் மிக்க சோலைகளையுடையது என்று கூறப்பட்டுள்ளது. இத்தகைய "மயிலின் தோகையில் 'கண்கள்' போன்ற வடிவமைப்புகள் இருக்கும். தன்னை ஓர் எதிரி நெருங்கும் பொழுது மயில் தன் தோகையை உயர்த்திக் காட்டும். அப்பொழுது அதன் **'கண்கள்'** பதுங்கும் எதிரியைப் பார்த்து முறைக்கும்,இது ஏறத்தாழ எப்பொழுதுமே எதிரியை பின்வாங்கச் செய்யும்"[26] என்கிறார் ஆர்.ராஜகோபாலன். மேலும் மயிலின் தோகையில் காணப்படும் கண்களின் எண்ணிக்கை சுமார் 144 இருந்தால் மட்டுமே பெண் மயில்கள் இனப்பெருக்கம் செய்யும் என்றும் 144லிற்கு குறைவாக இருப்பின் அந்த ஆண் மயிலை பெண் தனது இணையாகத் தேர்வு செய்வதில்லை என்பதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

**கனவு குறித்த நம்பிக்கைகள்**

ஒவ்வொரு மனிதனுக்கும் தூக்கம் என்பது அன்றாட வாழ்வின் தொடர் நிகழ்வாகும். அத்தகைய தூக்கம் பாதிக்கப்படுமாயின் எதிர்ச்செயலாகக் கனவு தோன்றுகிறது. அஜீரணக் கோளாறு காரணமாகவும் கனவுவரும் என்ற முதுமொழி இருப்பதும் நாம் அறிந்ததே. அவ்வகையில் தெய்வத்தின் விருப்பத்தினலேயே கனவுகள் உருவாகிறது என்று நம்பிய நம் மூதாதையர் அதன் காரணியாது என அறிய முயற்சிக்காமல் கனவு ஒரு நம்பிக்கை சார்ந்த விஷயமாகவே இருந்துள்ளது. அஃது விஞ்ஞானத்தின் பிரச்சனையான பின்பு "1897 ஜீலையிலிருந்து தான், தன் தந்தையின் மறைவுக்குப் பிறகு ஃபிராய்ட் கனவுகளைப் பற்றிய தனது ஆராய்ச்சியில் இறங்கினார். பிரபஞ்ச மனதை அறிந்து கொள்ள உதவும் ராஜபாட்டை என்று கனவுகளை அவர் வர்ணித்தார். 1899ல் வெளியான கனவுகளின் விளக்கம் (The Interpretation of Dreams) என்ற நூல் தான் இவரின் தலைசிறந்த படைப்பு அல்லது பங்களிப்பு என்று அறிஞர் பலராலும் கருதப்படுகிறது. கனவுகள் யாவும் நனவில் நிறைவேறாத ஆசைகளை நிறைவேற்றும் களமாக, வடிகாலாக அமைகிறது எனவும்

அந்த ஆசைகள் பெரும்பாலும் பாலுணர்வு சம்பந்தபட்டதாகவே உள்ளன என்றும் கண்டறிந்து கூறினார். ∴பிராய்டின் கோட்பாடுகளில் தவறு உள்ளது என்பது பின்னால் நிரூபிக்கப்பட்டாலும், கனவு பற்றி விஞ்ஞானபூர்வமாக அறிந்து கொள்ள ∴ப்ராய்டின் சிந்தனையை பரிச்சயம் கொள்வது முதலில் அவசியம்"[27] என்று கனவுகளின் விளக்கம் என்ற புத்தகத்தில் ∴ப்ராய்ட் கூறியுள்ளதாக தமிழில் மொழிபெயர்ப்பு செய்த நாகூர் ரூமி என்பவர் குறிப்பிட்டிருக்கிறார். ஆராய்ச்சியாளர் மோரி என்பவர் நாம் சொன்னதும், செய்ததும், செய்ய நினைப்பதுமே கனவாக வரும் என்ற கருத்தை முன்வைத்துள்ளார்.

"அன்னத்தைக் கனவில் கண்டால் வாழ்க்கையில் முன்னேறி நல்ல நிலையை அடையலாம் என்றும், வாழ்க்கை சந்தோஷத்துடன் குதூகலமாக இருக்கும் என்றும், மனைவி மக்கள் குடும்பத்தலைவரின் பேச்சுக்கு கட்டுபட்டு இருப்பர் என்றும், தொழிலில் லாபம், உத்தியோகத்தில் உயர்வும் கிடைக்கும்.

விடியலை அறிவிக்க உதவும் பறவையாக இருப்பது சேவல். இவ்வாறு கூரைமீது அமர்ந்து கூவுவதாகக் கனவு கண்டால் திருமணமாகாதவர்களுக்குத் திருமணம் நடைபெறும், கணவன் மனைவி சண்டை விலகி சமாதானமாவர், மகன் அல்லது மகள் பட்டப்படிப்பிற்கு செல்வர், செல்வம் கொழிப்பதற்கான அறிகுறியாம். மேலும் வீட்டின் முன்பு உலாவுவதாகக் கனவு வருமாயின், வீட்டில் விசேஷ நிகழ்ச்சி போன்று மனதிற்கு சந்தோஷம் தரக்கூடிய காரியங்கள் நடைபெறும் என்றும் சேவல் வீட்டினுள் வந்திருப்பதாகக் கனவு கண்டால் எதிர்பராத யோகம் மற்றும் புதிய மாற்றத்தை அடைய வாய்ப்புள்ளது. சேவல்கள் அமைதியாக அமர்ந்திருப்பதாகத் தோன்றினால் சண்டை சச்சரவுடன் இருந்தவர்கள் நட்புடன் பழகுவர். சேவலைக் கனவில் காண்பதால் ஏற்படும் நன்மைகளைப் போன்று தீமைகளும் உண்டு. அவை இரண்டு சேவல் சண்டை போடுவதாகக் கனவு கண்டால் தொழில் புரியும் இடத்திலோ அல்லது நண்பர்களிடமோ விரோதம் ஏற்படலாம்.

பெட்டைக் கோழி வீட்டிற்குள் புகுந்த பின்னர் விரட்டியும் வெளியில் செல்லாதது போன்று கனவு கண்டால் வீட்டிற்கு லட்சுமி வந்ததாகவும், செல்வம் சேரும் என்றும் நம்பிக்கையும், குஞ்சுகளுடன் இரையைக் கிளறித் தேடுவதாகத் தோன்றினால் குடும்பத் தகராறுகள் தீர்ந்து மகிழ்ச்சி உண்டாகும்.

வாத்து மந்தமானப் பறவையாகக் கருதப்படும் ஒரு இனமாகும். இவ்வாத்தை கனவில் கண்டால் வாழ்க்கையில் முன்னேற்றமே ஏற்படாது என்றும் தொழில் போன்றவற்றில் நஷ்டம் ஏற்பட்டு மனதில் நிம்மதியின்றி போகும்”[28]. கனவுகள் நம்பிக்கையை கலித்தொகையில்,

**“அரும்பு அவிழ் பூஞ் சினைதோறும் இருங்குயில்**
**ஆனாது அகவும் பொழுதினான் மேவர............” (கலித்.92)**

என்ற இப்பாடல் வரிகளில் கரிய குயில்கள் அரும்பு அவிழ்ந்த மலர்களை உடைய கொம்புகளில் அமர்ந்து கொண்டு விடாமல் தம் பெண் பறவையை அழைக்கும் இளவேனில் என்று பரத்தையிடம் சென்று திரும்பிய தலைவன் தலைவியின் ஊடலை நீக்கத் தான் கண்ட கனவை கூறித் தலைவியை மனம் மாற்றியதாக கூறியுள்ள செய்தி மூலம் அறியலாம்.

**தொகுப்புரை**

- அச்சத்தின் காரணமாக மனிதனிடத்தில் நம்பிக்கை தோன்றியுள்ளதாகத் தெரிந்தாலும் நம்பிக்கையின் தோற்றகாலத்தை அறுதியிட்டு கூறமுடியாத நிலை உள்ளதும் தெரிந்து கொள்ளப்பட்டது.
- முருகப்பெருமான் மீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையின் காரணமாக மயிலை வாகனமாகக் கொண்ட முருகன் மேல் சூளுரைத்தால் அஃது தீமையை உண்டு பண்ணும் என்று நம்புகின்றனர்.
- மனிதர்கள் தங்களின் வெற்றி தோல்விக்கு இயற்கை சார்ந்தவையானப் பறவையினம் போன்ற அஃறிணை உயிர்களோடு ஒப்பிட்டு சகுனம் பார்க்கும் முறை இருந்துள்ளதைக் காணமுடிகிறது.
- நிமித்தங்கள் நாள் நிமித்தம், புள் நிமித்தம், பிறவற்றின் நிமித்தம் போன்ற மூன்று வகைகளைக் கொண்டுள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.
- பிந்நாளில் வர இருக்கும் நன்மை, தீமைகளை முன்னறிவுறுத்தும் குறியாக நிமித்தக் குறியீடு இருந்துள்ளமை விளக்கப்பட்டுள்ளது.
- தலைவன் பொருள்வயின் பிரிந்தமைக்காக கடன் நேர்ந்து கொள்ளுதல், காப்பு நாண் அணிதல், புள் நிமித்தம் பார்த்தல், விரிச்சி கேட்டல் போன்ற கடவுள் வழிபாட்டுச் செயல்களால் தலைவியிடம் நம்பிக்கை காணப்பட்டதை அறியலாம்.
- பல்லியின் ஓசையும், புள் நிமித்தங்களையும் தலைவி போற்றித் தொழுது வாழ்பவள் என்ற தலைவன் கூற்று மூலம் தலைவியின் நம்பிக்கையை பூர்த்தி செய்ய வேண்டும் எண்ணத்தைக் காணலாம்.
- தலைவியை ஆற்றுவிப்பதற்காக காக்கைக்குப் பலிச்சோறு இட்டு அதன் ஒலியை நிமித்தமாகக் காட்டுவதையும், விருந்தினரின் வருகையைக் கூறுமாறு கேட்டு பலியுணவு இட்டுள்ளதையும் அறியமுடிகிறது.
- மகளிரிடம் காணப்படும் நம்பிக்கைகளாக பிறை தொழுதல், காக்கைக்குச் சோறிடுதல், கட்டுவைத்தும், கழங்கு வைத்தும் குறி பார்த்துள்ளனர் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது.

❖ பெண்கள் பலிசோறு, ஆட்டு மாமிசம் போன்றவற்றைப் படைத்திருப்பதைப் பார்க்கும் போது மகளிரிடையே காணப்பட்ட நம்பிக்கைக் குறித்து அறியமுடிகிறது.

❖ விழாக்காலங்களில் ஆட்டினை அறுத்து கோழிக் கொடியை உயர்த்தியதாகக் கூறப்பட்டுள்ள செய்தியின் மூலம் தெய்வ வழிபாட்டின் போது உயிர் பலியிடும் வழக்கும் தொன்றுதொட்டு இருந்துள்ளதை அறியலாம்.

❖ அன்றில், ஆந்தை போன்றவையும், சில நேரங்களில் மயில் அகவுவதும் வருத்தம் கருவதாகவும், தீ நிமித்தம் உரைப்பதாகவும் தமிழரிடையே காணப்பட்ட நம்பிக்கையைப் போல கிரேக்கரும், உரோமானியர்களும் நம்பிக்கை கொண்டிருந்தது குறித்து தெரிந்து கொள்ளமுடிகிறது.

❖ தினைகள் சேதமடைவது அறமாக இருந்துள்ளதன் காரணமாகவே தினைகளைச் சேதமடையச் செய்யும் பறவைகளை ஓட்டியுள்ளனர் என்பதை அறியலாம்.

❖ தேன் பெருகும் காலம், விடியலை அறிவித்தல், தினைப்புனத்தில் காவல் செய்வோருக்கு காலம் உணர்த்துதல் போன்ற செயல்களைக் குயிலும், காட்டுச்சேவலும் செய்திருப்பதைக் காணமுடிகிறது.

❖ பருவம் வந்ததை உணர்த்த குயில் கூவுவதாகவும், குருகு உயர பறத்தல் பிரிந்தவரின் வருகையை உணர்த்துவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

❖ மாமரத்தின் தளிரை உண்பதால் குயிலின் குரல் இனிதாகும் என்பதாகவும் அதனால் மாந்தளிரைத் திண்றுவிட்டு குயில் கூவுவதாகவும் கூறப்பட்டுள்ளது புலவர்களின் கற்பனையை மேம்படுத்தியுள்ளது எனலாம்.

❖ இளவேனிற் காலத்தில் பிரிந்திருக்கும் தலைவன், தலைவிக்கு குயில் கூவுவது துன்பத்தைத் தருவதாகவும், தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியை குயில் இகழ்வதாகவும் இடம்பெற்றுள்ள பாடல்கள் நம்மை சிந்திக்க செய்பவையாக உள்ளன.

❖ அன்னத்தின் தூவி கொண்டு மெல்லணை செய்துள்ளமையும், அன்னத்தூவி வெப்பத்தன்மை கொண்டதனாலேயே இதன் தூவி கொண்டு மெல்லணை செய்யப்பட்டுள்ளதையும் அறியமுடிகிறது.

- ❖ சங்க மகளிர் நாரைகளை ஓட்டி விளையாடியுள்ளதையும், காடையை வளர்த்து அவற்றிற்கு போரிடப் பயிற்சியளித்து அவற்றை ஒன்றொடு ஒன்று மோதவிட்டு வேடிக்கை பார்ப்பதையும் பொழுது போக்காகக் கொண்டிருந்தது விளக்கப்பட்டுள்ளது.
- ❖ இலக்கியங்களைப் போன்று திருவள்ளுவரும் தனது திருக்குறளில் வலியறிதல் அதிகாரத்தில் மயில் பற்றியும், மயிலின் தோகை பற்றியும் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது.
- ❖ மயிலின் பீலியை சகடம் என்னும் வண்டியைப் பயன்படுத்திப் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளது என்பதும் கண்டறியப்பட்டுள்ளது.
- ❖ அன்னம், சேவல், கோழி, குயில் போன்ற பிற பறவைகளையும் கனவில் கண்டால் நன்னிமித்தம் மற்றும் தீ நிமித்தம் தோன்றும் என்ற நம்பிக்கை இருந்துள்ளதும் விளக்கப்பட்டுள்ளது.

**குறிப்புகள்**

1. ஆறு.இராமநாதன்., நாட்டுப்புற நம்பிக்கைகள்., பக்க -215:216
2. க.காந்தி., தமிழரிக் பழக்க வழக்கம் நம்பிக்கைகள் பக் -104
3. ந.கடிகாசலம்., சங்கப் புலவரின் பல்துறை அறிவு சங்க இலக்கியத்தில் நிமித்தக்குறியீடு., பக்-68
4. ந.கடிகாசலம்., சங்கப் புலவரின் பல்துறை அறிவு சங்க இலக்கியத்தில் நிமித்தக்குறியீடு., பக் -69
5. பூ.அமிர்தலிங்கன்., வள்ளுவர் காட்டும் உயிரினங்கள்., பக் -92
6. திலகவதி.க., சங்ககால மகளிர் வாழ்வியல், பக்க -411
7. பாரதியார் கவிதைகள்., பக் -400
8. K.A.Nilakanda sastri, Foreign Notices of South India, p-170.
9. இரா.இளங்குமரனார்., தமிழர் வாழ்வியல் இலக்கணம்., பக் -96
10. எ.பாலுச்சாமி.,மருதத்தில் மக்கள் வாழ்வியல்., பக்-26
11. Xavier S.Thaninayagam, Nature in ancient tamil poetry, p-88
12. சுப்புரெட்டியார்.ந., அகத்திணைக் கொள்கைகள்., பக் -123
13. திலகவதி.க., சங்ககால மகளிர் வாழ்வியல்., பக் -411
14. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக்- 93
15. ஆர்.ராஜகோபாலன்., 7வது அறிவு., பக் -204
16. முருகு சுப்பிரமணியம்., பந்தயப் புறாக்கள்., பக் -5
17. வேங்கடசாமி.சீனி மயிலை., பழங்காலத் தமிழர் வாணிகம்., பக் - 18
18. பூ.அமிர்தலிங்கன்., வள்ளுவர் காட்டும் உயிரினம்., பக்-90
19. கு.ராஜாராம்.,பறவைகள் பற்றிய அறிவியல்., பக்-23
20. மேலது பக்-32
21. மேலது பக் -110

22. ந.வேங்கடேசன்., சங்க நூலாய்வும் சாமியும்., பக் -55

23. மேலது பக் -57

24. பி.எல்.சாமி., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்., பக் -103

25. ரத்னம்.க, தமிழ்நாட்டுப் பறவைகள் பக். 61

26. பூ.அமிர்தலிங்கன்., வள்ளுவர் காட்டும் உயிரினம்., பக்-87:88

27. ஆர்.ராஜகோபாலன்., 7வது அறிவு., பக்-66

28. நாகூர் ரூமி., கனவுகள் விளக்கம்., பக் -9:11

29. அனுமந்தராயர்., கனவுகள் விளக்கம்., பக்க -28:33

## இயல் - ஐந்து

## பறவைகளின் வாழிட அமைப்பும் - பாதுகாப்பும்

பறவைகள் ஓர் அதிசய உயிரினம். இந்த உயிரினங்கள் உயரிய வர்க்கமாகக் கருதப்படும் முதுகெலும்புள்ள வர்க்கத்தைச் சேர்ந்தவை. முதுகெலும்புள்ள இனங்களில் அதிகமான எண்ணிக்கைக் கொண்டது மீன்கள். இவற்றிற்கு அடுத்தபடியான எண்ணிக்கையுடையதாகப் பறவைகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியப் புலவர்கள் தம்மைச்சுற்றி உண்மையென்று உணர்ந்தவற்றையே உவமையாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். அவ்வகையில் படைக்கப்பட்டுள்ளப் பறவைகளில் சிலவற்றைக் குறித்தும், அவற்றின் வாழிடம் குறித்தும், பறவைகளுக்கு ஏற்படும் பாதிப்புகள், பறவைகளைப் பாதிப்பிலிருந்து காப்பதற்கான வழிமுறைகள் போன்றவற்றை அறிந்துகொள்ளும் வகையில் இவ்வியல் அமைந்துள்ளது.

### சங்க இலக்கிய பறவைகளின் வாழிடத்திலுள்ள தாவரஅமைப்பு

உலகில் நாகரிகம் தோன்றியதற்கு அடிப்படை நதிக்கரைகள். நதிக்கரைகளுக்கு அடுத்த படிநிலையாக இருப்பது தாவரங்களாகும். சிற்றுயிர்கள் முதல் பேருயிர்கள் வரை அனைத்து உயிர்களுக்கும் காப்பிடங்கள், வாழ்வியல், சூழலியல் போன்ற அடிப்படை ஆதாரமாக இருப்பது காடுகளும் தாவரங்களும் என்பது ஏற்புடையதாகும் என்பதற்கு தமிழ்நாட்டுத் தாவரங்கள் என்ற நூலில் ச.சண்முகசுந்தரம் அவர்கள் "வனச் செல்வங்களை உயிர்ப்பவை, உயிரற்றவை என இரண்டு பெரும் பிரிவுகளாக வகைப்படுத்தலாம். விலங்குகள், பறவைகள் மற்றும் தாவரங்கள் என்பவை உயிர்ப்பவை. இவை போக எஞ்சியுள்ளவை உயிரற்றவை ஆகின்றன. உயிர்ப்புச் செல்வங்கள் யாவற்றிற்கும் தாவரங்களே அடிப்படையான உயிரூற்றுக் களமாகச் செயல்படுவதாகக் கூறியுள்ளார்"[1].

சங்க நூல்களில் ஒரே ஒரு பாடலில் அரையம் என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இதற்குக் குறிப்புரை எழுதிய உ.வே.சா அரையம் என்பதற்கு அரசமரம் என்ற பொருள் கூறியுள்ளார். மேலும்

**"வேனில் அரையத்து இலையொலி வெரீஇப்**
**போகில் புகாவுண்ணாது, பிறிவுபுலம் படரும்**
**வெம்பலை அருஞ்சுரம் நலியாது". (ஐங்.325)**

இந்த பாடலில் “காற்று வீசும் போது அரசமரம் ஓசையிடுவது உண்மையான நிகழ்ச்சியே, அரசமரத்தின் இலைக்காம்பின் அமைப்பு அதன் இலையைச் சுழற்றி அடிக்கும் தன்மையுடைய தால் மற்ற மரங்களின் இலைகளைவிட மிகுந்த ஓசை செய்யும்”[2]. இதையே வேனிலில் வீசுகின்ற காற்றில் அரசமரத்தில் இலைகள் ஓசையிடுவதைக் கேட்டு, போகில் என்ற ஒருவகைப் புறா அதன் உணவான பழத்தைத் தின்னாது, பிற இடம் செல்லும் என்ற செய்தி குறிப்பிட்டுள்ளது.

**பறவைகளின் இருப்பிடம்**

பறவைகள் கூட்டமாகச் சேர்ந்து வாழும் பண்புடையவை. இவை முட்டையிடும் பருவகாலத்தில் மட்டுமே பறகைள் தன் ஜோடியோடு தனித்தனியாகச் சென்றுவிடும். பழங்கள் நிறைந்த மரங்களில் கிளிகள் கூட்டமாக அமா்ந்திருக்கும். தந்திக் கம்பிகள் தோறும் தூக்கணாங்குருவிகள் கூட்டத்தோடு வரிசையாக இருக்கும். இனப்பெருக்கக் காலத்தில் மட்டுமே பறவைகள் தங்களுக்கான கூடுகளைக்கட்டுகின்றன. சில பறவைகள் அப்போதும் கூடுகட்டுவதில்லை. மாமிசம் உண்ணும் பறவைகளில் சில மலை உச்சியில் கூடு அமைத்துக் கொள்கின்றன. சில பறவைகள் சமமான பரப்புகளில் மேடை போன்றும், மரங்களிலும் தம் கூட்டைக்கட்டுகின்றன. சில பறவைகள் மரப் பொந்துகளையும், பாறைச் சந்துகளையும் வாழிடமாக அமைந்துக் கொண்டு அதில் முட்டைகள் இட்டு தன் இனத்தைப் பெருக்கிக் கொள்கின்றன.

**அன்னம்**

தமிழகத்தில் மழைக்காலத்தில் வாத்து போன்ற பல பறவைகளைக் காணலாம். இவை படகு போன்ற உடலமைப்பைக் கொண்டிருக்கும், நீரில் நன்கு நீந்தும் தன்மையுடையது. வானிலும் பறக்கும் இயல்புடையது. சங்க இலக்கியங்களில் அன்னமென்று அழைக்கப்பட்ட பறவைகள் பிற்காலத்தில் தாராவாக மாற்றம் பெற்றுள்ளது. இது மருத நிலப் பறவையாகக் கூறப்பட்டிருந்தாலும் சில இடங்களில் திணைமாறியும் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்னங்கள் மிகுதியாக குளங்களிலும், பொய்கைகளிலும், கடற்கரை மணற்பரப்பிலும் இருந்துள்ளதை,

**“குறுங் கால் அன்னம் குவவு மணற் சேக்கும்**
**கடல் சூழ் மண்டிலம்” (கலித்.300)**

குறுகிய கால்களையுடைய அன்னப்பறவைகள் குவிந்து சேரும் தன்மை உடைய மணலின் கண் தங்கி இருக்கும் என்று கடல் சூழ் நிலமே பெறுவதாயினும் யான்

நின்னைப் பிரியேன் என்று தலைவன் உறுதியளித்ததாக அமைந்திருக்கும் இப்பாடல் விளக்குகிறது.

**அன்றில் பறவையின் இருப்பிடம்**

அன்றில் பறவை கடற்கரையிலும், சிற்றூர்களிலும் காணப்படும் பனைமரங்களிலும் வாழ்ந்து வந்ததாகச் சங்க இலக்கியப்பாடல்களில் குறிப்புகள் இடம்பெற்றிருப்பதை,

**"மன்றலம் பெண்ணை மடல் சேர் வாழ்க்கை**
**அன்றிலும் பையென நரலும்…………………" (குறுந்.177)**

மன்றத்தின் கண் உள்ள பனை மரத்தின் மடலில் வாழும் அன்றில் பறவை மெல்லக் கூவத் தொடங்கியதும், அஃது தலைவனின் வரவுக் காலம் உணர்ந்த தோழி தலைவிக்குக் கூறி அவளை ஆற்றியதாகவும் கூறப்பட்டுள்ளது போன்று,

**"பெண்ணை ஓங்கிய வெண் மணற் படப்பை**
**அன்றில் அகவும் ஆங்கண்**
**சிறு குரல் நெய்தல் எம் பெருங்கழி நாட்டே" (அகநா.120)**
**"செக்கர் தோன்றத் துணைபுணர் அன்றில்**
**எக்கர்ப் பெண்ணை அகமடல் சேர" (அகநா.260)**
**"……………………………….பனைமிசை**
**அன்றில் சேக்கும் முன்றில்…" (அகநா.360)**

என்று வெள்ளிய மணல் பரவிய தோட்டங்களில் உள்ள உயர்ந்த பனை மரங்களில் வாழும் அன்றில் பறவை தன் துணையை அழைக்கும் நெய்தல் நிலம் என்று கூறப்பட்டுள்ளதையும், சிவந்த வானம் தோன்றும் மாலை நேரத்தில் தன் துணையைப் பிரியாமல் கூடியிருக்கும் அன்றில் பறவையானது மணல் மேட்டில் உள்ள பனைமரத்தின் உள்மடலில் வந்து அடையும் என்றும், பனை மரத்தின் மீது அன்றில் பறவை தங்கியிருக்கும் என்று இப்பாடலடிகளில் கூறப்பட்டுள்ளது. இதற்கு "கரிய கால்களை உடைய வெண்ணிற நாரைகள் கழியில் மீன்களைத் தேர்ந்து உண்டு தங்கியிருக்கின்றன. பிறகு கரையில் தாழை மரத்தில் கூட்டமாகக் கூடியிருந்து, கடல் அலைகளின் ஒலியினால் தூங்கும்"[3] என்கிறார் மு. வரதராசன் அவர்கள். இவ்வன்றில் பறவை சிறு குச்சிகளைக் கொண்டு அடர்ந்த மரங்களில் யாரும் காணமுடியாதபடி இலை, மட்டை முதலிய மறைவான சூழலில் கூடு கட்டுவதாகப் பறவை நூலார் கூறியுள்ளனர்.

**“மை இரும் பனைமிசைப் பைதல உயவும்**
**அன்றிலும்………………………………….” (நற்.335)**

பனை மரத்தின் மேலிருந்து அன்றில் பறவை ஒலிப்பது தலைவிக்கு காமத்தை மிகுதிபடுத்துவதாகக் கூறியுள்ளதாகவும் கூறப்பட்டுள்ள பாடல்கள் மூலம் அன்றிலின் வாழிடம் குறித்து அறியமுடிகிறது.

**நாரையின் வாழிட அமைப்பு**

நாரைகள் பிப்ரவரி, மார்ச் மாதங்களில் சதுப்பு நிலங்களிலும், களிமண் நிலங்களிலும், நீர்நிலைகள் நிறைந்த திறந்தவெளிப் பகுதிகளிலும் அகன்ற மேடை போன்று கூடு அமைத்து அவற்றை இருப்பிடங்களாகக் கொண்டுள்ளன. மரக்கிளைகளில் கூட்டம் கூட்டமாக கூடு கட்டியிருப்பதை வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயத்தில் காணலாம். இதே போன்று நாரையினங்களின் வாழிடமாகச் சங்க இலக்கியப் பாடல்கள் மருத நிலத்துப் பொய்கைகளிலும், கழனிகளிலும், பழனங்களிலும் வசிப்பதாகவும், அவற்றின் வசிப்பிடத்திற்கேற்ப கழனி நாரை, பழன நாரை என குறிப்பிட்டுள்ளதை,

**“பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை**
**கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்” (நற்.180)**
**“இரை ஆர் குருகின் நிரை பறைத் தொழுதி**
**வாங்கு மடற் மடற் குடம்பை, தூங்கு இருள் துவன்” (நற்.123)**

என்றும் குருகின் நிறைவான பறவைக்கூட்டம் பெரிய கழியில் இரை தின்ற பின் வளைந்த பனை மடல்களில் கட்டிய கூட்டில் இரவு நேரத்தில் நெருங்கியிருக்கும் என்றும் நெய்தல் திணையின் சூழலில் குறிப்பிடப்பட்டுள்ளதையும்,

**“கானல், மாலைக் கழிப் பூக் கூம்ப**
**நீல் நிறப் பெருங் கடல் பாடு எழுந்து ஒலிப்ப**
**மீன் ஆர் குருகின் மென் பறைத் தொழுதி**
**குவை இரும் புன்னைக் குடம்பை சேர……….” (அகநா.40)**

கடற்கரைக் கழியில் காணப்படும் மீன்களை உண்ணும் மென்மையான இறகையுடைய குருகு பறவைக் கூட்டம் பெரிய புன்னை மரத்தில் தான் அமைத்திருக்கும் கூடுகளைச் சென்று அடையும் மாலை நேரம் என இந் நெய்தல் திணைப் பாடலிலும்,

**"உளைப்பூ மருதத்துக் கிளைக் குருகு இருக்கும்….." (ஐங்.7)**

ஊளை பொருந்திய பூக்களையுடைய மருத மரத்தில் குருகுப் பறவைகள் தம் சுற்றத்துடன் சூழ்ந்து இருக்கும் என்று கூறியிருப்பதன் மூலம் மருத மரம் குருகு தங்கியிருப்பதற்கு ஆதாரமாக இருந்துள்ளதைக் காண முடிகிறது. மேலும்,

**"மீனுண் குருகு இளங்கானல் அல்கும்" (ஐங்.184)**
**"இருங்கழிச் சேயிறா இனப் புள்ளாரும்" (ஐங்.188)**

மீனை உண்ணும் குருகுப் பறவைகள். தன் இனத்துடன் கூடிக் கானலில் தங்கும் என்றும், கரிய உப்பங்கழியில் குருகுகள் செம்மையான இறாமீன்களை உண்ணும் கூறியுள்ளனர். இவ்வாறு ஓய்வெடுக்கும் அச்சமயங்களில் அவற்றில் நிகழும் மாற்றங்குறித்து முனைவர் செந்தமிழ்க் கோதை அவர்கள் "உயிரினங்களுக்கு ஓய்வின்போது வளர்சிதை மாற்ற வினைநிகழ்த்துவதற்கு மட்டும் தேவைப்படும் ஆற்றல் வீதமே அடிப்படை வளர்சிதை மாற்ற ஆற்றல் வீதமாகும். குறிப்பாக உயிரினங்களின் மூச்சுயிர்த்தலுக்குத் தேவைப்படும் ஆற்றல் வீதத்தை இது குறிக்கும். இந்த ஆற்றல் தேவை வீதம் உயிரினத்தின் உடற்கட்டமைப்பைப் பொறுத்தமைகிறது. முதிர்நிலை மனிதனுக்குத் தேவைப்படும் வளர்சிதைமொற்ற ஆற்றல் வீதம் 1300 – 1500 கிலோ கலோரிகளாகும். பெரிய விலங்குகளை விடச் சிறிய விலங்குகளுக்கு அதிக அடிப்படை வளர்சிதை மாற்ற ஆற்றல் வீதம் தேவைப்படுகிறது"[4] என்று கூறியிருக்கிறார். மேலும்,

**"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
**காணிய சென்ற மடநடை நாரை" (ஐங்.154)**

வெள்ளாங்குருகின் குஞ்சு செத்ததற்காக அதைத் தன் குஞ்சு என்று எண்ணி காண்பதற்குச் சென்ற மடப்பம் பொருந்திய நடை கொண்ட நாரை கடற்கரை சோலையில் தங்கும் என கூறப்பட்டுள்ளதையும்,

**"இறவு அருந்தி எழுந்த கருங்கால் வெண் குருகு**
**கருங்கோட்டுப் புன்னை இறைகொண்டனவே……" (நற்.67)**

கரிய கால்களையுடைய வெண்குருகுகள் இறாமீனைத்தின்று விட்டு தம் சிறகுகளைக் கொண்டு வெண்மையான உப்புக் குவட்டின் மேல் பறந்து சென்று கரிய கிளைகளையுடைய புன்னை மரங்களில் போய் தங்கும் என்றும்,

**“கயலார் நாரை போர்வில் சேக்கும்**
**தண் துறை ஊரன் கேண்மை” (ஐங்.9)**

கயல் மீனை உண்ட நாரை வைக்கோற் போரில் தங்கும் என்பதைப் போல, தலைவியின் பெண்மையைப் பிறர் அறியாது நுகர்ந்த தலைவன், திருமணம் குறித்து நினைக்காமல் தனது நிலத்திலேயே தங்கினான் என்று உள்ளுறை கூறப்பட்டுள்ள சங்கப் பாடல்கள் மூலம் நாரையின் வாழிடங்கள் குறித்து தெரிந்து கொள்ளமுடிகிறது.

**குருகின் வாழிடம்**

குருகுப்பறவை குறித்து குறுந்தொகை ஆய்வு செய்த இரா.அறவேந்தன் “இது நெய்தல் நிலத்துக்கு உரியதெனக் கூறப்படுவதாகிய ஒரு பறவை. கரிய காலையும் வெண்ணிறத்தையும் உடையது. இது பனைமடலிற் கூடுகட்டிக்கொண்டு வதியும், மீன் முதலிய நீர்வாழ் பிராணிகளை இரையாகக் கொள்ளும், துணை பிரிந்திருப்பின் அதனை அழைக்கும் தன்மையது. நள்ளிரவில் இது உயவுந் தன்மையது” என்று கூறியுள்ளார். இதற்கு சான்றாக நற்றிணைப் பாடல் ஒன்று,

**“ஓங்கு மணல் உடுத்த நெடு மாப் பெண்ணை**
**வீங்கு மடல் குடம்பைப் பைதல் வெண் குருகு,**
**நள்ளென் யாமத்து உயவுதோறு உருகி” (நற்.199)**

என்று மணல் சூழ்ந்த பெரிய பனை மரத்தின் பெரிய மடலில் கூடு கட்டி வாழும் வெண்மையான நாரை துணையைப் பிரிந்து இருக்கும் இருள் செறிந்த இரவில் வருத்தத்துடன் நரலும். அந்த துன்பக்குரல் கேட்டும் பசலை ஊரத் தளராத உடலை உடைய நான் இன்னும் உயிரோடு இருக்கிறேன் எனத் தலைவி வருத்தத்துடன் தெரிவித்த பாடலிலும்,

**“குருகு இரை தேடக் கிடக்கும் பொழி காரில்” (பரிபா.6)**

இன்னிள வேனிலில் குருகுகள் இரைதேடும் அளவில் தான் நீர் உள்ளது என்று வையை ஆற்றில் மழை இன்மையால் வெள்ளம் இல்லை என்று தெப்பத்தில் ஏறி வந்தமையால் காலம் தாழ்ந்தது என்று கூறியவனிடம் காதற் பரத்தையிடம் கூறுவதாகவும்,மேலும் நற்றிணைப் பாடலில்,

**“கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழிந்த**
**பண் அழி பழம் பார் வெண் குருகு ஈனும்.” (நற்.138)**

உப்பு வணிகர்கள் விட்டுச் சென்ற முறிந்த பழைய வண்டிப்பாரில் வெள்ளை நிற நாரைகள் தன் முட்டை இட்டு இனப்பெருக்கம் செய்யும் என்று கூறப்பட்டுள்ளது. இதனை "பூ நாரைகள் ஈரப்பசை நிறைந்த சதுப்பு நிலங்களில் வாழ்கின்றன. இவை தன் நீண்ட காலால் களி மண்ணை ஒன்று திரட்டி, வட்ட வடிவத்தில் ஒரு பீடம் அமைக்கும். பீடத்தின் மேற்பகுதி சற்று குழிந்திருக்கும். கால்களை வசதியாக மடக்கி இப்பீடத்தில் முட்டை இட்டு அடைகாக்கும்"[5] என்பார் கே.கே.ராஜன். மேலும்,

**"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்**
**காணிய சென்ற மடநடை நாரை**
**கானலம் பெருந்துறைத் துணையொடு கொட்கும்" (ஐங்.158)**

வெள்ளங்குருகின் குஞ்சு இறந்ததற்காக அதன் தாயைக்கண்டு ஆறுதல் கூறச் சென்ற நாரை இறந்த குஞ்சினை அன்மையில் கண்டு விட்டு கானலின் பெரிய துறையில் தன் பெடையுடன் திரியும் என்றும் கூறப்பட்டுள்ள பாடல்களின் வழி இப்பறவைகள் நீர்நிலைகளிலேயே அதிகமாக இருந்துள்ளதைக் காணலாம்.

**பருந்தின் வாழிடம்**

சங்க இலக்கியப் பாடல்களில் கழுகை விடப் பருந்து பற்றிய பாடல்களே அதிகமாக உள்ளன. இப்பருந்துகள் கழனிகளிலும், நீர்நிலைகளுக்கு அருகிலும் காணப்படும் கருடனான அசம்பருந்து அன்று. கருஞ்சிறகுகளுடனும் சாம்பல் நிறத்தை மேற்புறம் கொண்டுள்ள இவை சுரங்களிலும், பாலை நிலங்களிலும் வட்டமிட்டவாறு உயரமாகப் பறக்கும் பருந்தாகும். இவற்றை,

**"அம்புதொடை அமைதி காண்மார், வம்பலர்**
**கலன்இலர் ஆயினும் கொன்று, புள்ஊட்டும்**
**கல்லா இளையர் கலித்த கவலை,**
**கணநரி இனனொடு குழீஇ, நிணன் அருந்தும்**
**நெய்த்தோர் ஆடிய மல்லல் மொசிவிரல்,**
**அந்த எழுவைச் சேவல் சேர்ந்த**
**ஆரைசேர் யாத்த வெண் திரள்" (அகநா.375)**

வழிச் செல்வார் தம்பால் அணிகலன் போன்று பொருளைப் பெறாத வராயினும் அவரைக் கொன்று அவர்தம் உடல்களைப் பறவைகட்கு உண்பிக்கும் கொல்லும் கொடுந்தொழில் அன்றி வேறு தொழிலினைக் கற்றறியா ஆறலை கள்வர்கள்

அலைந்து திரியும் கவா்த்த வழிகளைக் கொண்டது, நரிகள் கூட்டம் தம் இனத்துடன் கூடிப் பிணத்தினைத் தின்னும் கொடுமை உடையது, அத்தகைய காட்டிலுள்ள அடிதிரண்ட யா மரத்ததின் கிளையில் குருதியாடிய நெருங்கிய விரல்களைக் கொண்ட ஆண் பருந்து வந்து தங்கியிருக்கும் என்றும்,

**"பருந்து இளைப்படூஉம் பாறு தலை ஓமை**
**இருங்கல் விடரகத்து......." (அகநா.21)**

புல்லிய இடத்தையுடைய சுரவழியில் ஒழுங்கற்றுச் சிதறிய தலையினையுடைய ஓமை மரங்களையுடைய ஊா்களில் பருந்து முட்டையிட்டு காவற்படுதற்கு ஏற்ற இடமாக பாலை நெறியைக் குறிப்பிட்டுள்ளதையும், இவை போா்களத்தில் காணப்படும் பறவையாக இருந்துள்ளதை,

**"பருந்து படப் பண்ணி, பழையன் பட்டென" (அகநா.44)**
**"அருங்குறும்பு எறிந்த ஆற்றலொடு, பருந்துபடப்**
**பல்செருக் கடந்த செல்உறழ் தடக்கை" (அகநா.342)**

பாண்டியன் போா்க்களத்தில் பருந்துகள் வந்து வீழும் படி போா்புரிந்தான் என்றும் நல்ல போா்கள் பலவற்றை வஞ்சியாது எதிா்நின்று வென்றவன் என்றும் கூறப் பருந்தின் வருகையைக் கூறியுள்ளதையும்,

**"நெறி அயல் மராஅம் ஏறி, புலம்பு கொள**
**ஏறி பருந்து உயவும் என்றூழ் நீள் இடை" (அகநா.81)**

சுரவழியின் வெண்கடம்ப மரங்கள் தாழ்ந்து கிடக்கும் அவற்றில் வெயிலால் வெம்பி உலா்ந்திருக்கும் மரத்தினுடைய கிளையில் இருந்து கொண்டு இரையை பாய்ந்தெடுக்கும் தன்மையுடைய பருந்து தன் பேடையை நீங்கி தனிமையில் வருந்தும் வெம்மையான இடம் இச்சுரமாகும் என்றும் கூறப்பட்டுள்ள குறிப்புகள் மூலம் இவை வறட்சியான பகுதியையே தம்முடைய வாழ்விடமாகக் கொண்டுள்ளதை அறியலாம்.

**புறாக்களின் வாழிடப்பயன்பாடு**

புறாக்கள் வெப்ப மண்டலக் காடுகளில் அதிகமாக வசிக்கின்றன. மேலும் வெப்பப் புல்வெளிகள்(சவானாக்கள்), பாலை வனங்கள், மித வெப்ப மற்றும் சதுப்பு நிலக்காடுகளிலும், மலட்டு நிலங்களிலும் வசிக்கின்றது. சங்கப் பாடல்களில் வரும் புறா குறித்தப் பாடல்கள் பெரும்பாலும் பாலைத் திணைக்குரியதாகவே

காணப்படுகின்றன. பாறை இடுக்குகளிலும், வீட்டுச் சுவர்களிலும் சிறு சுள்ளிகளைக் கொண்டு கூடு கட்டும். இக் கூட்டின் இடைவெளி வழியாக முட்டைகள் கீழே விழுந்து உடைந்து விடுவதும் உண்டு. இவ்வாறு புறாக்கள் பாதுகாப்பில்லாத வாழிடங்களையே கொண்டுள்ளதை,

**"கடவுள் போகிய கருந் தாட் கந்தத்து**
**உடன் உறை பழமையின் துறத்தல் செல்லாது**
**இரும் புறாப் பெடையோடு பயிரும்" (அகநா.307)**

கடவுள் இல்லாத ஆலயத்தின் தூணில் நீண்ட காலமாகக் கூடியிருந்த பெரிய ஆண் புறாக்கள் அவ்விடத்தை விட்டு நீங்காது தன் பெடையுடன் கூடி ஒலியெழுப்பும் என்பதன் மூலம் புறாக்கள் பாழடைந்த மண்டபங்களிலும், கோவில் களிலும், உயர்ந்த மாடங்களிலும் அதிகமாக வசித்து வந்திருப்பதையும்,

**"புரி மூழ்கிய பொரிஅரை ஆலத்து**
**ஒருதனி நெடுவீழ் உதைத்த கோடை**
**துணைப்புறா இரிக்கும்.................." (அகநா.287)**

ஆலமரத்தின் விழுதில் அமர்ந்திருக்கும் புறாக்கள் கோடைக் காற்றின் துணையுடன் ஒட்டும் என்று இப்பாடலில் கூறப்பட்டுள்ளதோடு,

**"...........................................யானை**
**வேரிந்லூங்கு சிறுபுறம் உரிஞ், ஒல்கி**
**இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**
**மணிப்புறாத் துறந்த மரம்சோர் மாடத்து.." (அகநா.167)**

மணிப்புறாக்கள் வாழ்ந்து வந்த அம்பலக் கட்டடத்தில் யானையின் முதுகு உராய்ந்து விட்டங்கள் விழுந்ததால் புறாக்கள் அங்கிருந்து நீங்கி வேறு இடம் சென்றதாகக் கூறியிருப்பதன் மூலம் புறாக்கள் மாடங்களில் வாழ்ந்துள்ளமையை அறியமுடிகிறது.

**குயிலின் வாழிடம்**

பறவைகளில் சில கூடுகட்டாமல் பிற பறவைகளின் கூட்டில் முட்டையிடும். அப்பறவைகளுள் ஒன்று குயிலாகும். இவை மரக்கிளைகளின் இடையே மறைந்து வாழும் பண்புடையது. குயில் மாமரங்களில் இருப்பதைப்,

**“மா நனை கொழுதி மகிழ் குயில் ஆலும்**
**நறுந் தண் பொழில்” (நற்.9)**

மா மரத்தின் அரும்புகளைக் கோதி மகிழும் குயில்கள் கூவும் குளிர்ந்த பொழில்களையுடைய கானகத்தில் யாம் செல்வோம் என்று உடன்போக்கின் போது தலைவன் கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது. இனிமையான குரலெழுப்பும் குயில் குறித்து அறியாதவர்கள் இருக்கமுடியாது. இலக்கியங்கள் குயிலை கோகிலம் என்று குறிப்பிட்டுள்ளன. இத்தகைய குயிலில் ஆண் பறவை கருமையாகவும், பெண் பறவை கரும் பழுப்பு நிறமுடையதாகவும் இருக்கும்.

**மயிலின் வாழிடம்**

மயில்கள் கூடு கட்டி முட்டையிட்டு குஞ்சு பொரிக்கும் பழக்கமுடையது. இவை குச்சிகளைச் சேர்த்து வந்து கூடுகட்டுவதில்லை. ஆனால் ஆள் நடமாட்டம் இல்லாத ஓர் இடத்தில் உள்ள சருகுகளைச் சேர்த்து, சிறிதாகப் பள்ளம் பறித்து, அதில் கூடு கட்டிக் கொள்ளும். இதைத் தவிர்த்து வேறு பறவைகள் கட்டியுள்ளக் கூட்டிலும் முட்டையிடும் பண்புடையது. சங்க இலக்கியத்திலும் மயில் கூடு பற்றிய குறிப்பு உள்ளதை,

**“மயில் அறிவு அறியாமன்னோ” (நற்.13)**

என்ற பாடலில் உயர்ந்த மலையில் உள்ள கூட்டில் இருக்கும் மயில்கள் அறியாது என்று எண்ணி கிளிகள் திணைக் கதிர்களைக் கவர்ந்து செல்லும் என்று கூறியுள்ளதன் மூலமாக மலையில் வாழுவதைப் போல மயில்களைப் பற்றி புறநானூற்றுப் பாடல் ஒன்று,

**“பழன மஞ்ஞை யுகுத்த பீலி**
**கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்” (புறம்.13)**

என்று பழன மஞ்ஞை என்னும் பெயரில் குறிப்பிட்டுள்ளதைக் காணும் போது சங்க காலத்தில் மயில்கள் வயல்களில் வாழ்ந்திருக்கலாமோ என்று பறவை நூலார்கள் கூறியுள்ளக் கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்கிறது.

**“கழனி உழவர் கலிசிறந்து எடுத்த**
**கறங்கு இசை வெரீஇப் பறந்த தோகை**
**அணங்குடை வரைப்பகம் பொலியவந்து இறுக்கும்” (அகநா.266)**

வயலிடத்து, உழவர்கள் செருக்குடன் எழுப்பிய ஆரவாரத்துக்கு அஞ்சிப் பறந்து போன அழகிய மயிலானது, தெய்வத்தையுடைய குன்று பொலிவினைப் பெறுமாறு வந்து தங்கியதாகவும்,

**"யாமே அலங்குசினை மா அத்து அணி மயிலிருக்கும்**
**பூக்கஞல் ஊரன் சூளிவன்" (ஐங்.8)**

அசையும் தளிரையுடைய மாமரத்தில் தங்கும் அழகிய மயில். அ.்.து நின்ற மரத்திற்கும் அந்த சோலைக்கும் அணி செய்வது போன்று இருக்கும் என்ற செய்தியின் வழியாக மயில் மாமரச் சோலையையும் தனது தங்குமிடமாகக் கொண்டிருந்ததையும்,

**"களிறில வாகிய புல்லரை நெடுவெளில்**
**கானமஞ்ஞை கணனொடு சேப்ப" (புறம்.127)**

என்று யானைகள் கட்டும் கட்டுத்தறியில் யானைகள் இல்லாததால் காட்டு மயில்கள் தம் இனத்தோடு புல்லிய பக்கத்தைக் கொண்ட கட்டுத்தறியில் தங்கும் என்ற செய்தியைக் காணமுடிகிறது. மேலும் "கவலையின்றி மக்கள் வாழிடங்களுக்கு அருகிலேயே வாழும் பழக்கமுடைய இவை தங்களுடைய இருப்பிடத்தையும் முட்டைகளையும் மறைவாக வைக்கவேண்டும் என்ற எண்ணம் உடையவை அல்ல. புல்வெளிகளிலும், பிற பறவைகளின் கைவிடப்பட்ட கூடுகளிலும் கூட முட்டையிடும் இயல்பின என்ற கூற்றும். இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இரவில் மரங்களில் மட்டுமின்றிக் கானவர் அமைக்கும் பரணிலும் தங்கும் தன்மையன"[6] என்று கூறியுள்ளார்.

**ஆந்தையின் வாழிடம்**

மக்களிடையே விரும்பத்தகாத அச்சத்தை ஏற்படுத்தக்கூடியப் பறவையாகத் திகழ்வது ஆந்தையாகும். ஆந்தையின் கொடூரமானக் குரலும், அதன் இரைதேடும் இயல்பும் நமக்கு வெறுப்பைத் துண்டுவதாகவும் இருக்கிறது. இவை சுடுகாட்டிலும், பாலைவனப்பகுதிகளிலும் வாழ்கின்றன. இதைப் பற்றி சங்க இலக்கியத்தில்,

**"வலிதுரந்து சிலைக்கும் வன்கண் கடுந்துடி**
**புலி துஞ்சு நெடுவரைக் குடிஞையோடு இரட்டும்.." (புறம்.170)**

மலையையும், நாட்டையும் கூர்மையான வேலையும் கொண்டிருப்பவன் பிட்டங்கொற்றன் எனப் பிட்டங்கொற்றனின் மலையைக் கூறும் போது அங்கு வாழும்

ஆந்தையின் ஒலியைக் குறிப்பிட்டிருப்பதன் மூலம் ஆந்தைகள் மலைப்பகுதிகளிலும் வாழ்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது.

**“பொத்த அறையுள் போழ்வாய்க் கூகை**
**சுட்டுக் குவி எனச் செந்தாா்ப் பயிரும்” (புறம்.240)**

பொந்துகளில் வாழும் பண்புடைய பிளவுபட்ட வாயையுடைய போராந்தை சுட்டுக் குவி என்று இறந்தோரை விரைவாகக் கொண்டுவருமாறு அழைக்கும் என்றும் கள்ளிச் செடிகள் நிறைந்த சுடுகாட்டில் காணப்படும் என்றும், மரப்பொந்தில் இருந்து கொண்டு கதும் என ஆந்தை கூவும்(புறம்.364)என்றும் இப்பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

**கான வாரணம்**

“வறண்ட காடுகளிலும் பசுங்காடுகளிலும் மலைகளிலும் காணலாம். தொட்ட பெட்டா, ஆனைமுடி போன்ற மிக உயா்ந்த மலைச் சிகரங்களில் கூடக் காணப்படுகிறது. மூங்கில் புதா்களிலும் கைவிடப்பட்ட காபி தேயிலைத் தோட்டங்களிலும் சாதாரணமாகக் காணலாம்”[7] என்று க.ரத்னம் குறிப்பிட்டுள்ளாா். இதனை புறநானூற்று பாடலில்,

**“நரைமூ தாளா் நாயிடக் குழிந்த**
**வல்லின் நல்லகம் நிறையப் பல்பொறிக்**
**கான வாரணம் ஈனும்**
**காடாகி விளியும் நாடுடை யோரே” (புறம்.52)**

சூதாடு கருவியினால் உண்டான குழிந்த இடம் நிறையும் அளவிற்கு காட்டுக் கோழி முட்டையிடுவதாகவும் கூறப்பட்டிருப்பதன் மூலம் மனைக்கோழியைப் போலவே காட்டுக்கோழியும் அதிகமாக முட்டைகள் இடும் என்பதைக் கண்டறியமுடிகிறது.

**கம்புள்கோழி வாழிடம்**

கம்புள் கோழி என்று அழைக்கப்பட்டு தற்போது வரகுக்கோழி குறித்து “வெலாவதாா் சரணாலயத்தில் நூற்றாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்ததாகக் கருதப்படும் வரகுக்கோழியும் , கருந்தொண்டை தூக்கணாங்குருவியும் இருப்பதாகக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவை இரண்டில் வரகுக்கோழி இனப்பெருக்க காலத்தில் அந்தரத்தில் குதித்து எழும்பி, பிறகு இறக்கையை விரித்தவாறே கீழே வரும் என்றும் மற்றொன்றான கருந்தொண்டை தூக்கணாங்குருவி நீரை ஒட்டிய நிலப்பகுதியில் வளா்ந்திருக்கும் நாணல்களில் கூடு கட்டும் என்று காட்டுயிா் ஆா்வலரான தியேட்டா் பாஸ்கா் குறிப்பட்டுள்ளதைக் காணலாம்”[8]. இதனை,

**“துறைநணி கெழீஇக் கம்புள் ஈனும்**

**மடல் வண் போந்தையின் நிற்கு மோர்க்கே” (புறம்.297)**

கூர்மையான வேல் தைத்து கொண்டு நிற்கும் பனை மரம் போன்ற போர் வீரர்க்கு, கம்புள் கோழிகள் நீர்த்துறையில் இருக்கும் புதர்களை அடைந்து முட்டைகளை இடும் இயல்புடையது என்று கூறியிருப்பதைக் காணலாம். மேலும்,

**“பழனக் கம்புள் பயிர்ப்பெடை அகவும்**

**கழனி ஊர நின் மொழிவல் ” (ஐங்.60)**

பழனம் என்பது நீர்வளம் உடையதாக இருக்குமென்பதால் இங்கு பல்வேறு வகையான பறவைகளும் வாழும் என்பதும், அவ்வகையில் வயல்களில் வாழும் சம்பங் கோழியானது தனது பெடை இடைவிடாது அழைப்பதைக் கண்டு அதன் தனிமையைப் போக்க சேவலும் அகவுவதால் அதனால் அன்புடைய பெண் கோழியும் அழைக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

**குறும்பூழ் பறவையின் வாழிடம்**

இப்பறவை காடை என்ற பெயரால் வழங்கப்பட்டுவருகிறது. இதனை வேட்டையாடும் வேடன் குறும்பூழ் வேட்டுவன் என்று அழைக்கப்பட்டுள்ளான். இவை,

**“வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்கால்**

**கறை யணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும், வன்புலம்”**

**(பெரும்பாண்.203-205)**

என்ற இப்பாடல் வரிகளில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறுகியக் கால்களையுடைய காடைகள். அழகிய கடம்பின் மலர்களைப் போல தோற்றமுடைய தனது பிள்ளைகளைத் தழுவிக் கொண்டு கூட்டில் தங்கும் இயல்பையுடையது என்று கூறியிருக்கிறார்.

**வானம்வாழ்த்தி**

வானம் வாழ்த்தி என்று சங்கப்புலவர்களால் பாடப்பட்டிருக்கும் பறவை வானம்பாடி. இப்பறவை மழை வேண்டி பாடல் பாடுவதை,

**“................................பொறி வரி**

**வானம் வாழ்த்தி பாடவும், அருளாது” (அகநா.67)**

என்ற பாடல் வழி அறியலாம். ஆனால் வானம்பாடி பாடுவது குறித்து "ஆண் வானம்பாடி பறவை இனப்பெருக்ககாலத்தின் போது தனது பாடலைப்பாடிக் கொண்டே வான் சாகசங்கள் செய்வதைக் காணலாம். இதனைத் தியேடோர் பாஸ்கர் அவர்களும் மிக உயரத்துக்குப் பறந்து சென்று, இறக்கைகளைத் திறந்து பாராசூட் போல விரித்து தாழ்வாக கீழே வரும். இப்படி கீழே வரும்போது தான் பாடும். சில நேரம் கண்ணுக்குத் தெரியாத உயரத்தில் கூட அவை பறக்கலாம். அப்போது அவற்றின் மெல்லிசான குரல் நமக்குக் கேட்டும் என்று கூறியுள்ளார். இப்பறவையின் கூடு மாட்டின் குளம்படி அளவில் உள்ள ஒரு சிறிய குழிதான் அதிலேயே முட்டையிட்டு அதன் அருகிலேயே அமர்ந்து கொண்டு பாதுகாக்கிறது"[9]. என்று இப்பறவை இனப்பெருக்கத்தின் போது பாடுவதையும் அதன் வாழிடம் பற்றியும் கூறியிருப்பதைக் காணமுடிகிறது.

**காக்கை உறைவிடம்**

மனிதர்களோடு ஒன்றி வாழும் பறவைகளுள் காக்கையும் ஒன்றாகும். காக்கை இரண்டு வகை இனப்பிரிவைக் கொண்டுள்ளது. அவை ஒன்று ஊர்க்காக்கை, மற்றொன்று அண்டங்காக்கை. இவற்றுள் ஊர்க்காக்கை மனிதர்கள் வாழுமிடத்தில் அவர்களோடு உறவாடிக் கொண்டு அந்தப் பகுதியிலேயே வட்டமிட்டுப் பறந்து திரியும். ஆனால் அண்டங்காக்கை பெரும்பாலும் காட்டிலேயே வசிக்கும் பண்புடையது. இந்த வகையில்,

**"நீங்கா வம்பலர் கணை இடத் தொலைந்தோர்**
**வசி படு புண்ணின் குருதி மாந்தி**
**ஒற்றுச் செல் மாக்களின் ஒடுங்கிய குரல**
**இல் வழிப் படூஉம் காக்கைக்**
**கல் உயர் பிறங்கல் மலை இறந்தோரே" (அகநா.313)**

ஆறலைக் கள்வர்கள் போர் அம்பு எய்ததினால் இறந்தவர்களின் புண்ணிலிருந்து வடியும் குருதியினை காக்கைகள் குடிக்கும். பின்பு வீட்டில் வந்து தங்கும் என்று காக்கையின் இயல்பு கூறப்பட்டுள்ளது.

**நீர் காக்கையின் வாழிடம்**

சங்கப்பாடல்கள் சுட்டும் கடற்காக்கை என்னும் பறவை வானத்தில் காணப்படும் விண்மீன்களைப் போன்று நெய்தல் நிலக்கடல் நீர் முதுகில் படும்படி

ஆடிக் கொண்டும், அலைகளின் மீது ஏறி இறங்கியும், நீந்தாது, மூழ்காது ஆடாத பாவை போன்று அசையாமல் செல்லும் என்றும் கூறியுள்ளனர். இவை கடற்பரப்பில் பறக்கும் கோது வெள்ளிப்பந்துகள் இருப்பதானலேயே சங்கப் புலவர்கள் கடற்காக்கையை சிறுவெண்காக்கை என்று அழைத்துள்ளதை,

**"பெருங் கடற் கரையது சிறு வெண் காக்கை**

**.....................................................**

**பனிக் கழி துழவும் பானாள்......." (குறுந்.246)**

கடற்கரையில் உள்ள சிறிய வெண் காக்கை களிறின் காது போன்ற இலையை உடைய கழிநீரை இரையின் பொருட்டு நள்ளிரவில் துழாவிக் கொண்டிருக்கும் என்று கூறப்பட்டுள்ளதையும்,

**"பெருங்கடற் கரையது சிறு வெண் காக்கை**

**துறைபடி அம்பி அகமனை ஈனும்"(ஐங்.168)**

பெரிய கடற்கரையில் உள்ள துறையில் தங்கும் சிறுவெண்காக்கை பழுதாகிப் போன தோணியிலே கூடு அமைத்து முட்டையிட்டு வாழும் என்றும்,

**"பெருங்கடற் கரையது சிறு வெண் காக்கை**

**ஒள்இணர் ஞாழல் முனையின் பொதியவிழ்**

**புன்னை அம் பூஞ்சினைச் சேக்கும்"(ஐங்.169)**

பெரிய கடற்கரையில் உள்ள சிறு வெண் காக்கை பொன் போன்ற மலர்க் கொத்துகளை உடைய ஞாழலை வெறுத்தால் அரும்பு அவிழும் புன்னையின் பெரிய கிளையில் தங்கும் எனவும் கூறப்பட்டுள்ள பாடல்களால் கடற்காக்கையானது கடற் சூழ்ந்த பகுதியில் வாழும் இயல்புடையது என்பதைக் காணமுடிகிறது.

**நீர்க்கோழி வாழிடம்**

சங்க இலக்கியத்தில் நீரிலும், நீரருகிலும் வாழ்வதாக கூறப்பட்டுள்ளவற்றுள் நீர்க்கோழியும் ஒன்று இதனை தியேடோர் பாஸ்கரன் "பறவைகளில் புறாவின் அளவுடையதானத் தாமரைக்கோழிக்கு பின் இறகு வெள்ளை, கறுப்பு, மஞ்சள்

போன்ற வண்ணம் மிகுந்தது இருக்கும். இஃது பலவகையான நீர்த்தாவரங்களின் விதைகளையும், சிறிய உயிரினங்களையும் உணவாக உட்கொள்கிறது. மேலும் தனக்குத் தேவையான இரையைத் தேடிச்செல்லும் அவ்வாறு ஓடும் போது தன்னைச் சமநிலைப்படுத்திக் கொள்ள இறக்கைகளை விரிக்கும் போது இறகு வெண்மை நிறத்தில் பளிச்சிடும்"[10] என்று கூறியுள்ளதை,

**"கானக் கோழிக் பைம்பயி ரினனே**

**நீர்க் கோழிக் கூப் பெயர்க்குந்து" (புறம்.395)**

புறநானூற்றில் கூறப்பட்டிருக்கும் தண்ணீர்க்கோழியே ஆகும். காலையிலும், மாலையிலும் கத்திக் கொண்டே இருக்கும் இவை குளங்களிலும், குட்டைகளிலும், புதர்களிலும் மறைந்து வாழும் தன்மையுடையது என்று கூறும் பறவை தாமரைக்கோழி என்று தற்போது வழங்கப்படுவதாகவும், இத்தாமரைக்கோழி போன்ற நீர்ப்பறவைகள் நமது சுற்றுச்சூழல் நலனை வெளிப்படுத்தும் குறியீடுகள். நமது நீர்நிலைகள் நன்றாக இருக்கின்றன என்பதை அவை காட்டுகின்றன. இந்தப் பறவைகளை ஒரு நீர்நிலையில் நீங்கள் பார்த்தால் அது மாசுபடவில்லை என்று தெரிவிப்பவையாகவும் இருக்கும் சிறப்பினை அறியலாம்.

**மனையுறைக்குருவி வாழிடம்**

மனையுறைக்குருவி, தூக்கணாங்குருவி போன்வை அழகான கூடு கட்டும் Ploceidae குடும்பத்தைச் சேர்ந்ததாக இருந்தாலும் அவற்றின் வாழிடம் பற்றி "கசமுசாவென்ற கூட்டையே கட்டும். கூடுகட்டும் காலங்களில் கூச்சல் போட்டுக்கொண்டே இருக்கும். இளவேனில் காலத்தில் சிட்டுக்குருவிகள் கூடு கட்டத் தொடங்கும் பொந்து, வீட்டு முகடுகளின் சந்து, வீட்டுக் கூரை, கிணற்று இடுக்குகள், மழைநீர் வழியும் குழாய்கள் போன்று வாய்ப்புக் கிடைக்கும் இடங்களில் புல், வைக்கோல், கந்தைப் பஞ்சு, மென்மயிர், இறகு என்று எளிதில் கிடைக்கும் பொருட்களால் உட்புறம் குழிவாக இருக்கும் ஒரு கூட்டை குருவிகள் அமைக்கும். நகர்ப்பகுதிகளில் பழைய கட்டடங்கள், ஓடுள்ள தகரம் பதிக்கப்பட்ட கட்டடங்கள், கூரை வீடுகள் போன்ற இடங்களில் தான் அதிகமாகக் கூடு வைக்கும்"[11] என்பர் ஆதிவள்ளியப்பன். இதனைப் புறநானூற்றுப் பாடல் ஒன்று,

"மனைஉறை குரீஇக் கறையணற் சேவல்
பெருஞ்செய் நெல்லின் அரிசி ஆர்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்" (புறம்.318)

என்று வீட்டின் தாழ்வாரத்தில் வாழும் ஊர்க் குருவியின் கரிய கழுத்தையுடைய ஆண் பறவை பாணர்களின் யாழ் நரம்பில் காணப்படும் கோதுகளைவிட வன்மையான சிங்கத்தின் இறகைப் போன்ற மயிரை வைத்து கட்டப்பட்ட கூட்டில், வயலில் விளைந்த நெல்லை உண்டு தனது பெட்டையுடன் உறங்கும் என்பதைக் கூறியுள்ளனர். இதனையே பெரியசாமி அவர்கள் "விளை நிலங்கள் மிகுதியாக உள்ள இடங்களில் மரங்கள் குறைவாக இருப்பதால் அங்கு தரையில் வசிக்கும் பறவைகளையே மிகுதியாகப் பார்க்கலாம். வானம்பாடி, வயல்சிட்டுகள் முதலியவை அங்கு வசிக்கின்றன"[12] என்று கூறியுள்ளார். மேலும்,

"உள் ஊர்க் குரீஇக் கரு உடைத்தன்ன
பெரும் போது அவிழ்ந்த கருந்தாட் புன்னைக்" (நற்.231)

வீட்டிறைப்பில் வாழும் ஊர்க்குருவியினைப் பற்றிய செய்தியின் மூலம் இக்குருவியின் வாழிடம் நாம் வாழும் இல்லங்களோடு இணைந்தே வாழ்ந்து வந்துள்ளதைக் காணமுடிகிறது.

**தூக்கணங்குருவி**

தூக்கணங்குருவிகள் பனைமரம் போன்றவற்றில் தொங்குமாறு வேலைப்பாடுடன் அழகிய கூட்டினைக் கட்டி மழை மற்றும் பனியால் ஏற்படும் குளிர் இல்லாமலும், வெயிலினால் வெப்பம் ஏற்படாமல் இன்பமாக வாழும் இயல்பை உடையது என்பதை,

"தூக்கணம் குரீஇத் தூங்குகூடு ஏய்ப்ப
ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி" (புறம்.225)

என்று தூக்கணங்குருவியின் தூங்கும் கூட்டைப் போன்று வலம்புரிச் சங்கு இருப்பதாகப் பாடல்வரிகள் குறிப்பதன் மூலம் அதன் கூடு ஒரு பக்கமாகப் பிதுங்கிய உருண்டை நடுப்பக்கமாகவும், மேலும் கீழும் குழாய் போன்றும் இருக்கும் என்றும், இப்பறவைகள் நெல்லின் இலையான வைக்கோலை நார் போன்று கிழித்து வேகமாகக் கூடு கட்டுவதாகவும், வயல்களில் கதிர்கள் முற்றி அறுவடைக்குத் தயாராகும் போது கூட்டம் கூட்டமாக வந்து நெற்கதிர்களைத்

தின்னும் என்றும், இரவு நேரங்களில் நாணல் காடுகளிலும், நெருக்கமானத் தோட்டங்களிலும் சென்று இரைதேடும் என்றும் கூறியுள்ளதன் மூலம் இப்பறவைகள் பழனங்களின் அருகிலேயே வாழ்ந்துள்ளன என்பதை அறியலாம்.

**மாலை ஓவியம்**

காலையில் இரை தேடச் சென்ற பறவைகள் மாலையில் தம் கூட்டுக்குள் திரும்புவதைக் குறுந்தொகைப் பாடல் சூரியன் மறந்தவுடன் வளைந்த அலகையுடைய பறவைகள், வேகமாகப் பறந்து தொலைவில் இருக்கும் மரங்களில் தாம் கட்டியிருக்கும் கூட்டில் காத்திருக்கும் தம் குஞ்சுகளுக்கு ஊட்டுவதற்காக அலகில் இரையை எடுத்துச் செல்லும் பறவைகள் **'அன்பு நெறியே உயர்நெறி'** என்ற உறவை நாடும் பறவைகளின் நிலையைச் சங்க இலக்கியங்கள் வாயிலாகவும், பகுத்தறிவு கொண்ட மக்கள் எவ்வாறு வாழ வேண்டும் என்பதை பறவைகளின் அன்பின் மாட்சியால் அறியலாம்.

**சங்க காலத்தில் சரணாலயங்களாக இருந்த பகுதிகள்**

நீர்பறவைகளின் வாழ்விற்கு அடிப்படை ஆதாரமாக உள்ள நீர்நிலைகளே பறவைகளின் சரணாலயங்களாக இருந்திருக்கலாம் என்பதற்கு சான்றாக,

**"மன்றப் பலவின் மாச்சினை மந்தி**
**அன்னச் சேவல் மாறு எழுந்து ஆலும்" (புறம்.128)**

இரவலர் தம் வாத்தியத்தியங்களை மரங்களில் தொங்க விட்டு இருப்பது மரபு. இதனை குரங்குகள் பலாப்பழம் என்று கருதி தட்டிப் பார்க்கும் ஒலி அருகில் உள்ள நீர் நிலையில் வாழும் அன்னப் பறவைகளுக்கு அச்சத்தை உண்டாக்க அவை அந்த ஓசைக்கு மாறாக எழுந்து ஆரவாரம் செய்யும் என்று கூறியுள்ளனர்.

**"பழனப் பல்மீன் அருந்த நாரை**
**கழனி மருதின் சென்னிச் சேக்கும்" (ஐங்.70)**

பழனங்களில் உள்ள பல மீன்களை உண்ட நாரை கழனியில் உள்ள மருத மரத்தின் உச்சியில் தங்கும் பொருட்டு நன்செய் நிலத்திற்குச் செல்வது போன்று, தலைவன் பொழுதெல்லாம் பல்வேறு பரத்தை மகளிரை கூடியிருந்து விட்டு தூய இல்லத்திற்கும் வருவதாக விளக்கம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**"மனைக்கோழிப் பைம்பயிரின்னே**
**கானக்கோழிக் கவர்குரலொடு**
**நீர்கோழிக் கூப்பெயர்க் குந்து**
**வேயன்ன மென்தோளால்**
**மயில்அன்ன மென்சாயலார்**
**கிளிகடி யின்னே**
**அகல் அள்ளற் புள்இரீஇ யுந்து" (புறம்.395)**

முல்லை நிலத்திற்கு தொழிலுக்காக சென்ற மருதநிலத்தவர் கதிர்களை உண்ணவரும் பறவைகளைக் கிணைப் பறையைக் கொட்டி ஓட்டுவர் என்றும், இல்லத்திற்கு கோழியின் ஒலியைக் கேட்டு காட்டுக்கோழி கவர்த்த குரலில் அழைக்கும் என்றும், மயில் போன்ற சாயலுடைய மகளிர் புனத்தில் படியும் கிளிகளை ஓட்டும் போது சேற்றில் இருக்கும் நாரைப் பறவைகள் அங்கிருந்து நீங்கியதாகவும் கூறியுள்ளனர். மேலும் பழனங்களும் அக்காலத்தில் பறவைகளுக்கானச் சரணாலயங்களாக இருந்திருக்கும் என்பது புலப்படுகிறது.

**பறவைகளின் வாழிடங்களில் மனித இனத் தலையீடு**

"உயிரினங்கள் வாழத்தகுதியான இப்பூமிக்கு மனிதனே பெரும் அபாயமாக உருவெடுத்திருக்கிறான். 'எந்த உயிரியும், தனக்கான வாழ்விடத்தை தானே அழித்துக் கொள்ளாது' என்ற டார்வினிய கோட்பாட்டிற்கு எதிராக மனிதனின் செயல்பாடுகள் அமைந்துள்ளன. இது பூமியில் பரிணமித்துள்ள உயிரினங்களின் வாழ்வையும் சிக்கல் நிறைந்ததாக மாற்றியுள்ளது. பூமியில் உள்ள உயிரினங்களுக்கு ஆதாரமாய் இருந்து இயங்கும் **'நிலம் -நீர் -காற்று'** என்ற இயற்கை அமைப்பின் இயல்புத் தன்மை பாதுகாக்கப்படுகிற வரைதான் பூமியிலுள்ள உயிர்களின் வாழ்க்கையும் பாதுகாப்பாய் இருக்கும். ஆதி பழங்காலத்தில் பூமியின் சுழற்சியும், உயிரினங்களின் வாழ்வியல் அமைப்பும், இயற்கை சூழலும் மிகவும் பாதுகாப்பாய் இருந்தன. மனித அறிவின் வளர்ச்சிக்கேற்ப பூமியின் இயல்பும் உயிர்களின் வாழ்வியல் அமைப்பும் அடியோடு மாறிப்போய்விட்டன"[13] என்று காடு இதழின் ஆசிரியர்கள் கூறியுள்ளனர்.

### சரணாலயங்களின் பயன்கள்

பறவைகளின் உறைவிடமான சரணாலயங்கள் தற்போது "தமிழகத்தில் பன்னிரெண்டு இடங்களில் பறவை சரணாலயங்கள் உள்ளன. இவை அனைத்தும் நீர்நிலைகளில் அமைந்தவைதான். வலசை வரும் பறவைகள் பெரும்பாலும் நீர்நிலைகளிலேயே தங்குகின்றன. பொதுவாகவே அதிக பறவை வகைகளை ஈர்க்கும் தன்மை கொண்டவை நீர்நிலைகள். பல்வேறு பறவைகளுக்கு இரை தரும் அமுதசுரபியாய் அவை உள்ளன. ஏரிகள், குளங்கள், ஆறுகள் போன்ற நீர்நிலைகளுக்கு அருகே நீர்ப்பறவைகள் கூடு கட்டுகின்றன. கூட்டங்கூட்டமாக ஒரே இடத்தில் கூடுகட்டும் வழக்கம் நீர்ப்பறவைகளின் தனிப்பண்பு"[14] என்பது ஆதி வள்ளியப்பனின் கருத்தாகும். பறவைகளைப் பாதுகாக்க பறவைகள் சரணாலயங்களுக்குப் பாதுகாப்பு தருவதன் மூலம் மட்டும் செய்தால் பயனில்லை. ஏனெனில் தற்போது புகழ்பெற்று விளங்கும் வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயம் நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளது. ஆனால் சரணாலயத்தைச் சார்ந்த பறவைகள் மற்ற பகுதிகளுக்கும் உணவுதேடச் செல்லும் விளைநிலங்கள் அழிக்கப்பட்டால் பறவைகளுக்கு உணவு கிடைக்காமல் போகும் என்பதை உணர்ந்தால் மட்டுமே சரணாலயங்களால் மட்டும் பறவைகளைப் பாதுகாக்க முடியும் என்ற நிலையை மாற்றி ஒவ்வொருவரும் முயன்றால் மட்டுமே சரணாலயங்களின் பயன் பறவைகளைச் சென்றடையும் என்பதில் ஐயமில்லை.

### பறவைகளின் அழிவு

கேட்மியம் என்ற உலோகம் சுரங்கம் மற்றும் உருக்கு ஆலைகளில் இருந்து கழிவாக வெளியாகிறது. ஈயம், துத்தநாகம், தாமிரம், நீலிம்பு போன்று கன உலோகங்கள் நீரில் கலப்பதால் நீரில் வாழும் உயிரினங்கள் மட்டுமல்லாது அவற்றை உண்ணும் நீர்வாழ்ப் பறவைகளுக்கும், அவ்வாறு இறந்த மீன்களை மனிதர்கள் உண்ணுவதால் மனிதர்களுக்கும் இந்நோய் பரவும். மேலும் மீனை உண்ணும் பறவைகளான நீர்க்காகம், குருட்டுக்கொக்கு, சின்னக்கொக்கு, பெரிய கொக்கு போன்ற பறவைகள் அதிகமாக பாதிக்கப்படுவதாக தற்போதைய ஆய்வுகள் கூறுகின்றன. எடுத்துக்காட்டாக மீனுண்ணிகளாகவும், பூச்சியுண்ணிகளாகவும், வேட்டையாடிகளாகவும், தேனுண்ணிகளாகவும் உணவுச்சங்கிலியின் உச்சத்தில் பறவைகள் இருப்பதால் பறவைகளைப் பாதிக்கும் உலோகங்கள் அவற்றின் உடலில் சேர்வது (Bio accumulation) இலகுவாக இருக்கிறது என்பதை, "பூச்சிகளை உட்கொள்ளும் பறவைகளுக்கும் (Insectivores) தாவரங்களிலிருந்து மகரந்தத்தையும், பூக்களிலிருந்து

தேனையும் உட்கொள்ளும் பறவைகளுக்கும் (Nectivores) முதலில் சிறிய அளவில் (தோல், இறகு சம்பந்தப்பட்ட, சொட்டை விழுதல்) நோய்களை ஏற்படுத்துகிறது. உண்ணிக்கொக்கு, காட்டுப்பக்கி, சிவப்பு மூக்கு ஆள்காட்டி, பனங்காடை அல்லது காட்டுக்காடை, கருங்கரிச்சான் போன்ற பூச்சியுண்ணிகளும், தேன்சிட்டு, நாகணவாய், சோளக்குருவி அல்லது சூரைக்குருவி, மாங்குயில் போன்ற பறவைகளுக்கும் மேற்கண்ட நோய் தொற்றுகள் வரும் ஆபத்துள்ளது. நோய் தொற்றுகண்ட பறவைகளை உண்ண நேரும் வேட்டையாடிகளான (Birds of Prey) கழுகுகள், பருந்துகள், ஆந்தைகள், வல்லூறுகளுக்கும் பாதிப்பு ஏற்படுகிறது"[15] என்று கன உலோகங்களினால் பாதிக்கப்படும் சுற்றுச்சூழல் என்ற கட்டுரையில் வெ.கிருபாநந்தினி குறிப்பிட்டுள்ளார். இதனையே "இந்திய பறவையியல் அறிஞர் முனைவர் சலிம் அலி அவர்களின் பெயரில் கோவை ஆனைக்கட்டியில் அமைந்துள்ள மத்திய ஆராய்ச்சி மையத்தின் முதுநிலை அறிஞரான முனைவர் சு.முரளிதரன் இது குறித்த சில ஆய்வுகளை செய்து வருவது குறிப்பிடத்தக்கது. அந்த வகையில் சில கன உலோகங்களினால் பறவைகள், பூச்சிகள், சூழலியல் தொடர்ச்சியாக மனித சமூகம் பாதிக்கப்படுவது கண்டறியப்பட்டுள்ளது"[16]. இக் கன உலோகங்களால் பறவைகளின் கல்லீரல் மற்றும் சிறுநீரகம் பாதிப்படைவது போன்று மனிதர்களுக்கும் நுரையீரல் புற்று நோய், தோல் நோய், நரம்பு தொடர்பான வியதிகள், கூளை நரம்பு பாதிப்பு போன்ற அபாயங்கள் ஏற்படும் என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

**குளோனிங் (படியாக்கம்) முறை**

உயிரினங்கள் தங்களது தலைமுறையை உருவாக்க இனப்பெருக்கம் செய்கின்றன. தாவரங்கள் மகரந்தச்சேர்க்கை மூலமாக தங்களது அடுத்த தலைமுறையை உருக்கும். பறவைகள், விலங்கு, மனிதன் போன்ற உயிரினங்கள் உருவாக ஆண் விந்தணுவும், பெண் முட்டையும் இணைந்தால் மட்டுமே தலைமுறை பெருகும். ஆனால் இனப்பொருக்கம் நடைபெறாமல் அவற்றின் உயிரணுவைக் கொண்டு உருவாக்கப்படும் உயிருக்கு குளோன் என்று பெயர். இதனை "க்ளோனிங் எனப்படுகின்ற சொல்லுக்கு ஈடாக செயற்கை, செராக்ஸ், படியாக்கம், பலபடியாக்கம், போலாக்கல், மறூ, மறுபடி, நகல், நகலியம், நகலாக்கம் எனப் பலவகையான சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன."[17] இப்படியாக்கமுறை உயிர்களை உண்டாக்கப் பயன்படுகிறது.

எனவே கருவை படியாக்கம் செய்வது என்பது ஒரு கடினமான செயலில்லை என்பதால் அழிவில் இருக்கும் பறவைகளைப் படியாக்கமுறை மூலம் பாதுகாக்க முயற்சிக்கலாம். ஆனால் இம்முறை இயற்கையான இனப்பெருக்க முறையிலிருந்து மாறுபட்டு இருப்பதால் இஃது பிற உயிரினங்களுக்கு மட்டுமே ஏற்புடையது என்றும் மனித உயிர்களை படியாக்கம் செய்வது தற்கொலைக்கு சமமானதாகவும் கருத்துக்கள் காணப்படுகிறது.

**மனித நேயச் சிந்தனைகள் மூலம் பறவைகளுக்கு கிடைக்கும் சிறப்புகள்**

ஆதிகாலம் தொட்டு பத்தாண்டுக்கு முன்பு வரை பயிர் செய்ய மனிதன் இயற்கை உரங்களையும், இயற்கையான பூச்சிவிரட்டிகளையும் கொண்டிருந்தான். தற்போது மக்கட்தொகைப் பெருக்கத்தை காரணம் காட்டி அதிக விளைச்சலுக்காக வேதியல் பூச்சிக் கொல்லிகள், இரசாயன உரங்கள் போன்றவற்றைப் பயன்படுத்துவதால் மண் வளத்திற்கும், பயிர்களுக்கும் நன்மை செய்கின்ற மண்புழு, தவளை, நண்டு, மீன் இவற்றோடு சேர்ந்து பறவைகள் உள்ளிட்ட பல உயிர்கள் சங்கிலித் தொடர் போன்று பாதிக்கப்படுகின்றன என்பதை "விளைநிலங்களில் தெளிக்கப்படும் பூச்சிக் கொல்லிகளான எண்டோசல்பான், மானோகுரோட்டோபாஸ், எச்.சி.எச் போன்ற பூச்சிக் கொல்லிகள் வாய்கால்கள் வழியாக நீர்நிலைகளை வந்தடைகின்றன. அவைகள் நீரில் உள்ள சிறு உயிரினங்களில் தொடங்கி பல நீர்வாழ் உயிரினங்களை கொல்கின்றன. அவ்வாறு கொல்லப்பட்ட மீன்கள் மற்றும் சிறு நீர்வாழ் உயிரினங்களை உண்ணும் மின் தின்னும் பறவைகள் அழிவுக்குள்ளாகின்றன. தமிழகம் உள்ளிட்ட இந்திய மாநிலங்களில் பெரிய நீர்ப்பறவையான கூழைக்கடாக்கள் காணப்படுகின்றன. இது தவிர, தமிழ்நாட்டில் இனப்பெருக்கம் செய்யும் மீன் உண்ணும் பறவைகள் பெரும்பாலானவை பூச்சிக் கொல்லிகளால் பாதிப்படைவதும் கண்டறியப்பட்டுள்ளது"[18] என்று காடு இதழில் வெளியான கட்டுரை மூலம் அறியப்பட்டது. இவை தவிர "தன் இலாபம் கருதியப் பறவைகளை அழிக்கத் தயங்குவதில்லை மனிதன். இறைச்சிக்காகவும், விளையாட்டுக்காகவும், மனிதன் பறவைகளை வெகுகாலமாக வேட்டையாடி வருகிறான். இந்தியாவில் பறவைகளை வேட்டையாடுபவர்கள் வேடர் என்னும் சாதியினராகவே உருவாகியிருக்கிறார்கள். பறவைகளை வேட்டையாடி அழிப்பது அவர்களுடைய குல தருமமாகக் கொள்ளப்படுகிறது. கூண்டுப் பறவையிடம் மட்டும் அக்கறையும் அன்பும் செலுத்தும் மனிதன் வெளி உலகப்

பறவைகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை”[19]. இவ்வாறு “பறவைகளைப் பாதுகாப்பதில் மனிதன் அக்கறை எடுத்துக் கொண்டிருந்தால் எத்தனையோ வகைகள் முற்றிலும் அழிந்து போயிருக்கமாட்டா. சில வகைகள் இயற்கை காரணமாக மறைந்தொழிந்திருக்கின்றன. நாரைக் குடும்பத்தைச் சேர்ந்தவை ஒரு காலத்தில் பெருமளவில் இருந்திருக்கின்றன. இக்காலத்தில் உள்ள அளவைவிடப் பன்மடங்கு வாழ்ந்திருக்கின்றன. அவை இலட்சக்கணக்கான ஆண்டுகளாகக் குறைந்து கொண்டே வந்திருக்கின்றன. உருவில் பெரிய தீக்கோழிகள் இப்போது அருகிவருகின்றன. அவற்றின் அழிவுக்கு மனிதன் ஒரு காரணம்”[20]. ஆகையினால் சிந்திக்கும் திறன் படைத்த மனிதன் சற்று சிந்தித்தானாயின் தனது சுயநலத்தைக் குறைத்துக் கொண்டு பறவைகளை அழிவிலிருந்து வெகுவாகக் காக்க முடியும்.

**பறவைகள் பாதுகாப்பிற்கான வழிகள்**

சதுப்புநிலங்கள், புல்வெளி, காடுகள் போன்றவை வளர்ச்சி நடவடிக்கையின் காரணமாக கடுமையான நெருக்கடிச் சூழலுக்கு பறவைகள் உள்ளாகிப் போனதால் பறவைகளின் எண்ணிக்கை குறைவு அச்சுறுத்தலை ஏற்படுத்துவதால் “எஞ்சியுள்ள இயற்கை வாழிடங்கள், அவற்றைச் சார்ந்து வாழும் உயிரினங்கள் குறித்து அறிவியல் பூர்வமான களஆய்வை நடத்தி, பாதுகாக்கத் தேவையான நடவடிக்கைகளை விரைவாக எடுக்க வேண்டும்”[21] என்று பி.என்.எச்.எஸ் இயக்குனரான ஆசாத் ரஹ்மானி கூறியுள்ளதாக செய்தி கிடைத்துள்ளது. மேலும் “உலகில் சூழலியல் பாதுகாப்பு வேண்டும் என்ற கருத்து வளர்ந்து வருகிறது. மனிதர்களில், பறவைகள் பாதுகாப்பு பற்றிக் கருத்துச் செலுத்துபவர்கள் அதிகரித்து வருகிறார்கள். இந்தியாவில் பறவையினங்களை அரசாங்க அனுமதியின்றி வேட்டையாடி அழித்தல் கூடாது என்று சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. என்றாலும் மக்களிடம் பொதுவாகப் பறவை பற்றி நல்லுணர்வு வளரவில்லை. சூழல் பாதுகாப்புணர்வு வளர்ந்தால் பறவைகள் பொறுத்தும் அக்கறை உண்டாகும்”[22]. இத்தோடு பறவைகளின் இனப்பெருக்கம் பாதிக்கப்பட்டால் அந்த இனமே அழிந்துவிடும் என்பதால் பறவைகளைக் காப்பதன் மூலம் நமது சுற்றுச்சூழலையும் காக்க வேண்டுமாயின் பறவைகளைக் காக்க வேண்டிய இரக்கத்தோடு அக்கறையும் பறவைகள் குறித்த அறிவும் இருக்கவேண்டும்.

## தொகுப்புரை

- ❖ உலகில் முதுகெலும்புடைய இனங்களில் அதிக எண்ணிக்கையுடையது மீன்கள் இவற்றிற்கு அடுத்தபடியான இடத்தைப் பெற்றிருப்பது பறவைகள் ஆகும்.
- ❖ சிற்றுயிர்கள் முதல் பேருயிர்கள் வரை உலகில் காணப்படும் அனைத்து உயிரினங்களுக்கும் வாழ்வியல் மற்றும் சூழலியல் போன்ற அடிப்படைத் தேவைகளுக்கு ஆதாரமாக இருப்பது தாவரங்கள் என்பதை இந்த இயல் சுட்டிக்காட்டியுள்ளது.
- ❖ அரையம் என்ற மரம் ஓசையிடுவதைக் கேட்டு போகில் என்னும் இடம்பெயர் புள் தனது உணவான பழத்தை உண்ணாமல் சென்றதாகக் கூறப்பட்டுள்ளதன் மூலம் போகில் என்னும் அரிய வகைப் பறவை வாழ்ந்தது தெரியவருகிறது.
- ❖ இனப்பெருக்கக் காலத்தில் மட்டும் பறவைகள் தங்களுக்கான இருப்பிடத்தை அமைத்துக் கொள்கின்றன. மற்ற காலங்களில் கூட்டமாகச் சேர்ந்து வாழும் இயல்புடையன ஆகும்.
- ❖ அன்னங்கள் கடற்கரையிலும், கடற்கரைச் சிற்றூர்களிலும் உள்ள பனை மடலில் வாழும் என்றும், இவை மறைவான சூழலில் கூடு கட்டும் என்றும் புலவர்கள் பதிவுசெய்துள்ளனர்.
- ❖ பறவைகள் ஓய்வெடுக்கும் நேரங்களில் வளர்சிதை மாற்றம் நிகழ்வதும், இதற்கு 1300 முதல் 1500 கிலோ கலோரி அளவுள்ள ஆற்றல் விகிதம் தேவைப்படும் என்பதும் விளக்கப்பட்டுள்ளது.
- ❖ நாரைகள் மருத மரச் சோலையிலும், புன்னை மரங்களிலும், வைக்கோற் போரிலும் தங்கும், மேலும் நாரை இனத்தைச் சேர்ந்த குருகுப் பறவைகளும் பனை மரத்தின் மடலிலும், உப்பு வணிகர்களின் உடைந்த வண்டியிலும் தனது இருப்பிடத்தை அமைத்திருந்ததாகப் பாடல்கள் பதிவு செய்துள்ளன.
- ❖ சங்க இலக்கியப் பாடல்களில் அதிகமாக இடம் பெற்றிருக்கும் பருந்து பற்றியப் பாடல்களின் இடம் பெற்றிருப்பது கருடப்பருந்தன்று என்பதும், இவை வறட்சியான பகுதியில் வாழும் தன்மையுடையது என்பது கண்டு சொல்லப்பட்டுள்ளது.

- கூடுகட்டும் பழக்கமின்றி பிற பறவைகளின் கூட்டில் முட்டையிட்டு வாழும் பண்புடைய குயில் மறைந்து வாழும் தன்மை கொண்டது என்பதை அறியமுடிகிறது.

- மாமரச் சோலையிலும், யானைகள் இல்லாத கட்டுத்தறியிலும், கானவர் அமைக்கும் பரணிலும் மயில்கள் தங்கியுள்ளமையால், இவையும் மக்கள் அருகிலேயே வாழும் பழக்கமுடையது எனலாம்.

- விரும்பத்தகாத அச்சத்தை உண்டாக்கும் பறவையான ஆந்தை பாலைவனத்திலும், சுடுகாட்டிலும் வாழும் இயல்புடையது ஆகும்.

- வீட்டில் வளர்க்கும் கோழியைப் போலவே காட்டுக் கோழியும் அதிக முட்டைகளை இடும் என்பதைப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

- சிறுவெண்காக்கை கடற்கரையிலுள்ள தோணியில் கூடு அமைக்கும் என்றும், புன்னை மரக்கிளையில் தங்கும் என்றும் தெரியமுடிகிறது.

- சிட்டுக்குருவிகளின் இனத்தைச் சேர்ந்த தூக்கணங்குருவி குளிரும், வெப்பமும் தாக்காத வகையில் வேலைப்பாடுகள் நிறம்பியக் கூட்டை அமைத்துக் கொள்வது வியப்பானதாகும்.

- சங்ககாலத்தில் தமிழர் இயற்கையோடு இணைந்த வாழ்வை நடத்தினர். அதனால் நீர்நிலைகள், பழனங்கள், கழனிகள், ஆறுகள், காடுகள் எல்லாம் பறவைகள் வாழும் சரணாலயங்களாக விளங்கின. ஆனால் இன்று மனித வாழ்க்கை அறிவியலின் வளர்ச்சியால் இயந்திரத்தனமாகிவிட்டதால், இயற்கை மாசு, ஒலிமாசு என்று பறவைகள் நம்மிடமிருந்து அருகிவருகின்றன என்பதே அறிவியல் உண்மை.

- மனிதனால் சுற்றுச் சூழல் பாதிக்கப்படுமாயின், பறவை இனமே அழிந்து விடும் என்பதை இந்த இயல் சுட்டிக்காட்டியுள்ளது.

**குறிப்புகள்**

1. சண்முகசுந்தரம்.ச., தமிழ்நாட்டுத் தாவரங்கள்., பக் - 8
2. பி.எல்.சாமி.,சங்க நூல்களில் மரங்கள்., பக் -10
3. மு.வரதராஜன்., குறுந்தொகைச் செல்வம்., பக் - 129
4. செந்தமிழ்க் கோதை.உ_லோ., சுற்றுச்சூழல் அறிவியல்., பக் - 22
5. கே.கே.ராஜன்.,பறவைகள்., பக் -22
6. பாக்யவதி சங்கரலிங்கம்.,சங்க இலக்கியத்தில் மயில்., பக் -146
7. இரா.அறவேந்தன்., குறுந்தொகை., பக்-77
8. க.ரத்னம்., தென்னிந்தியப் பறவைகள்., பக் -106
9. தியேடோர் பாஸ்கரன்.,நம்மைச் சுற்றி காட்டுயிர்., பக்க-24:25
10. மேலது
11. ஆதி வள்ளியப்பன்., சிட்டு., பக் -36
12. பெரியசாமி தூரண்.,பறவைகளைப் பார்., பக் -20
13. ப.அருண்குமார்.,காடு., பக் -20
14. ஆதி வள்ளியப்பன்., நாராய் நாராய்., பக் -18
15. வெ.கிருபாநந்தினி.,காடு.,பக் -24
16. சு.முரளிதரன்., காடு., பக் -21
17. பா.ஜம்புலிங்கம்.,படியாக்கம்.,பக்-10
18. சா. செயக்குமார்.,காடு2014.,பக்- 2
19. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -110
20. மேலது – பக்க -110:111
21. ஆசாத் ரஹ்மானி., தி இந்து நாளிதழ் டி -3., பக் -11
22. கு.ராஜாராம்., பறவைகள் பற்றிய அறிவியல்., பக் -112

## முடிவுரை

- பாறைப்படிவுகள் போன்றவற்றின் வயதைக் கொண்டு பழங்காலத்தில் வாழ்ந்த உயிரினங்கள் குறித்து தெரிந்து கொள்ளப்பட்டது போன்று உயிரினங்கள் தோன்றிய முறை குறித்தும், அவற்றின் தோற்றக்காலங்கள் குறித்தும், அத்தோற்றக் காலத்தில் பறவைகளின் தோற்றம் வந்தமை குறித்தும் தெளிவான முறையில் விளக்கப்பட்டுள்ளன.
- பறவைகளைப் பல்வேறு கோணங்களில் வருணித்து கூறியுள்ள சங்கப் புலவர்கள் நுண்ணிய காட்சியுடையவர்களாகவும், நுட்பமான புலனுணர்வு கொண்டவர்களாகவும் இருந்திருப்பதைக் காணும் போது அவர்கள் இயற்கையின் மீது வைத்திருந்த காதலை தெளிவாக உணர்ந்து கொள்ளமுடிகிறது.
- சங்கப்புலவர்கள் தங்களது பாடல்களில் உவமை மற்றும் வருணனைக்காகப் பயன்படுத்தியிருக்கும் உயிரினங்களில் 35 விலங்குகள் பற்றியும் 58 பறவைகள் பற்றியும் கூறியிருக்கின்றனர். இதில் பறவைகள் பற்றிய செய்திகள் இலைமறை காயாகவே கொடுக்கப்பட்டுள்ளன.
- சங்கப் பாடல்களில் பறவைகள் இடம் பெற்றுள்ள பாடல்கள் சிலவற்றில் 'புள்' என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இதற்கு உரை எழுதும் உரையாசிரியர்களிடம் இருவேறு கருத்து வேறுபாடுகள் இருந்திருப்பதை இவ்வாய்வு எடுத்துரைத்துள்ளது.
- உள்ளுறை, உவமம், உள்ளுறையின் நோக்கம், உள்ளுறைக்கான பின்னணி, ஏனைய உவமம், ஒப்புவமை, உடனுறை உவமை, இறைச்சிப் பொருள் போன்ற முறைகளில் மனிதர்களின் வாழ்க்கை நிலைகளைக் கூறப் பறவைகளைச் சிறப்பான முறையில் ஏற்ற இடங்களில் பயன்படுத்தியுள்ளமை சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.
- ஐந்தறிவுடைய பறவைகளின் நுண்ணிய செய்கைகளை உற்றுநோக்கியுள்ள புலவர்கள் பறவைகளின் வாய், இறகு, நகம், முட்டை என்று உடல் உறுப்புகளை தங்களது பாடல்களுக்குத் தேவையான இடங்களில் புகுத்தி அரிய காட்சிகளை நம் கண்முன் கொண்டுவந்துள்ளனர்.
- இலக்கியங்களில் அகமாந்தர்களைப் பற்றிய கூற்றுக்களில் மகளிரைப் பாடியுள்ள கூற்றுகள் அதிகம். இதில் தலைமகளின் அறியாமை, மகிழ்ச்சி

மற்றும் வருத்தமிகுதியின் போது ஆறுதல் அளிப்பவையாகவும் பறவைகள் இருந்துள்ளமை விளக்கப்பட்டுள்ளது.

- ❖ பெண்கள் தினைப்புனத்தில் கிளியை விரட்டுவதற்கு ஒலியெழுப்புதல், பரண் அமைத்து கிளியோட்டுதல், கருவிகளைப் பயன்படுத்துதல், பொய்ப்புலி போன்றவற்றை செய்துள்ளனர் என்பதன் மூலம் பண்டைய மனிதர்கள் பறவைகளைத் துன்புறுத்தும் எந்தவொரு செய்கைகளையும் செய்யவில்லை என்பதை அறியமுடிகிறது.
- ❖ பறவைகள் தங்கள் இறகை அலகுகளால் சீர்படுத்தி கொள்வதன் மூலம் பிணியிலிருந்தும், சோம்பலிலிருந்தும் தங்களைக் காத்துக்கொள்ளும் நுட்பத்தை மனிதன் அறிந்து கொண்டதைத் தெரியமுடிகிறது.
- ❖ பறவைகளைத் தூது விடுதல், பறவை வேட்டையாடுதல், உணவிற்காக வளர்த்தல் போன்ற செயல்களைப் பண்டைய காலங்களில் வாழ்ந்த மக்கள் செய்து இருப்பினும் உயிரினங்களைப் போற்றியும் பாதுகாத்துள்ளமை விளக்கப்பட்டுள்ளது.
- ❖ சங்க இலக்கியங்களில் அகமாந்தர்களின் அதிகப்படியான கூற்றுகள் மகளிருடையதாகவே காணக்கிடக்கின்றன.
- ❖ இறப்புச் சடங்கு நிகழும் இடத்திற்குச் சென்று துக்கம் விசாரிக்கும் பண்பு மனிதர்களிடம் இருப்பதைப் போல பறவைகளிடமும் இருந்திருக்கிறது என்பதை வெள்ளாங்குருகின் குஞ்சு இறந்ததற்காக நாரை சென்றதாக இடம்பெற்றிருக்கும் குறிப்புகள் மூலம் அறியமுடிகிறது.
- ❖ மனிதர்களைப் போன்று பறவைகளிடமும் காதல், ஒழுக்கம், தற்காப்புமுறை, அச்சம், நன்மை செய்யும் பண்பு, கூடிவாழும் தன்மை போன்ற பல பண்புகள் இச்சிற்றினத்திடமிருந்து மனிதர்கள் கற்றுக் கொள்ளத் தக்க பல பண்புகள் உள்ளதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது.
- ❖ இயற்கையோடு இயைந்து வாழும் பறவைகளுக்கு இயற்கையாக வரும் பல்வேறு இன்னல்கள் எதிர்கொண்டு அவை வாழும் திறத்தைப் போன்று மனித சமூகமும் கற்றுக் கொள்ள வேண்டிய பல நல்ல பண்புகள் குறித்து அறிய முடிகிறது.

- உணவிற்காகவும், பருவ மாற்றத்திற்காகவும் நம்மை நாடி வந்து வேளாண்மையில் உழவர்களுக்கு உற்ற தோழனாக விளங்கும் பறவைகள் குறித்து அறிந்து அவற்றைக் காக்க வேண்டியது சமூகத்தின் கடமையாகும்.
- மனிதர்களிடம் காணப்படும் உணவு பழக்க வழக்க மாற்றம் போன்று பறவைகளிடமும் அவற்றின் அலகு அமைப்பிற்கேற்ப உணவுப் பழக்க வழக்கங்களில் மாற்றங்களைக் காணமுடிகின்றது. அவை தானியம் உண்ணுபவை, தேன் குடிப்பவை, பழங்கள் உண்ணி, மாமிச உண்ணி, மழைத்துளி உண்ணி என்று பாகுபடுத்தி இந்த ஆய்வேடு விளக்கியுள்ளது.
- பறவைகள் வண்டிகள் எழுப்பும் ஓசை, குளிர்கால வாடைக்காற்று, மறவர் எழுப்பும் ஓசை, பரதவர் எறி உளி வீசும் ஒலி, காட்டுப்பூனை, யானையின் முழக்கம்,தாவரங்கள் சாயும் ஓசை, எருமைக்கடா நீரில் பாயும் ஓசை,பனம்பழம் நீரில் விழும் ஓசை போன்றவற்றிற்கு அச்சம் கொள்வது சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.
- சங்கப் பாடல்களில் கூறப்பட்டுள்ள ஐந்தறிவு உயிரிகளான பறவைகளின் வெவ்வேறு வகையான உணவு முறைகள் குறித்தும் அவ்வுணவை அப்பறவைகள் எவ்வாறு பெறுகின்றன என்பது குறித்தும் அறிந்துமுடிகிறது.
- மனிதனுக்கு அடுத்தபடியாக பேசும் பண்பினைப் பெற்றுள்ள உயிரினம் கிளி என்பதும் கிளியின் நாவும் மனிதனின் நாக்கினைப் போல தடித்து இருப்பதே கிளி பேசுவதற்கான காரணம் ஆகும். கிளி தவிர்த்து ராஜாமைனா என்னும் பறவையும் பேசும் பண்புடையதாக இருப்பதையும் அறியமுடிகிறது.
- ஆதிகாலத்தில் மனிதனோடு ஒன்றி வாழ்ந்த உயிரினங்களுள் ஒன்றான பறவைகள் பற்றிய நம்பிக்கைகளான புள் ஒலிகேட்டல், சகுனம் பார்த்தல், இயற்கையை உணர்தல், வாழ்க்கை ஒழுங்கமைப்பு, ஜோதிடம் பார்த்தல், கூடிவாழும் தன்மை போன்ற பண்புகளைக் கூறியிருப்பதன் வழியாக பறவையின் இயல்பான வாழ்வினை தங்களது வாழ்வோடு பொருத்தி பார்த்து வந்துள்ளமை வெளிப்படுகிறது.
- பாலை நிலத்தில் வறட்சியின் காரணமாக பறவைகள் எதுவும் இல்லை. அதனால் ஓந்தி நிமித்தம் கூறும் விலங்கினமாகச் சுட்டப்படுகிறது.

- மக்களோடு நெருங்கிவாழும் அறிவுமிக்க பறவையான காக்கையின் ஒலியை நல்ல சகுனமாகக் கருதும் வழக்கம் சங்க காலம் முதலாக இன்று வரை தமிழர்களிடையே மறையாத வழக்கமாக இருந்து வருவது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. மேலும் காக்கை, கழுகு, பருந்து போன்றவை பறவைகள் தோட்டியாக இருந்து நமது சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைக்கத்துணை நிற்பது விளக்கப்பட்டுள்ளது.
- புதிய பறவையின் வருகையும், பழைய பறவை வெளியேறுவதும் ஒரு நாட்டிற்கு ஏற்படப் போகும் தீ நிமித்தமாகவும், போருக்குச் செல்லும் போது காரி செம்போத்து என்னும் பறவை குறுக்கிட்டால் தீ நிமித்தமாகவும், பறவைகள் இடமிருந்து வலமாகச் செல்வது தோல்வி மற்றும் இறப்பைக் குறிப்பதாகவும் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.
- போர்த் தொழில் செய்யும் மறவர் இனத்தவர் மயிலின் தோகையை உரித்து வலிமையான வில்லில் சுற்றியுள்ளதாகவும், மயில் இறகு கொண்டு தொடுக்கப்பட்ட மாலையைச் சூட்டியுள்ளனர் என்றும், மயிற் பீலியின் பிளவுகள் கொண்டு பாம்பின் தோலோடு இயற்றப்பட்ட செருப்பு செய்து பயன்படுத்தியுள்ளனர் என்ற குறிப்புகளைக் காணமுடிகிறது. இவ்வாறு மயிலின் தோகையால் செய்யப்பட்டுள்ள அனைத்திற்கும் தேவையான தோகைகளை மயிலினை வதைத்து எடுக்காமல், இறகுதிர் காலத்தில் அவை கழித்துவிட்ட தோகைகளை மட்டுமே பயன்படுத்தியுள்ளனர் என்பதை இந்த ஆய்வு எடுத்துரைத்துள்ளது.
- பறக்கும் போது பறவைகள் ஒரே போல தோன்றினாலும், உருவம், வாழிட அமைப்பு, உணவுமுறை போன்ற வாழ்வியல் பண்புகளில் மாறுபட்டு இருப்பதைச் சங்கப் புலவர்கள் நமக்கு விட்டுச்சென்றப் படைப்புகள் மூலம் தெரிந்து கொள்ளமுடிகிறது.
- குயில், மயில் போன்ற பறவைகள் தங்களது இனத்தைப் பெருக்கிக் கொள்ளத் தேவையான வாழிடத்தை அமைத்துக் கொள்ளாது, பிற பறவைகளின் கூட்டில் முட்டையிட்டு இனப்பெருக்கம் செய்து கொள்ளும் பண்புடையதாகும்.
- இக்காலத்தில் சவானாக்கள், பாலைவனங்கள், மித வெப்பமுடைய சதுப்பு நிலக்காடுகள் மற்றும் மலட்டு நிலங்களில் வசிப்பதாக கூறப்பட்டிருக்கும் புறாக்கள் சங்க இலக்கியத்தில் பாலைத் திணைக்குரிய பறவையாக இருந்துள்ளது.

❖ சங்க இலக்கியப்பாடல்களில் மயில் பற்றியக் குறிப்புகள் அதிகமாக இடம்பெற்றிருப்பினும், மயிலின் வாழ்வியலைவெளிப்படுத்தும் செய்திகள் மிகக் குறைவாகவே இடம்பெற்றுள்ளன.

❖ நமது நாட்டில் நீர்ப்பறவைகள் பல வகை உண்டு. இவை சுற்றுச்சூழல் நலன்களை வெளிப்படுத்தும் குறியீடுகளாகவும், நீர் நிலைகளின் வளத்தை அடையாளப்படுத்தும் குறியீடுகளாகவும் விளங்குகின்றன.

❖ மனையுறைக் குருவி என்பது தற்போது காணப்படும் சிட்டுக்குருவியாகும். இவை விளைந்த நெல்லை உண்ணும் என்றும், வீட்டின் தாழ்வாரத்தில் மென்மையானப் பொருட்களைக் கொண்டு வீடு அமைத்து வாழும் என்றும், இதன் கூட்டை சேதப்படுத்தக் கூடாது என்ற நம்பிக்கை இன்றும் நிலவி வருவது கண்டுரைக்கப்பட்டுள்ளது.

❖ ஆரம்ப காலங்களில் விவசாயத்திற்கு இயற்கை உரங்களைப் பயன்படுத்திய மனிதன் உற்பத்தியை அதிகரிக்க உயர்தரப் பூச்சிக் கொல்லிகளைப் பயன்படுத்துவதே பறவைகளின் அழிவிற்கு காரணமாகும். இதனால் பறவைகளோடு சேர்ந்து இயற்கையும் பாதிப்படைகிறது என்பதும் கண்டறிந்து சொல்லப்பட்டுள்ளது.

❖ இவ்வாய்வில் குறிப்பிடப்பட்டுள்ள 58 பறவைகளும் மக்களின் வாழ்வியலோடு மட்டுமல்லாமல் உலகில் வாழும் எல்லா உயிரினங்களின் வாழ்வியலோடும் பிரிக்க முடியாதபடி ஓர் உயிர்ச்சங்கிலியாய் இயங்குவது இந்த ஆய்வில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

**குறிப்புகள்**

✓ பறவையியல் குறித்து ஆய்வு மேற்கொள்ளும் ஆய்வாளர்கள் பெருகிட வேண்டும். இதன் மூலம் அறிவியலில் உள்ள உயிரியல் துறையோடு தமிழ் இலக்கியச் சிந்தனைகளை ஒப்பீட்டு முறையில் ஆய்வு மேற்கொண்டால் அறிவியல் சிந்தனைகள் வளர்ந்திட வழி ஏற்படும்.

✓ பறவைகளின் பறக்கும் பண்பைப் பெற்று இருக்கும் ஈயல், வண்டு, வாவல் போன்ற பிற பறக்கும் சிற்றினங்கள் குறித்தும் ஆய்வுகளை மேற்கொள்ளலாம். சங்க இலக்கியத்தில் இவ்வுயிர்கள் குறித்து காணப்பட்ட தரவுகள் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

## துணைநூற்பட்டியல்

### I. முதன்மைச் சான்றாதாரங்கள்

1. **இராமையா பிள்ளை. நா, உ.ஆ** — **‘நற்றிணை’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

2. **இளம்பூரணார்.உ.ஆ** — **‘தொல்காப்பியம்’**
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
1-140,பிரகாசம் சாலை,
சென்னை -1

3. **சாமி.பி.எல்,** — **சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்,**
திருநெல்வேலி, தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்ப்பதிப்புக் கழகம்,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை – 1.

4. **பிரேமா.இரா., உ.ஆ** — **‘குறுந்தொகை’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21,இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

5. **மாணிக்கம்.அ., உ.ஆ** — **‘ஐங்குநூறு’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21,இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

6. **மாணிக்கம்.அ., உ.ஆ** — **‘பதிற்றுப்பத்து’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

7. **மாணிக்கம்.அ., உ.ஆ** — **‘பரிபாடல்’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

8. **மாணிக்கம்.அ., உ.ஆ** — **‘கலித்தொகை’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

9. **மாணிக்கம்.அ., உ.ஆ** — **‘அகநானூறு’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

10. **மாணிக்கம்.அ., உ.ஆ** — **‘புறநானூறு’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

11. **மாணிக்கம்.அ., உ.ஆ** — **‘பத்துப்பாட்டு’**
வர்த்தமானன் பதிப்பகம்,
21, இராமகிருஷ்ணா தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 17.

## II. துணைமைச் சான்றாதாரங்கள்


1. **அண்ணாதுரை.கு.,** **'தமிழக அறிவியல் ஆசிரியர் மன்றம்'**
தஞ்சாவூர் -613007.

2. **அமிர்தலிங்கன். பூ.** **'வள்ளுவர் கண்ட உயிரினங்கள்'**
திருவரசு புத்தக நிலையம்,
23,தீனதயாளு தெரு,
தியாகராய நகர்,
சென்னை-17.

3. **அருண்குமார். ப,** **காடு-2014 செப் -அக் இதழ்**
தடாகம் வெளியீடு
112, திருவள்ளுவர் சாலை
திருவான்மியூர், சென்னை -14.

4. **அழகம்மை.கேபி.,** **சமூக நோக்கில் சங்க மகளிர்,**
மணிவாசகர் பதிப்பகம்,
31,சிங்கர் தெரு பாரிமுனை,
சென்னை-600108.

5. **அறவாணன்.க.ப.,** **அற்றைநாட் காதலும் வீரமும்,**
தமிழ்க் கோட்டம்,
பாரி நிலையம்,
சென்னை -600108.

6. **அறவேந்தன்.இரா., ப.ஆ** **'குறுந்தொகை'**
காவ்யா வெளியீடு,
16,இரண்டாம் குறுக்கு வீதி,
டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம்,
சென்னை – 600024.

7. **அனுமந்தராயர்** **'கனவுகளின் பலன்கள்'**
மயிலவன் பதிப்பகம்,
18,பெருமாள் கோவில் தெரு,
வடபழனி,
சென்னை – 600026.

8. **ஆதி வள்ளியப்பன்** **'மனிதர்க்கு தோழனடி, உயிரினங்கள் பற்றி'**
வெளியீடு: பூவுலகின் நண்பர்கள்
கனகதுர்கா வணிக வளாகம்,
கங்கையம்மன் கோவில் தெரு,
வடபழனி,
சென்னை – 600026.

9. **ஆதி வள்ளியப்பன்** **'சிட்டு குருவியின் வாழ்வும் வீழ்ச்சியும்'**
106/2,முதல் தளம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
இராயப்பேட்டை,
சென்னை – 600014.

10. **ஆதி வள்ளியப்பன்** **'நாராய் நாராய்'**
வெளியீடு: பூவுலகின் நண்பர்கள்
கனகதுர்கா வணிக வளாகம்,
கங்கையம்மன் கோவில் தெரு,
வடபழனி,
சென்னை – 600026.

11. **இளங்குமரன்.இரா,** **'தகடூர் யாத்திரை மூலமும் உரையும் ',**
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
1-140,பிரகாசம் சாலை,
சென்னை -1.

12. **இளங்குமரனார்.இரா.,** **'தமிழர் வாழ்வியல் இலக்கணம் ',**
அமிழ்தம் பதிப்பகம்,
தியாகராய நகர்,
சென்னை – 600017.

13. **இராஜேந்திரன்.என்.,** **‘உயிரியல் தாளமுறை’,** தமிழ் வளர்ச்சிக்கழக வெளியீடு, டிடி பப்ளிகேஷன்ஸ், சென்னை.

14. **இராசு பவுன்துரை,** **‘தமிழகப் பாறை ஓவியங்கள்’,** மெய்யப்பன் தமிழாய்வகம், 53,புதுத்தெரு, சிதம்பரம் - 608001.

15. **கடிகாசலம்.ந.** **‘சங்கப் புலவரின் பல்துறை அறிவு சங்க இலக்கியத்தில் நிமித்தக்குறியீடு’** மெய்யப்பன் பதிப்பகம், 53, புதுவை, சிதம்பரம் -1

16. **கமலா முருகன்,** **‘வளையாபதி குண்டலகேசி மூலமும்’ உரையும்,** சாரதா பதிப்பகம், சென்னை -600014.

17. **கருப்பணன்.உ.,** **‘பறவைகள் எப்படிப் பறக்கக் கற்றன’** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 41-B,சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 600098.

18. **கலியாணசுந்தரம்.தெ.,** **‘சங்க அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம்’** வாணி பதிப்பகம், 402,அழகேசன் சாலை, கோவை -11.

20. **காந்தி.க.** **‘தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்’** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 2003.

21. **குழந்தை என். பி.ஏ ,** **‘அறிவியல் ஆராய்ச்சிகள்’** திருநெல்வேலி,தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 154, டி.டி.கே.சாலை, சென்னை – 18.

22. **சண்முகசுந்தரம்.ச.,** **‘தமிழ்நாட்டுத் தாவரங்கள்’,** மெய்யப்பன் தமிழாய்வகம், 53,புதுத்தெரு, சிதம்பரம் - 808001.

23. **சதாசிவம்.கோவை,** **‘ஊர்ப்புறத்துப் பறவைகள்’** வெளிச்சம் வெளியீடு, கோயம்புத்தூர் -641004.

24. **சரளா ராசகோபாலன்** **‘சங்க இலக்கியத்தில் தோழி’** ஒளிப் பதிப்பகம், 63,டாக்டர் ரங்காச்சாரி சாலை, சென்னை -600018

25. **சாமி.பி.எல்,** **‘சங்க நூல்களில் மரங்கள்’,** திருக்குறள் பதிப்பகம், 66,பெரியார் தெரு, எம் ஜி ஆர் நகர், சென்னை – 78.

26. **சாமி.பி.எல்,** **‘சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்’,** சைவ சித்தாந்த நூல் பதிப்பகம், திருநெல்வேலி – 6.

27. **சாமிநாதையர்.உ.வே,** **‘பெருங்கதை பகுதி -2 இலாவாண காண்டம்’,** உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை -90

28. **சாமிநாதையர்.உ.வே,** **‘பெருங்கதை பகுதி -2 மகத காண்டம்’,** உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை -90

29. **சிவலிங்கனார்.ஆ.,** **‘தொல்காப்பிய உரைவளம், பொருளதிகாரம் -அகத்திணையியல்’,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை -600 113.

30. **சிவன்** **‘சார்லஸ் டார்வின் உயிர்களின் மூலம்’** கலா நிலையம், மயிலாப்பூர், சென்னை - 4

31. **சீனிவாசன்.ரா(பே.ஆ)** **‘சங்க இலக்கியத்தில் உவமைகள்’** அணியகம், 22, செல்லம்மாள் தெரு, சென்னை – 30.

32. **சுசிலா அப்பாத்துரை** **‘நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்’,** 41 –B சிட்கோ, அம்பத்தூர், சென்னை – 600098.

33. **சுப்புரெட்டியார்.ந** — **'அகத்திணைக் கொள்கைகள்'**
நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
137, ஜானி ஜான் கான் ரோடு,
சென்னை – 600014.

34. **செங்குட்டுவன். ப.** — **'டார்வின் ஆய்வும் விளைவும்',**
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
பழைய எண்24,
தியாகராய நகர்,
சென்னை -17.

35. **செந்தமிழ்க்கோதை .உலோ.,** — **'சுற்றுச்சூழல் அறிவியல்',**
பாவை பிரிண்டர்ஸ்,
142,ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை – 14.

36. **செல்வராசு.நா.,** — **'பண்டையத் தமிழர் திருமண வாழ்க்கை'**
காவ்யா வெளியீடு,
16,இரண்டாம் குறுக்கு வீதி,
டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம்,
சென்னை – 600024.

37. **சோமசுந்தரனார்.பொ.வே,** — **'கல்லாடம்',**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்,
கழக வெளியீடு,
சென்னை -18.

38. **ஞானசம்பந்தன்.அ.ச.,** — **'இலக்கியமும் மரபுகளும்',**
முல்லை நிலையம்,
9,பாரதிநகர்,முதல் தெரு,
தி.நகர்,
சென்னை -19.

39. **தமிழண்ணல்,** **‘உள்ளங்கள் ஒன்றிடும் அன்றில்’,**
தமிழ்ப் பயிற்சிக் களம்,
மதுரை – 20,
முதல் பதிப்பு, மே -2009.

40. **தியேடோர் பாஸ்கரன்.சு,** **‘நம்மைச் சுற்றி காட்டுயிர்’**
புக்ஸ் ஃபார் சில்ரன்,
பாரதி புத்தகாலயத்தின் ஓர் அங்கம்,
421, அண்ணாசாலை,
தேனாம்பேட்டை,
சென்னை – 600018.

41. **தியேடோர் பாஸ்கரன்.சு,** **‘தாமரை பூத்த தடாகம்’**
உயிர்மை பதிப்பகம்,
மணி ஆஃப்செட்,
சென்னை – 600005.

42. **திருஞானசம்பந்தம்.ச.,** **‘நாற்கவிராச நம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கம்’,**
கதிர் பதிப்பகம்,
தெற்கு வீதி,
திருவையாறு -613204.
இரண்டாம் பதிப்பு, சூலை -1958.

43. **திலகவதி.க.,** **‘சங்ககால மகளிர் வாழ்வியல்’,**
இறையருள் பதிப்பகம்,
4/371, முதல்தெரு –சக்தி நகர்,
காட்டூர்,
திருச்சிராப்பள்ளி -620019.

44. **நமச்சிவாயம்.சே.,** **‘தமிழர் உணவு’**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம்
தரமணி
சென்னை – 600113.

45. **பக்தவத்சல பாரதி.,** **‘பண்பாட்டு மானுடவியல்’**
மணிவாசகர் பதிப்பகம்
8/7, சிங்கர் தெரு
பாரிமுனை,
சென்னை – 600108.

46. **பாக்யவதி சங்கரலிங்கம்.,** **‘சங்க இலக்கியத்தில் மயில்’**
உலகத்தமிழ் கல்வி இயக்கம்,
33,திருமலை நகர் இணைப்பு,
பெருங்குடி,
சென்னை – 600096.

47. **பாலுச்சாமி.எ.,** **‘மருதத்தில் மக்கள் வாழ்வியல்’**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி,
சென்னை – 600113.

48. **பெரியசாமி தூரண்** **‘பறவைகளைப் பார்’**
நேஷனல் புக் டிரஸ்ட்,
இந்தியா,
நியூ டில்லி -16.

49. **பொன்னுசாமி.மு.,** **‘அறிவியல் அணுகுமுறையில் ஆராய்ச்சியியல்’**
இந்து பதிப்பகம்,
கருமத்தம்பட்டி,
கோயம்புத்தூர் - 641659.

50. **மகேஸ்வரி.ப.,** **‘புறநானூறும் வரலாறும்’**
சேகர் பதிப்பகம்,
66,பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர்.நகர்,
சென்னை – 600078.

51. **மலையமான்.,** **'உயிரியலில் ஓர் உலா',**
அன்புப் பதிப்பகம்,
ரங்காச்சாரி சாலை,
சென்னை -600018.

52. **மாணிக்கம், வ.சுப.,** **'தொல்காப்பியப் புதுமை'**
ராமையா பதிப்பகம்
சென்னை -14
முதல் பதிப்பு, டிசம்பர் -2010.

53. **மாணிக்கம்.வ.சுப.** **'தமிழ்க்காதல்'**
பாரி நிலையம்,
சென்னை - 1
பதிப்பு - 1980.

54. **மாதையன்.பெ** **'அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்',**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை – 14.
முதல் பதிப்பு, டிசம்பர் -2004.

55. **முகமது அலி.ச,** **'வட்டமிடும் கழுகு'**
தடாகம் வெளியீடு,
112,திருவள்ளுவர் சாலை,
திருவான்மியூர்,
சென்னை – 41.

56. **முத்து.சு.,** **'காலந்தோறும் அறிவியல் தொழில் நுட்பம்'**
லிப்ரா ஆப்செட் பிரிண்டர்ஸ்,
தஞ்சாவூர்.

57. **முத்துகண்ணப்பன்.தி,** **'சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்'**
அதிபத்தர் பதிப்பகம்,
வசந்தா பிரஸ் சாலை,
அருணாச்சல புரம்,
அடையாறு, சென்னை – 20

**58. முத்துலக்குமி.வே,** **'பண்டையத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்'**
அனிதா பதிப்பகம்,
5,பிடாரி கோயில்,
திருச்சிராப்பள்ளி – 620002.

**59. ராஜன்.கே.கே,** **'பறவைகள்'**
சூடாமணி பிரசுரம்,
புதிய எண் 23/2
மேற்கு மாம்பலம்,
சென்னை – 33.

**60. ராஜகோபாலன்.ஆர்,** **'7வது அறிவு',**
கல்யாண் சாகர் நிப்பாணி,
விவா புக்ஸ்,
சென்னை.

**61. ராஜாராம்.கு.,** **'பறவைகள் பற்றிய அறிவியல்',**
நாகு வெளியீடு.,
ap-1108, தென்றல் குடியிருப்பு,
சென்னை.

**62. ருக்மணி.இரா.,** **'சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்'**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
41 –B சிட்கோ,
அம்பத்தூர்,
சென்னை – 600098.

**63. லூர்து ராஜ்.எஸ்,** **'பனிப்பறவைகள் விலங்குகள்'**
தாமரை பப்ளிகேஷன்ஸ்
41 –B சிட்கோ,
அம்பத்தூர்,
சென்னை – 600098.

64. **வரதராசன்.மு.,** **'குறுந்தொகைச் செல்வம்',**
பாரி நிலையம்,
சென்னை – 1.

65. **வரதராசன்.மு,** **'இலக்கிய மரபு',**
பாரி நிலையம்,
184,பிராட்வே,
சென்னை -600108.

66. **வலசை வீரபாண்டியன்** **'வாழத்துடிக்கும் வனவிலங்குகள்'**
பாரதி புத்தகாலயம்,
சென்னை – 16.

67. **விஜயவர்மன்,** **'விந்தையான பறவைகள்',**
அருணா பப்ளிகேஷன்,
சென்னை.

68. **வேங்கடசாமி.மயிலை.சீனி.,** **'பழங்காலத் தமிழர் வாணிகம்',**
வசந்தா பதிப்பகம்,
மனை எண் - 9,
ஜோசப் காலனி,
ஆதம்பாக்கம்,
சென்னை – 88.

69. **வேங்கடராமச் செட்டியார்.செ.,** **'பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள் '**
பாரி நிலையம்,
சென்னை.

70. **வேங்கடேசன். ந.** **'சங்க நூலாய்வும் சாமியும்',**
சேகர் பதிப்பகம்,
66/1,பெரியார் தெரு,
சென்னை.

71. **ஸ்ரீ சந்திரன்.ஜெ.,** **'சீவக சிந்தாமணி',**
வர்த்தமானன் பதிப்பக வெளியீடு,
40,சரோஜினி தெரு,
தியாகராய நகர்,
சென்னை -17.

**72. ஸ்ரீ சந்திரன்.ஜெ.,** **'மணிமேகலை',**
வா்த்தமானன் பதிப்பக வெளியீடு,
40,சரோஜினி தெரு,
தியாகராய நகா்,
சென்னை -17.

## III. ஆய்வேடுகள்

1. மு.கருப்பையா
   சங்க இலக்கியங்களில் திணை மரபும் திணை மயக்கமும்,
   தியாகராசா் கல்லூரி (தன்னாட்சி)
   மதுரை -625009
   ஏப்ரல் -2013.
2. செ.சிவகாமி சுந்தரி
   கவிஞா் வைரமுத்துவின் படைப்புகளில் உயிரினங்கள்
   ஏ.பி.சி.மாகலெட்சுமி மகளிா் கல்லூரி,
   தூத்துக்குடி – 2
   ஜனவரி – 2013.

## IV. அகராதிகள்

1. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி
   திருவான்மியூா்,
   சென்னை – 40
   இரண்டாம் பதிப்பு, மே. 2008.
2. மெய்யப்பன்,ச.(ப.ஆ)
   வெற்றித் தமிழ் அகராதி
   மணிவாசகா் பதிப்பகம்
   சென்னை -600108
   ஒன்பதாம் பதிப்பு, பிப்ரவரி -2011.

## V. நிகண்டுகள்

1. பிங்கல முனிவா்.,
   பிங்கல நிகண்டு,
   கழக வெளியீடு,
   1971.

**VI. மாத இதழ்கள்**

1. உதய சங்கர்
   பூவுலகு மின்மினி
   நவம்பர் இதழ்.
2. செயக்குமார்.சா.
   காடு 2014 ,நவம் - டிசம்பர்
   112,திருவள்ளுவர் சாலை
   திருவான்மியூர்,
   சென்னை-41.

**VII. ஆங்கில நூல்கள்**

1. Nilakanda sastri, K.A. Foreign Notices of South India,
   University of Madras,
   Madras,
   1939.
2. Thaninayagam, X.S., Nature in Ancient Tamil Poetry,
   Tamil Literary Society,
   Tuticorin,
   1952.

**VIII. ஆங்கில இதழ்கள்**

1. Hoffman TYC and Walsbery GE. 1999. The Journal of Experimental Biology. 202; 3021-3028
2. Murton RK, Thearle RJP and Thompson J. 1972. British Ecological Society. 9(3); 835-874.
3. Marder J and Arieli Y. 1988. Comparative Biochemistry and Physiology Part A; Physilogy. 91(1):166-170
4. William A, Searcy J. 2011. The peacock's Tale, Featured Articles in This Animal Behaviour 82(2011) 1-2

## நற்றிணையில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1 | அன்றில் | 124,152,218,303,335 |
| 2 | அன்னம் | 73,356 |
| 3 | ஈயல் | 59 |
| 4 | காக்கை | 31,231,258,272,281,343,345,358,367 |
| 5 | கானக்கோழி | 21,389 |
| 6 | கிளி | 13,25,102,104,134,143,147,194,206,209,259,288,301,304, 317,328,368,376,389 |
| 7 | குயில் | 9,97,118,157,224,243,246 |
| 8 | குருகு | 4,27,31,35,54,67,70,74,91,123,127,131,138,167,178,180, 183,189,199,211,216,263,291,312,330,338,369,372 |
| 9 | குருவி | 58,181,231 |
| 10 | கூகை | 83,218,319 |
| 11 | கொக்கு | 100,258,280,326 |
| 12 | கோழி | 297 |
| 13 | சிச்சிலி | 61 |
| 14 | பருந்து | 3,141,298 |
| 15 | புறா | 66,71,162,189,305,314,384 |
| 16 | மயில் | 13,115,248,262,264,276,288,301,305,357 |
| 17 | மின்மினி | 44 |
| 18 | வண்டு | 17,25,27,30,35,56,97,105,118,168,176,187,197,235,238, 245,249,270,277,290,323,342,348,399 |
| 19 | வாவல் | 87,218,279 |

## குறுந்தொகையில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1. | அன்றில் | 57,160,177,301 |
| 2. | அன்னம் | 205,300,304 |
| 3. | காக்கை | 210,246,313,334 |
| 4. | கானக்கோழி | 242 |
| 5. | கிளி | 67,133,141,142,198,217,240,291,333,346,360 |
| 6. | குயில் | 192 |
| 7. | குருவி | 46,72,85 |
| 8. | கூகை | 153,393 |
| 9. | பருந்து | 207,283,285 |
| 10. | புறா | 79,174,285,274 |
| 11. | பூழ் | 68 |
| 12. | வாவல் | 172 |

## ஐங்குறுநூற்றில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1 | அன்றில் | 381 |
| 2 | அன்னம் | 106 |
| 3 | கம்புட்கோழி | 60,85 |
| 4 | கழுகு | 314 |
| 5 | காக்கை | 161,162,163,164,165,166,167,168,169,170,314, 319 |
| 6 | கிளி | 260,281,282,283,284,285,286,287,288,289,290, 375 |
| 7 | குயில் | 341,346,369 |
| 8 | குருகு | 7,9,17,70,81,86,114,122,144,151,153,154,155, 156,157,158,159,160,186 |
| 9 | குருவி | 295 |
| 10 | சிச்சிலி | 447 |
| 11 | செம்பூழ் | 469 |
| 12 | நீர்க்கோழி | 51 |
| 13 | பருந்து | 321,335 |
| 14 | புறா | 425 |
| 15 | போகில் | 303 |
| 16 | மயில் | 8,74,250,258,291,292,293,294,295,296,297,298, 299,300,371,413,431,492 |
| 17 | வண்டு | 20,40,65,67,82,89,90,93,172,215,226,239,240, 254,267,342,369,370,383,416,447,489,494 |
| 18 | வாவல் | 339,378 |
| 19 | வானம்பாடி | 418 |

பதிற்றுப்பத்தில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1 | கிளி | 78 |
| 2 | குருகு | 23,29,30,32,51,73,78 |
| 3 | கூகை | 22,44 |
| 4 | கொக்கு | 21 |
| 5 | பருந்து | 12,30,36,51,67,74,77 |
| 6 | புறா | 39 |
| 7 | மயில் | 27,90 |
| 8 | வண்டு | 12,14,31,46,50,51,60,62,67,70,81,82,89,90 |

பரிபாடலில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகளின் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1 | அன்னம் | 3,12 |
| 2 | இருதலைப்புள் | 8 |
| 3 | கிளி | 9 |
| 4 | குயில் | 9,15 |
| 5 | குருகு | 6 |
| 6 | குருவி | 18 |
| 7 | கோழி | 5,8,11 |
| 8 | பருந்து | 3,4,8 |
| 9 | மயில் | 5,6,8,9,11,15,17,18,19,20,21 |
| 10 | வண்டு | 7,8,9,10,11,14,16,17,18,19,20,21,22 |

## கலித்தொகையில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1 | அன்றில் | 129,131,137 |
| 2 | அன்னம் | 69,70,122 |
| 3 | கிளி | 13,20,37,50,55,72 |
| 4 | குயில் | 27,28,30,33,34,35,36,92 |
| 5 | குருகு | 54,121,126,128 |
| 6 | கொக்கு | 94 |
| 7 | சேவல் | 70 |
| 8 | பருந்து | 82,106,147 |
| 9 | புறா | 11,56 |
| 10 | மயில் | 27,33,36,55,56,57,108,128,137 |
| 11 | வண்டு | 1,17,26,28,32,33,34,35,36,45,64,74,77,79,80,85,92,93,98,106,118,119,123,131,134 |

அகநானூற்றில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1. | அசுணம் | 88 |
| 2. | அன்னம் | 34,234,279,320,334 |
| 3. | அன்றில் | 50,120,260,305,360 |
| 4. | இதல் | 133,387 |
| 5. | ஈயல் | 8,394 |
| 6. | காக்கை | 170,313,319,327 |
| 7. | கிளி | 12,28,32,37,38,49,118,126,192,194,242,302,324,369 |
| 8. | குயில் | 25,97,229,237,279,293,317,341,355 |
| 9. | குருகு | 13,40,55,100,141,145,176,178,190,217,226,235, 260,273,276,300,306,360 |
| 10. | குருவி | 303 |
| 11. | கூகை | 19,89,148,158,283 |
| 12. | கொக்கு | 120,290,346, |
| 13. | சிச்சிலி | 106,286 |
| 14. | சேவல், கோழி | 87,277 |
| 15. | பருந்து | 3,19,21,27,31,33,44,51,76,79,81,97,111,117,161, 175,193,215,285,291,297,299,342,363,375,381,397 |
| 16. | புறா | 47,167,254,271,287,307 |
| 17. | பூழ் | 63,103 |
| 18. | மயில் | 15,63,69,82,85,108,145,149,152,158,117,194,198,242, 249,266,272,281,304,334,344,352,358,368,369,378,39 2,393 |
| 19. | மின்மினி | 72,291, |
| 20. | வண்டு | 1,4,22,38,40,46,59,71,74,78,82,89,102,104,108, 124,128,130,131,132,136,138,145,148,149,152, 159,161,164,166,170,180,183,184,191,198,204, 207,213,218,233,225,231,234,240,242,244,245, 250,257,260,262,269,277,290,291,298,302,304, 317,319,324,332,335,348,355,360,368,370,379,388 |
| 21. | வாவல் | 244 |
| 22. | வானம்பாடி | 67 |

## புறநானூற்றில் பறவைகள் பற்றிய தரவுகள்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1. | அன்னம் | 67,128 |
| 2. | ஆந்தை | 170,238,240,364 |
| 3. | இதல் | 319,320 |
| 4. | ஈசல் | 51,119 |
| 5. | கம்புள் கோழி | 291,297 |
| 6. | காக்கை | 238,342,362 |
| 7. | கிளி | 138,395 |
| 8. | குன்றக்குருவி | 19 |
| 9. | கூகை | 238,261,356,359,370 |
| 10. | கொக்கு | 277,342,395,398 |
| 11. | கோட்டான் | 280 |
| 12. | கோழி | 28,52,320,326,383,395,398 |
| 13. | தூக்கணங்குருவி | 225 |
| 14. | நாரை | 24,209,351,354,384 |
| 15. | நீர்க்கோழி | 395 |
| 16. | பருந்து | 3,43,62,64,150,179,224,269,271,370,373 |
| 17. | புறா | 34,39,43,46,319 |
| 18. | புதுப்புள் | 20,68 |
| 19. | குறும்பூழ் | 214,321 |
| 20. | பொகுவல் | 238 |
| 21. | மயில் | 13,50,56,60,116,120,127,133,141,146,252,260,264, 318,344,373,395 |
| 22. | மனையுறைக்குருவி | 318 |
| 23. | வண்டு | 22,24,65,69,93,174,227,244,261,263,280,308,338 |
| 24. | வானம்பாடி | 198 |

## பத்துப்பாட்டு நூல்களில் உள்ள பறவைகள் பற்றியதரவுகள்

### திருமுருகுஆற்றுப்படை

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | கூகை | 49 |
| 2 | கோழி | 210,219,311 |
| 3 | மயில் | 122,205,210,247,310 |
| 4 | வண்டு | 43,76,199,203 |

### பொருநர்ஆற்றுப்படை

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | காக்கை | 184 |
| 2 | கிளி | 34 |
| 3 | குருகு | 204,225 |
| 4 | கூகை | 210 |
| 5 | கோழி | 222,223 |
| 6 | மயில் | 47,190,212 |
| 7 | வண்டு | 39,97,211 |

### சிறுபாண்ஆற்றுப்படை

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | அன்னம் | 146 |
| 2 | குயில் | 4 |
| 3 | மயில் | 16,85,165,264 |
| 4 | வண்டு | 24,77,87 |

பெரும்பாண்ஆற்றுப்படை

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | கிளி | 227,300 |
| 2 | குயில் | 374 |
| 3 | குருகு | 376 |
| 4 | குறும்பூழ் | 203 -205 |
| 5 | கோழி | 52,299 |
| 5 | பருந்து | 117 |
| 6 | புறா | 439 |
| 7 | மயில் | 331,495 |
| 8 | வண்டு | 385,481 |

முல்லைப்பாட்டு

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | மயில் | 84 |
| 2 | வண்டு | 8 |

மதுரைக்காஞ்சி

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | அன்னம் | 386,676 |
| 2 | கிளி | 291 |
| 3 | குருகு | 268,674 |
| 4 | கூகை | 170 |
| 5 | கோழி | 673 |
| 6 | பருந்து | 231,502 |
| 7 | மயில் | 333,418,608,675,706 |
| 8 | வண்டு | 253,475,566,574,596,655,684,700 |

நெடுநல்வாடை

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | அன்னம் | 92,132 |
| 2 | குருகு | 17 |
| 3 | கொக்கு | 15 |
| 4 | புறா | 45 |
| 5 | மயில் | 99 |
| 6 | வண்டு | 33 |

குறிஞ்சிப்பாட்டு

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | அன்றில் | 219 |
| 2 | கிளி | 44,101 |
| 3 | மயில் | 169,250 |
| 4 | வண்டு | 111,148 |

பட்டினப்பாலை

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | கிளி | 150,264 |
| 2 | குயில் | 55 |
| 3 | கூகை | 258,268 |
| 4 | கோழி | 23,75 |
| 5 | பருந்து | 233 |
| 6 | புறா | 58 |
| 7 | மயில் | 149 |
| 8 | வானம்பாடி | 3,4 |

மலைபடுகடாம்

| வ.எண் | பறவைகள் பெயர் | பாடல் அடிகள் |
|---|---|---|
| 1 | கிளி | 329 |
| 2 | கோழி | 510 |
| 3 | பருந்து | 147,489 |
| 4 | மயில் | 44,235,509 |
| 5 | வண்டு | 30,56,466,486 |

## இலக்கியங்களில் காணப்படும் பறவைகளின் பெயர்ப் பட்டியல்

| வ.எண் | இலக்கியப் பெயர் | தற்போதையப் பெயர் | ஆங்கிலப் பெயர் |
|---|---|---|---|
| 1. | அன்றில் | வக்கா | Night Heron |
| 2. | அன்னம் | வெள்ளைக் காட்டுவாத்து | Wild ducks |
| 3. | ஆண்டலை | காலன் கோழி | South Indian brown hawk owl |
| 4. | ஆந்தை | கோட்டான் | The spotted owlet |
| 5. | இதல் | வரகுக்கோழி (சருகுக்கோழி) | The red spurfowl |
| 6. | உள்ளு | உள்ளான் | The common snipe |
| 7. | ஊமன் | ஊமைக் கோட்டான் | The brown fish owl |
| 8. | எருவை | பிணந்தின்னிக் கழுகு | The black vulture |
| 9. | எழால் | வல்லூறு | Shaheen falcon |
| 10. | நாரை | கொக்கு | Grey Heron |
| 11. | பெரு நாரை | மரக்கால் நாரை | Lesser adjutant stork |
| 12. | நந்துநாரை | நத்தைக்குத்தி நாரை | Open billed stork |
| 13. | செவ்வரி நாரை | செங்கால் நாரை | Painted stork |
| 14. | செங்கால் நாரை | வெள்ளை நாரை | The white stork |
| 15. | பூ நாரை | துடும்ப நாரை(அ) கோணமூக்கு நாரை | Flamingo |
| 16. | குருகு | கூழைக்கடா | Gray pelican |
| 17. | கருங்கால்வெண்குருகு | நெடலை | Large Egret |
| 18. | சிறு வெள்ளங்குருகு | சிறிய வெள்ளைக் கொக்கு | Little Egret |
| 19. | பெருங்குருகு | மாட்டுக் கொக்கு | Blacknecked stork |
| 20. | வெள்ளங்குருகு | வெள்ளைக் கொக்கு | Medium Egret |
| 21. | காக்கை | காக்கா | The house crow |
| 22. | கானக்காக்கை | ஆண்டங்காக்கா | The jungle crow |
| 23. | சிறுவெண்காக்கை | ஆற்றுக்குருவி | Seagull |
| 24. | நீர்க்காக்கை | கடல்காக்கா | The little cormorant |
| 25. | கம்புள் | சம்பங்கோழி | The white- breasted waterhen |
| 26. | மனைக்கோழி | வீட்டுக்கோழி | The common fowl |
| 27. | கானங்கோழி | காட்டுக்கோழி | Grey jungle fowl |
| 28. | தாமரைக்கோழி | அல்லிக்குருவி | Pheasant – tailed jacana |
| 29. | நீலக்கோழி | ஜம்புக்கோழி | The purple moorhen |
| 30. | நீர்க்கோழி | தண்ணீர்க்கோழி | The Indian moorhen |
| 31. | கொக்கு | நுாரை | Pond Heron |
| 32. | சில்லை | சில்லித் தாரா | Whistling teal |
| 33. | பூணி | செண்டு வாத்து | Comb duck |
| 34. | கோகம் | துாரா | Brahminy duck |
| 35. | குளிவை(ஊரல்) | முக்குளிப்பான் | Little grebe |

